# ஞானவாசிட்டம்
# ஒரு திறனாய்வு

டாக்டர் சு. தங்கத்துரை,
*தமிழ் விரிவுரையாளர் (முதுநிலை),*
*திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி,*
*விருத்தாசலம் - 606 001.*

**சுப்பையா பதிப்பகம்**
**1/21. மேலக்கிருஷ்ணன் புதூர்,**
**பள்ளம்—629 601,**
**கன்னியாகுமரி மாவட்டம்,**

This Book is published with the Financial Assistance of TIRUMAALAI TIRUPATI DEVASTHANAMS under their scheme [illegible] Publications [illegible]

## BIBLIOGRAPHICALDATA

| | | | |
|---|---|---|---|
| 1. | Title of the Book | . | Critical Study of Gnanavacittam |
| 2. | Author | : | Dr. S. Thangathurai |
| 3. | Language | : | Tamil |
| 4. | Edition | : | First |
| 5. | Date of Publication | : | December 1994 |
| 6. | Copyright holder | : | Mrs. Rajakasthoori |
| 7. | Paper used | : | 14 2 Kg Demmy |
| 8. | Size of the book | : | 21 x 14cm. |
| 9. | Printing types used | : | 10,12 point. |
| 10. | Number of Pages | : | 332 |
| 11. | Number of Copies | : | 1000 |
| 12. | Printer | : | Gajendra Printers<br>57, South Car Street<br>Chidambaram. |
| 13. | Binding | : | Section Binding |
| 14. | Cover design | . | Dr. P.P. Thambi |
| 15. | Price | : | Rs. 60-00 |
| 16. | Publiser | : | Subbiah Pathippagam<br>1/21. Melakrishnanputhoor,<br>Pallam-629 601<br>Kanyakumari District. |
| 17. | Subject | : | [illegible] |
| 18. | Summery | | Critical Study |

# சுருக்க விளக்கக்குறிப்புகள்

| | | |
|---|---|---|
| அயித். | — | அயித்தவர்கதை |
| அருச். | — | அருச்சுனன்கதை |
| இட்சு. | — | இட்சுவாகுகதை |
| உ.ஆ. | — | உரை ஆசிரியர் |
| உ.த். | — | உத்தாலகன்கதை |
| உபசா. | — | உபசாந்திப்பிரகரணம் |
| க. க. | — | கலைக்களஞ்சியம் |
| கற். | — | கற்கடிகதை |
| காதி. | — | காதிகதை |
| கு.ஆ. | — | குறிப்பு ஆசிரியர் |
| குறள். | — | திருக்குறள் |
| கை.ந. | — | கைவல்லிய நவநீதம் |
| கை.ந.ச.தெ.ப. | — | கைவல்லிய நவநீத சந்தேகம் தெளிதல் படலம் |
| கை.ந.த.வி.ப. | — | கைவல்லிய நவநீத தத்துவ விளக்கப் படலம் |
| கை.ப | — | கம்பராமாயண பாலகாண்டக்கையடைப் படலம் |
| சத. | — | சதவுருத்திரர் கதை |
| சனக. | — | சனகராசன் கதை |
| சிகித். | — | சிகித்துவசன் கதை |
| சித். | — | சித்தன் கதை |
| சிலை. | — | சிலைக்கதை |
| சுக். | — | சுக்கிரன்கதை |
| சுகர் | — | சுகர் கதை |
| சுரகு | — | சுரகு கதை |
| சூத். | — | சூத்திரம் |
| ஞா. | — | ஞானவாசிட்டம் |
| ஞான. | — | ஞானவின் மகன் கதை |
| தாசூ. | — | தாசூரன்கதை |
| தாம. | — | தாமவியாளகடர் கதை |
| திதி. | — | திதிப்பிரகரணம் |

திதி. கசன். — திதிப்பிரகரண கசன் கதை
திரு. — திருமந்திரம்
தேவ. — தேவ பூசை கதை
நா.தி.பி. — நாலாயிரதிவ்வியப்பிரபந்தம்
நிரு. — நிருவாணப்பிரகரணம்
நிரு.கசன். — நிருவாணப் பிரகரண கசன் கதை
ப.ஆ. — பதிப்பாசிரியர்
ப. — பக்கம்
பக். — பக்கங்கள்
ப.கீ. — பகவத்கீதை
பகீர. — பகீரதன்கதை
பாச. — பாசவிபாசன்கதை
பாலன். — பாலன்கதை
பிரக. — பிரகலாதன் கதை
புசுண். — புசுண்டன் கதை
புண். — புண்ணிய பாவனன் கதை
பொ.ப.ஆ. — பொதுப்பதிப்பாசிரியர்
மலை. — மலையாளம்
மலை.வைரா. — மலையாள வைராக்கியப் பிரகரணம்
மலை.ஜகத். — மலையாள ஜகத்தோச பிரகாசம்
மனத். — மனத்தின் கதை
மாவலி. — மாவலிகதை
மானு — மானுவேடன் கதை
மித். — மித்தையா புருடன்கதை
முமுட். — முமுட்சுப்பிரகரணம்
மொ.பெ. — மொழிபெயர்ப்பாசிரியர்
லீலை. — லீலை கதை
வஞ்ச. — வஞ்ச வித்திரன் கதை
வி.உ. — விளக்க உரையாசிரியர்
விரத. — விரத சூலை கதை
வில்வ — வில்வபலக்கதை
வீத. — வீதகவ்வியன் கதை
வீம. — வீமபாசத்திடர் கதை
வேதாள. — வேதாளகதை
வைரா. — வைராக்கியப் பிரகரணம்

# பொருளடக்கம்

# நன்றியுரை

கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் 'ஞானவாசிட்டம்-ஒரு திறனாய்வு' என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி தந்ததோடு, தானே எனக்கு இறுதிவரை வழிகாட்டியாகச் செயல்பட்டு இயன்ற உதவிகள் அனைத்தும் செய்து தந்தவர் மறைந்த பேராசிரியர், தமிழ்ச் சான்றோர் டாக்டர் மா. இளையபெருமாள் எம்.ஏ.,எம்.லிட்., பிஎச்.டி., அவர்கள்.

ஆய்வின் போது எழுந்த ஐயங்களை அகற்றி, ஆய்வேட்டை கொடுக்கும் காலத்தில் வழிகாட்டியாக இருந்தவர் பேராசிரியர் டாக்டர் க. சுப்பிரமணியம் எம்.ஏ.,பிஎச்.டி., அவர்கள்.

ஞானவாசிட்ட நூலை எனக்கு அறிமுகப்படுத்தி, ஆய்வுக்கு பலவகையில் உதவியவர் எனது ஆசிரியர் திரு. மா. ஈஸ்பரதாஸ் எம்.ஏ., அவர்கள்.

இந்த ஆய்வேடு நன்முறையில் அமைய உதவியவர் எனது நண்பர் டாக்டர் சு. அழகேசன் எம்.ஏ.,பிஎச்.டி. அவர்கள்.

மலையாள மொழி நூற்களிலுள்ள சில பகுதிகளை மொழி பெயர்த்து தந்தவர் டாக்டர் பி. டாக்டர் நசீம்தின், எம்.ஏ., எம்.ஃபில்.,பிஎச்.டி அவர்கள்.

தெலுங்கு மொழியிலுள்ள நூலைத்தந்துதவி, மொழி பெயர்த்துத் தந்தவர் டாக்டர் என். பக்தவச்லரெட்டி, எம்.ஏ., பிஎச்.டி., அவர்கள்.

சமஸ்கிருத மொழியிலுள்ள சந்தேகங்களைத் தெளியச் செய்து, பல நூற் செய்திகளை மொழிபெயர்த்துத் தந்தவர் திரு. கொ. இராதாகிருஷ்ணன் எம்.ஏ., எம்.ஃபில்., அவர்கள்.

ஆய்வுகாலத்து எனக்குப் பல்லாற்றானும் உதவியவர்கள் மைத்துனர் திரு. த. பாலக்கிருஷ்ணன்; பேராசிரியர்கள் டாக்டர் கி. நாச்சிமுத்து எம்.ஏ., பிஎச்.டி., டாக்டர் ஜேம்ஸ் ரெனால்டு டேனியல் எம்.ஏ., பிஎச்.டி, டாக்டர் வே. பால்ராஜ் எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி., திரு. பி. கருப்பசாமி எம்.ஏ., எம்.ஃபில்.;

நண்பர்கள் அ. நடேசன் எம்.ஏ., எம்.ஃபில்., டாக்டர் பொன். கோவிந்தசாமி எம்.ஏ., எம்.ஃபில், பிஎச்.டி, சி. தாமோதரன் எம் ஏ.,எம்.ஃபில் ,பி.எட். போன்றோர்.

ஆய்வேட்டினைச் செம்மையுறத் தட்டச்சு செய்தவர் டாக்டர் ஜே. ஸ்டீபன்சேம் எம்.ஏ., எம் ஃபில்., பிஎச்.டி.

அணிந்துரை வழங்கியவர் எங்கள் துறைத்தலைவர் திரு. ச. குறிஞ்சிச்செல்வன் எம்.ஏ.,எம்.ஃபில். அவர்கள்.

வாழ்த்துரை வழங்கிய திருமுதுகுன்றம் உயர்திரு. பல்லடம் மாணிக்கம் அவர்கள்.

நூலின் அட்டைப்படத்திற்கு உதவியவர் டாக்டர் ப. ப. தம்பி எம்.ஏ., எம்ஃபில்., பிஎச்.டி. அவர்கள்.

நூலாக்கம் பெறும் காலத்தில் உதவியாக இருந்தவர்கள் டாக்டர் சி. மணிகண்டராமன் எம்.ஏ., பிஎச்.டி., எனது மாணவர்கள் கி. ஈஸ்வரன் I எம்.ஏ., அ இரத்தினம் II எம்.ஏ., அ. நேருஜி II எம் ஏ, பெ. சிவக்குமார் I எம்.ஏ.

இவர்கள் அனைவருக்கும்.

ஆய்வேட்டினைப் புத்தகமாக வெளியிட அனுமதி தந்த கேரளப் பல்கலைக் கழகத்தார்க்கும்.

நூல் வடிவம் பெற பொருள் உதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார்க்கும்.

நூலை நன்முறையில் அச்சிட்டுத்தந்த சிதம்பரம், கஜேந்திரா அச்சகத்தின் உரிமையாளர்க்கும், மேலாளர்க்கும், உதவியாளர் களுக்கும்.

நூலினை வெளியிட முன்வந்த சுப்பையா பதிப்பகத்தின் உரிமையாளருக்கும்.

இன்னும் என்னால் பெயர் சுட்டப்படாது எனக்கு உதவியும் ஆசியும் நல்கிய பெரியவர்கள், என் குடும்பத்தார், நண்பர்கள், ஆய்வு செய்ய அனுமதி தந்து மூன்று ஆண்டு காலம் உதவிப் பணமும் தந்த கேரளப் பல்கலைக் கழகத்தார்க்கும் என் நெஞ்சார்ந்த நன்றி!

ச. தங்கத்துரை

# அணிந்துரை

பேராசிரியர் சி. குறிஞ்சிச் செல்வன்,
எம்.ஏ., எம்.பில்.,
தமிழ்த்துறைத் தலைவர்,
திரு கொளஞ்சியப்பர் அரசு கலைக்கல்லூரி,
விருத்தாசலம் – 606001.

அறிவியலின் வியத்தகு வளர்ச்சியானது பரந்து விரிந்த உலகத்தினை மனிதனின் வாயிற்படிக்கு அழைத்து வந்து காட்டிக் கொண்டிருக்கும் காலம் இது. வானொலி, தொலைக் காட்சி, தொலைபேசி, தொலைநோக்குப்பேசி என்றின்னவாறு அறிவியல் கண்டுபிடிப்புகளை மனித மூளைகள் ஈன்றெடுத்து வண்ணம் கொள்ளின. நிலவுத்தரையை ஏவுகணைப் பயணத்தால் மனிதக் கால்களை மிதித்துப் பார்க்கின்றன. கோடிக்கணக்கான கல்தொலைவுக்கு அப்பால் சுழலும் விசைப்பொறியைத் தரைக் கட்டுப்பாட்டுத் தளத்திலிருந்தே இயக்கவும் செப்பனிடவும் மனித அறிவுக்கு வழிகள் தெரிகின்றன, புரிகின்றன. இன்னும் எத்தனையோ வியத்தகு கணிப்பொறிகளைக் கண்டறிந்த தன் முனைப்பால் மனித மனம் பித்தாகித்திரிகின்றது. ஆனால் அத்தனையும் கண்டறிந்த அறிவுச் செருக்கால்,

> 'எல்லைத் தகராறா? எம்மண்ணா? உன் மண்ணா?
> நில் துப்பாக்கிக் குண்டு நீதி உரைக்கட்டும்' என்று

மனித இரத்தத்தை மண்ணில் சிந்த விட்டுச் சிரிக்கிறது மனித மனம்.

அறிவியலின் வளர்ச்சி மனிதனை மூடனாக்கிக் கொண்டிருக்கின்றது. அன்பை—அருளை அவன் அகத்திலிருந்து சுரண்டிக் கொண்டிருக்கின்றது. இன்று வையமெங்கும் தலை விரித்தாடும் வன்முறைக்கு அன்பின் வறட்சியே காரணம் என்பது அனைவர்க்கும் புரிகின்றது.

'தனி மனிதன் நான்' என்னும் உணர்ச்சி மனித மூளையை ஆளத் தொடங்கி விட்ட காரணத்தால் மனித சமுதாயம் இன்றைக்கும் போரிலும் பகையிலும் பொறாமையிலும் தப்பெண்ணச் செயல்களிலும் மிகுந்து புரண்டு நலிந்துக் கொண்டிருக்

கின்றது, தடம் மாறித் தன்னைத்தானே அழித்துக் கொண்டிருக் கின்றது. இத்தகைய தவிப்பையும் அழிவையும் தடுக்க வழி என்ன?

உலகை இறையாகக் கண்டு அந்த உலகத் தொண்டே இறைவழிபாடாகக் கொண்டு தன்னைப் போல் அன்பில் மன்னுயிரைப் பேணிக் காத்து அவ்வன்பிலே ஆண்டவனைக் காண்பதற்கு வழி என்ன?

அதற்கு ஒரே வழி, 'சமயம் என்பது தான்'. நம் முன்னோர் கள் கரடுமுரடான உள்ளத்தைப் பக்குவப் படுத்தி அன்பின் ஊற்றுக் களமாக அதனைப் பண்படுத்தி வாழவும் வாழ்விக்கவும் கண்ட வழியன்றோ அது. சமயம் என்பது பண்படுத்தல் என்பது தானே.

சமுதாய வாழ்வின் அடிப்படையாக சமயம் இருந்தவரைக்கும் அன்பின் ஆட்சி நிலைத்து நின்றது. இந்த அடிப்படை ஆட்டம் காணத் தொடங்கி விட்டதால் அன்பு வறண்டு கொண்டிருக் கிறது. அறிவு கொழுத்துத்திரிகிறது. மனம் செருக்கிச் சரிகிறது.

மனத்தின் இந்தச் சரிவினைப் போக்கிட வழிகாட்டுவன சமய அறிஞர் தம் அறநூல்களே யாகும். ஞானத்தை-மெய்யறிவை — மனவடக்கத்தைத் தருபவை அவையேயாகும்.

> 'தானற நின்ற இடம்—அகப்பேய்ச்
> சைவம் கண்டாயே'

என்று அகப்பேய்ச் சித்தர் அகங்காரம் அழிந்த மனத்தில் அன்பு செழித்திடும் உண்மையைப் பேசுகிறார்.

கி.பி. 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த விரை. ஆளவந்தார் என்னும் முனிவர் படைத்த தமிழ் ஞானவாசிட்டம் என்னும் நூல் மனவடக்கத்தையே மையமாக கொண்டு விளங்குகின்றது.

என்னருமை நண்பர் முனைவர் சு. தங்கத்துரை அவர்கள், "ஞானவாசிட்டம் - ஒரு திறனாய்வு" என்னும் முனைவர் பட்ட ஆய்வேட்டினை இப்போழுது (1994) நூலாக வெளியிடுகின்றார்.

வால்மீகி முனிவர் வடமொழியில் தந்த யோகவாசிட்டத்தை காசுமீரதபண்டிதர் அபிநந்தன் எச்பார் லகுயோக வாசிட்டம் என்னும் பெயரில் சுருக்கித் தந்தார். வீரை. ஆளவந்தாரின் தமிழ் ஞானவாசிட்டம் என்பது லகுயோக வாசிட்டத்தின் தமிழாக்கமாகும். ஞானவாசிட்டம் ஆறு பிரகரணங்களைக் கொண்டுள்ளது. இரண்டாம் பிரகரணத்தைத் தவிர பிற பிரகரணங்களில் முப்பத்தேழு கதைகளின் வாயிலாக வீரை. ஆளவந்தார், வீடுபேறு, மனவமைதி, கவலையின்மை, இல்வாழ்வின் பெருமை, நல்லாட்சிச் சிறப்பு போன்ற நெறிகளை விளக்கியுள்ளார்.

இராமனுக்கு வசிட்டர் மெய்யறிவு பெறும் வண்ணம் விளக்கவுரைகளாகவே இவையனைத்தும் காணப்படுவதால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்றும், தெலுங்கு மலையாள மொழிகளில் ஞானவாசிட்டம் படைக்கப்பட்டிருப்பினும் இவற்றுக்கெல்லாம் முற்பட்டது தமிழ் ஞானவாசிட்டம் என்று தமிழ்ச் சொல்லாட்சியை வைத்து முனைவர் சு. தங்கத்துரை முதல் இயலில் ஆய்ந்துரைத்திருப்பதும் பாராட்டுக் குரியவையாகும்.

அறிஞர் சு. தங்கத்துரை அவர்கள் 'ஞானவாசிட்டக் கதைகள்' என்னும் இரண்டாம் இயலில் 37 கதைகளை வகைப்படுத்தி ஒவ்வொரு கதையும் உணர்த்தும் செய்திகளைத் தொகுத்து விளக்கியுள்ளார்.

"மனமே உலகம்; மனம் தான் எல்லாவற்றிற்கும் காரணம்; மனம் அகங்காரத்தில் அழுந்துகின்ற போதே துன்பங்கள் தோன்றுகின்றன. மனத்தைக் கட்டுப்படுத்தி விட்டால் மாயை விலகும். அகங்காரம் நீங்கினால் ஞானம் ஏற்படும். ஞானமே தெய்வம்," என்று மனத்தை அடக்கி மெய்யறிவு பெறும் வழிகளை ஞானவாசிட்டத்தின் வாயிலாகச் சுருங்கச் சொல்லிச் செல்கின்றார் ஆசிரியர். கடல் போல விரிந்துகிடக்கும் தத்துவக் கருத்துகளை மானிடக் குழந்தைகளின் 'பிஞ்சு' வாயுள் பாலடையில் வைத்துப் புகட்டும் தாயாகிச் சிறக்கின்றார் தங்கத்துரையார்.

'ஞானவாசிட்டக் கதைச் செய்திகள்' என்னும் மூன்றாம் இயலில் ஞானவாசிட்டத்தால் அறியும் பொதுச் செய்திகளைப்

புலப்படுத்திப் 'பிரம்ம' நிலையை அடைவதற்குரிய பல கொள்கைகளுக்கு வழி வகுக்கிறது ஞானவாசிட்டம் என்று நிறுவியுள்ளார் ஆசிரியர். ஞானவாசிட்டத்தின் எல்லாக் கதைகளுமே ஞானம் பற்றி பேசுகின்றன என்பதை தெளிவு படுத்தியுள்ளார்.

'இறந்தவர்கள் அவர்களின் எண்ணங்களைப் போல பிறப்பார்கள்'' என்பதற்கு லீலை கதையை எடுத்துக் காட்டும் ஆசிரியர்,

''சாதல் அஞ்சேன்; அஞ்சுவில் சாவின்
பிறப்புப்பிறிதாகு வாயின்
மறக்குவென்கொல் என் காதலன் எனவே'' என்று தலைவனைப் பிரிந்த நற்றிணைத் தலைவியின் அவலத்தை வெளிப்படுத்திடும் ஆற்றலுடையவரெனினும் விரிவஞ்சி விட்டார் போலும்.

''மனமே எல்லாவற்றிற்கும் அடிப்படை'' என்னும் ஞானவாசிட்டச் சிந்தனையை,

''தீதும் நன்றும் பிறர்தரவாரா''

என்னும் கணியன் பூங்குன்றனாரின் திறவோர் காட்சியில் தெளிந்த அனுபவத்தோடு ஒப்பிட்டுப் பார்த்து மகிழலாம். அவ்வாறே, ''தான் என்கின்ற அகங் காரத்தை நீக்கித் தானாக விளங்குபவர்களே பெரியோராவார்'' என்பதைப் புறநானூற்றுப் புலவன் காட்டும் ''ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோருடன்'' இணைத்துப் பார்த்து இன்புறலாம்.

''ஞானவாசிட்டத்தில் தத்துவங்கள்'' என்னும் நான்காம் இயலில் தத்துவம் என்னும் சொல்லின் பொருளைப் பலவாறு ஆராய்ந்து, ''உண்மையை அறிதல்'' என்று குறிப்பிடுவதே பொருத்தமாகும் என்று எழிலுற எடுத்துரைத்துள்ளார் நூலாசிரியர்.

இறை, ஆன்மா பற்றிய ஒருமைக் கொள்கையே அத்வைதத்தின் அடிப்படையாகும்.

''பிரம்மம் உண்மையான பொருள், இந்த உலகம் ஒரு தோற்றமே, ஒவ்வோர் ஆன்மாவும் பிரம்ம தான், வேறொன்றுமில்லை. என்னும் சங்கரரின் அத்வைத விளக்கத்தை நூலாசிரியர்

குறிப்பிட்டு ஞானவாசிட்டம் இந்தத் தத்துவத்தின் விளக்கப் படைப்பே யாகுமென்று விரிவாக ஆராய்ந்துள்ளார்.

'ஞானவாசிட்டத்தில் இலக்கிய நயங்கள்' என்பதை இறுதி இயலாக நூலில் ஆசிரியர் அமைத்துள்ளார். "கருத்து, உணர்ச்சி கற்பனை வடிவம்" என்பன இலக்கிய நயங்களைக் கண்டறியும் அளவு கோல்கள் என்பதை முனைவர் சு. தங்கத்துரை எடுத்துரைத்து "ஞானவாசிட்டம் ஓர் அறிவுறுத்துகின்ற நூலாகை யால் உணர்ச்சி கற்பனை ஆகிய இரண்டும் குறைவாகவே காணப் படுகின்றன. கருத்துச் செறிவு வடிவம் சிறப்பாக அமைந்துள்ளன" என்கிறார்.

"உயிரை எருதாக உருவகப்படுத்தியுள்ள கற்பனைத்திறன் போற்றத் தக்கதாக உள்ளது. என்பதை நூலாசிரியர்,

"ஆசைவன் பாசத்திரளினாற் கட்டுண்டு அரும்பிணி
யிக்கடிக்கணுங்கி
ஏசுறும் போகக் கதைகளான் மொத்துண்டு இச்சை
முட்கோலினால் உலர்ந்து
காசுறு கருமச் சேற்றிலே அழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே
சுழன்று
வீசுமா மோகத் தளிர் நிழல் துயிலும் வீரனே சீவனாம் எருது"

என்னும் ஞானவாசிட்டப் பாடலின் வாயிலாக விளக்கியுள்ளார். இவ்வாறே பிற நயங்களையும் நூலாசிரியர் ஏற்ற சான்றுகளால் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

"ஞானவாசிட்டம் முழுக்க முழுக்க நீதியைப் புகட்டுவது போல அமைந்திருந்தால் இயக்கிய நயமற்ற வறண்டபாலைவன மாகக் காட்சியளிக்கும். அதனால் தான் ஆசிரியர் தத்துவங் களைக் கூறுவது போலக்கூறி அங்க கருணனைகளையும், அன்றாடப் பழக்க வழக்கங்களிலுள்ள உவமைகளையும் கற்பனை களையும் நம்பிக்கை யூட்டும் வண்ணம் இயற்கையிறந்த நிகழச்சி களையும் புகுத்தி, பா நயங்களையும் அமைத்து மாங்குயில் கூவிடும் பூஞ்சோலையாக நூலை அமைத்துள்ளார். பாடல்கள் விரும்பிப்படிக்கும் அளவுக்கு ஏறற நயங்களைக் கொண்ட விருத்தப்பாவினால் அமைந்துள்ளன. அவை படிப்போரின் உள்ளங்களில் ஆழமாகப்பதித்து விடுகின்றன. இந்த உத்திகளை

நோக்கும் போது அளவந்தார் ஓர் இலக்கிய கர்த்தா என்பது தெளிவாகிறது'' என்பது ஞானவாசிட்டத்வைப் பற்றி முனைவர் சு. தங்கத்துரை அவர்களின் அழகான மதிப்பீடு இது. இந்த மதிப்பீட்டினையே நூலாசிரியர் சு. தங்கத்துரையார்க்கு மன நிறைவோடு இந்நூலினை ஒன்றிப் படிப்போர் உவந்து வழங்குவர் என்மது என்றன் உள்ளங்கிளர்ந்து வரும் உண்மை யுரையாகும். சமயப்பனுவல்களைத் தாமரையிலைத் தண்ணீராய் பட்டும் படாதும், தொட்டும் தொடாதும் பெயரளவில் படித்து நடிக்கும் இருபதாம் நூற்றாண்டின் தடுமாற்றச் சமுதாயம் இந்நூலினைச் சர்க்கரையும் பாலுமாய்க் கலந்து படித்து உடலும் உயிரும் ஒரு சேர உவந்து மகிழுமென்று நம்புகின்றேன்.

'பிறிதின்நோய் தன்நோய் போல் போற்றிரும் அறிவுப் பயனைப் பெற்று அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் நான்கினையும் உள்ளத்திலிருந்து முற்றும் விலக்கி மனத்தை அறமும் அடக்கமும் நிறைந்த கோயிலாக்கி வையத்துள் வாழ் வாங்கு வாழ்ந்து சிறக்கும் பேரின்பப் பேற்றினை ஞான வாசிட்டம் தாங்கிநிற்கும் உண்மையை முனைவர் சு. தங்கத் துரையின் ஆய்வு வெளிப்படுத்தியுள்ளமையை நெஞ்சினிக்கப் பாராட்டுகின்றேன்.

மனம் போனபோக்கெல்லாம் சென்றழியும் மனித இனம் உய்வுபெற இத்தகைய நூல்களைத் தொடர்ந்து படைத்திட இறையருள் பழுத்திடவும் நிறைபொருள் செழித்திடவும் நெஞ்சினிக்க வாழ்த்தி அமைகின்றேன்.

அன்பன்,
சி. குறிஞ்சிச் செல்வன்.

# 0. முன்னுரை

## 0.1. ஆய்வுப் பொருள்:

'ஞானவாசிட்டம் ஒரு திறனாய்வு' என்ற தலைப்பை ஆய்வுப் பொருளாகக் கொண்டு இந்த ஆய்வு செய்யப்படுகின்றது.

## 0.2. ஆய்வின் நோக்கம்.

தமிழாய்வு பல்வேறு நிலைகளில் மிகவேகமாக முன்னேறிக் கொண்டிருக்கின்ற இந்தக் காலக்கட்டத்தில், தமிழ் இலக்கிய உலகிற்கு நன்கு அறிமுகமாகாத இலக்கியங்கள் இன்னும் பல உள்ளன. அவற்றைத் தேடிப் பிடித்து வெளிக் கொணரும் முயற்சி தமிழ் இலக்கிய உலகிற்கு அறிஞர்கள் செய்யும் அரிய தொண்டாக விளங்கும். இந்த நோக்கின் விளைவாக இன்றையத் தமிழ் உலகிற்குச் சரியாக அறிமுகமாகாத ஞானவாசிட்டம் என்னும் நூலை அறிமுகப்படுத்தும் முயற்சியில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது.

ஞானவாசிட்டத்தின் பொருளமைதியின் அடிப்படையில் திறனாய்வு நோக்கிலும் ஒப்பாய்வு நோக்கிலும் மேற்கொள்ளப் படுவதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

## 0.3. ஆய்வு மூலங்கள்:

கி.பி. 1901 ஆம் ஆண்டு ஆ. எதிராஜமுதலியாரால் பதிப் பித்து வெளியிடப்பட்ட தமிழ் ஞானவாசிட்டவமல ராமாயனம் (இருபகுதிகள்) என்னும் நூல் இந்த ஆய்வுக்கு அடிப்படை மூலமாகக் கொள்ளப்படுகிறது. ஞானவாசிட்ட பிற பதிப்புக்களும் (பார்க்க : பின்னிணைப்பு: 1), பிற மொழி நூற்களும்[1], கம்ப ராமாயணம்[2], பகவத்கீதை[3], கைவல்லியநவநீதம்[4] போன்ற நூற்களும் திறனாய்வு நூற்களும் கட்டுரைகளும் இந்த ஆய்வுக்குத் துணை மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

## 0.4. ஆய்வு முன்னோடிகள்:

ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள ஞானவாசிட்டம் என்ற நூல் இதுவரை முழுமையாக ஆய்வு செய்யப்படவில்லை.

'ஸ்ரீவசிட்டபகவான் திருவாய் மலர்ந்தருளிய ஞானவாசிட்டமும், ஸ்ரீநம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திருவாய் மொழியும்' என்ற நூல் நா. மருதக்கவுண்டரால் வெளியிடப்பட்டுள்ளது. இந்த நூல் ஐம்பது பக்க அளவில் உள்ளமையால் செய்திகள் தெளிவாகக் கூறப்படவில்லை. பாடல்கள் ஒப்பீட்டு முறையில் எழுபத்திரண்டு சிறு தலைப்புக்களில் செய்திகள் கூறப்பட்டுள்ளன. ஒரே தலைப்பில் பல பிரிவுகள் காணப்படுகின்றன.

கட்டுரையாளரால் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறையின் எம்.ஃபில். பட்டத்திற்கான ஆய்விற்கு, 'ஞான வாசிட்டத்தில் தத்துவ விளக்கக் கதைகள்' (1981) என்ற தலைப்பில் ஆய்வுக் கட்டுரை ஒன்று கொடுக்கப்பட்டுள்ளது. இவை தவிர ஞானவாசிட்ட குறிப்புக்கள் சில இலக்கிய வரலாற்று நூற்களிலும்[5], கலைக் களஞ்சியத்திலும்[6], அபிதான சிந்தாமணியிலும்[7], தமிழ் நூல் விவர அட்டவணையிலும்[8], தமிழ்ப்புலவர் அகர வரிசை நூலிலும்[9] எடுத்தாளப் பட்டுள்ளமையைக் காண முடிகிறது. இந்த நூலின் மூல நூலாகிய யோக வாசிட்டத்தைக் குறித்து சில ஆய்வுகள் வெளிவந்துள்ளன.[10]

தமிழ் ஞானவாசிட்டம் முழுமையாக ஆய்வு செய்யப்படும் வகையில் இதுவே முதல் ஆய்வாகும்.

### 1.5. ஆய்வேட்டின் அமைப்பு:

இந்த ஆய்வேடு,

1. ஞானவாசிட்டம் ஓர் அறிமுகம்
2. ஞானவாசிட்டக் கதைகள்
3. ஞானவாசிட்டக் கதைச் செய்திகள்
4. ஞானவாசிட்டத்தில் தத்துவங்கள்
5. ஞானவாசிட்டத்தில் இலக்கிய நயங்கள்

என ஐந்து இயல்களாகப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது.

0.5.1.1. 'ஞானவாசிட்டம் ஓர் அறிமுகம்' என்னும் முதலியலில் நூல் பற்றியக் கருத்துக்கள், பெயர்க் காரணம், ஆசிரியர். காலம், நூல் அமைப்பு, பெருமை, பிரகரணம், உரையாசிரியர், பிறமொழிகளாகிய சமஸ்கிருதம், மலையாளம், தெலுங்கு என்ற மூன்று மொழி நூற்களில் காணப்படும் ஞானவாசிட்டக் கருத்துக்கள் போன்றவை அறிமுக நிலையில் விளக்கப்பட்டுள்ளன.

ஞானவாசிட்டத்தை அறிமுகப்படுத்தும் நோக்கத்தின் முதல் கட்டமாக இந்த இயலில் நூலின் வெளிப்படையான செய்திகள் விளக்கப்பட்டுள்ளன பிறமொழி நூற்களிலிருந்து இந்த நூல் எவ்வாறு வேறுபடுகிறது என்பது தெளிவாக்கப்படுகிறது. மூல நூலின் முழுமையான மொழி பெயர்ப்பா அல்லது எதன் மொழி பெயர்ப்பு என்ற கருத்து வெளிப்படுத்தப்படுகிறது.

0.5.1.2. இந்த நூலுக்கு முக்கியக் கருத்தாக அமைகின்ற கதைகள், 'ஞானவாசிட்டக் கதைகள்' என்ற இரண்டாம் இயலில் கொடுக்கப்பட்டுள்ளது. நூலில் உள்ள முப்பத்தேழு கதைகளும், அவற்றால் அறியலாகும் செய்திகளும் இந்த இயலில் குறிப்பிடப்படுகின்றன.

0.5.1.3. 'ஞானவாசிட்டக் கதைச் செய்திகள்,' என்ற மூன்றாம் இயலில் நால்வகை யோகம், பிறப்புக்கள், அரசு செய்திகள், இல்வாழ்க்கை, தெய்வம், அறிவுரை, பொதுச் செய்திகள் போன்றன கதைகளின் வாயிலாக உணர்த்தப் பெறும் முறையினை ஆய்கின்றது.

0.5.1.4. 'ஞானவாசிட்டத்தில் தத்துவங்கள்' என்ற நான்காம் இயல் பிரம்மம், ஞானம், மனம், சீவன்முத்தன், ஆத்மா, சங்கற்பம், குண்டலினிசத்தி, வாசனை, பந்தம், ஆசை, அகங்காரம், மாயை, உலகம், முயற்சி, இறைவழிபாடு, வீடுபேறு போன்ற நூல் குறிப்பிடுகின்ற தத்துவங்களை விளக்குகின்றது.

0.5.1.4.1 வைப்பு முறை:

எல்லாம் பிரம்ம நிலை என்பதால் பிரம்மத்தை முதலிலும், பிரம்மத்தை அடைவதற்கு நூல் குறிப்பிடும்

மூலகாரணம் ஞானம் என்பதால் அதை இரண்டாவதாகவும் ஞானத்தை அடைவதற்குப் பல கருவிகள் (வழிகள்) காணப் பட்டாலும் மனமே முக்கிய காரணமாதலால் அதை அதற்கு அடுத்தும், மனத்தை நீக்கிலவன் சீவன்முத்தன்; அவனே பிரம்ம நிலையை அடையத் தகுதியுடையவன் என்பதால் நான்கா வதாகவும், ஆத்மா முதல் முயற்சி வரை குறிப்பிடப்பட்டுள்ள பிற செய்திகள் மனத்தைக் கட்டுப்படுத்துவதற்குரிய கருவிகளாக ஆசிரியர் குறிப்பிட்டிருப்பதால் அவற்றை ஒன்றன் பின் ஒன்றாக வும், இறுதி நிலையான அத்வைத நிலையை அடைவதற்கு ஆசிரியர் குறிப்பிடும் செய்திகள் இறுதியிலும் வரிசையாக வைக்கப் பட்டு இந்த ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

0.5.1.5. 'இலக்கிய நயங்கள்' என்ற ஐந்தாம் இயலில் உணர்ச்சி, கற்பனை, வருணனை, இயற்கை இறந்த நிகழ்ச்சிகள், வடிவம் போன்ற பல நிலைகள் ஆராயச்சி செய்யப்பட்டுள்ளன.

0.6. முடிவுரைப் பகுதியில், இந்த ஆய்வில் கண்ட முடிவுகளும், இந்த ஆய்வினைத் தொடர்ந்து மேலும் மேற் கொள்ளப்பட வேண்டிய ஆய்வுகளும் சுட்டப்பட்டுள்ளன.

## 0.7. பின்னிணைப்பு:

பிற ஆய்வுகளுக்கும், ஆய்வாளர்களுக்கும் பயன்படும் வகையில் ஞானவாசிட்டத்திலிருந்து பல செய்திகள் இந்த ஆய்வின் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

0.7.1. ஞானவாசிட்ட நூலின் பிறபதிப்புக்கள்.

0.7.2. ஞானவாசிட்ட நூற் பெயரும், கருத்துக்களும் எடுத்தாளப்பட்டுள்ள நூற்களின் அட்டவணை.

0.7.3. ஞானவாசிட்ட கதைச் செய்திகளின் அடிப்படையில் அமைக்கப் பெற்றுள்ள அட்டவணைகள்.

0.7.4. நூலில் காணப்படும் உவம உருபுகளின் அட்டவணை.

## 0.8. மேற்கோள் விளக்கங்கள்:

அறிஞர்களுடைய கருத்துக்களையோ, பிறநூல் கருத்துக் களையோ மேற்கோளாகக் கையாளுகின்ற இடங்களில் மட்டும்

அந்தந்த இடங்களில் எண் இட்டு கட்டுரை இறுதியில் விளக்கம் கொடுக்கப் பட்டுள்ளது. பாடல்கள் பயன்படுத்தப்பட்டுள்ள இடங்களில் பாடல்களுக்குப் பக்கத்திலேயே அதன் விவரங்கள் அடைப்புக்குள் கொடுக்கப்பட்டுள்ளன. முதலில் பாடல்கள் கையாளப்பட்டுள்ள கதைப்பெயர்கள். நூல் இவற்றின் குறுக்க விளக்கங்களும் தொடர்ந்து பாடல் எண்ணும், வரியும் கொடுக்கப் பட்டுள்ளன.

**அடிக்குறிப்புகள்:**

1. அ. Vikari — lalamitra (Translater), The Yoga Vasishtha Maha Ramayana of Valmiki,
   Vol. I - 1976;
   Vol. II - IV — 1978 (சமஸ்கிருதம்)-

   ஆ. வரஹூர். கவிதிலகன் சாமுமேனோன், ஞானவாசிட்டம் கேரள பாஷாகானம்), 1932, (மலையாளம்)

   இ. வென்னெலக் கண்டி சுந்தரராமசர்மா, ஸ்ரீமதாந்த ராவ(ச்)சன வாசிட்டம், 1965, (தெலுங்கு).

2. வை.மு கோபாலாச்சாரியர் (ப.ஆ) கம்பராமாயணம், 1953-

3. சுவாமி சுத்பவானந்தர் (வி.உ.), ஸ்ரீமத் பகவத்கீதை, 1980.

4. தாண்டவராயமூர்த்தி சுவாமிகள், கைவல்லியநவநீதம், 1926.

5. அ. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 13ஆம் நூற்றாண்டு, 1970, ப 347.
   12ஆம் நூற்றாண்டு, 1973, பக். 758, 761, 765.

   ஆ. மு. கோவிந்தசாமி, தமிழ் இலக்கிய வரலாறு (இலக்கியத்தோற்றம்), 1969, ப. 115.

   இ. கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு (இரண்டாம் பாகம்), 1978, ப. 851.

6. கலைக்களஞ்சியம், தொகுதி 3, 1956, ப 214.
தொகுதி 5, 1958, பக். 291-293.
தொகுதி 6, 1959, ப. 372.
தொகுதி 8, 1961, ப. 579.
தொகுதி 10, 1968, ப. 48.

7. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, 1981, ப 142.

8. வெ. கண்ணையன், தமிழ்நூல் விவர அட்டவணை (முதல் தொகுதி, முதல்பகுதி), 1961, பக். 75-77.

9. சு. அ இராமசாமிப் புலவர், தமிழ்ப்புலவர் அகரவரிசை, இரண்டாம் தொகுதி, முதல்பகுதி, 1962, ப 48.

10. 1. B.L. Atrega, The Philosophy of this Yoga Vasistha, 1936.

2. T.G. Mainakar, The Vasistha Ramayana – A study, 1977.

---

# 1. ஞானவாசிட்டம் ஓர் அறிமுகம்

*1.0.* ஞானவாசிட்டத்தை அறிமுகப்படுத்தும் வகையில் இதன் பெயர்க்காரணம், ஆசிரியர், நூலமைப்பு, உரையாசிரியர், பிறமொழி நூற்களின் ஒப்பீடுகள் போன்ற செய்திகள் முதல் இயலில் விளக்கப்படுகின்றன.

## 1.1. அறிமுகம்:

ஞானவாசிட்டம் அத்வைத வேதாந்தம் பற்றிய சிறந்த நூற்களுள் ஒன்றாகும். ஞானவாசிட்டத்தின் மூலம் சமஸ்கிருத மொழியில் வால்மீகியால் எழுதப்பட்ட யோக வாசிட்டம் ஆகும். தமிழ் ஞானவாசிட்டம் மூலநூலின் முழுமையான மொழிபெயர்ப்பு அன்று. காஸ்மீரத பண்டிதர் ஸ்ரீ அபிநந்தன் என்பவரால் எழுதப்பட்ட லகுயோகவாசிட்டத்தின் மொழிபெயர்ப்பாகும். தமிழில் ஞானவாசிட்டமாக ஆக்கித் தந்தவர் வீரை ஆளவந்தார் என்னும் முனிவராகும்.

சமஸ்கிருதத்தில் சுலோக அமைப்பில் உள்ள யோக வாசிட்டத்தை தமிழில் செய்யுளாக மொழி பெயர்க்கப்பட்ட நூல் என்று ந.சி. கந்தையா பிள்ளை குறிப்பிட்டுள்ளார்[1]. ச. கந்தசாமி முதலியார் தமிழ் ஞானவாசிட்டம் சமஸ்கிருத மொழியிலிருந்து பாடல்களால் மொழி பெயர்க்கப் பட்டதால் அது வழி நூல் என்று விளக்கியுள்ளார்[2]. சமஸ்கிருத மொழியில் இலட்ச சுலோகங்களில் வால்மீகி முனிவரால் எழுதப்பட்ட யோக வாசிட்டத்தை காஸ் மீரத பண்டிதர் அபிநந்தன் லகுயோகவாசிட்டம் என ஆறாயிரம் சுலோகங்களில் சுருக்கி எழுதியுள்ளார்.[3] இந்த நூல் தமிழ், மலையாளம், தெலுங்கு போன்ற மொழிகளில் ஞானவாசிட்டம் என்ற பெயரிலும் இந்தி, உருது போன்ற மொழிகளில் யோக வாசிட்டம் என்ற பெயரிலும் வழங்கப்பட்டு வருகிறது.

ஞானவாசிட்டத்தை 'வமலராமாயணம்' என்றும் 'மகா ராமாயனம்' என்றும் 'வசிட்டராமாயனம்' என்றும் அழைக் கின்றனர்[4]. ஞானவாசிட்டம் 'ஒரு மகாகாவியம்' என்று மலையாள ஞானவாசிட்ட நூலின் முன்னுரையில் கே. பால கோபால குறிப்பு குறிப்பிட்டுள்ளார்[5]. இதனை நோக்கும்

போது இந்த நூலுக்கும் இராமாயணத்துக்கும் தொடர்பு இருக்கலாம் என்று கொள்ள முடிகிறது

தமிழ் அத்வைத வேதாந்த மடங்கள் சிலவற்றில் இந்நூலை பாடம் கேட்கத் தக்க முப்பத்திரண்டாவது நூலாகக் கொண்டிருக்கின்றனர்[6]. இன்றும், மதுரை ஸ்ரீ பிரமமாநந்த சுவாமிகள் மடத்தில் இந்த நூலை வேத பாட நூலாகக் கொண்டு தினமும் காலையில் பாடம் சொல்லிக் கொடுக்கிறார்கள்.

ஞானிகள் ஞான இரகசியங்களை உலகோர் அறிந்து கொள்ள வேண்டி வேத சாரங்களைத் திரட்டி உபநிடதமாக வழங்கியது போல் இராமாயண சாரத்தை வாசிட்டமாக வழங்கியுள்ளார் ஆசிரியர் எனச் சுந்தர மாணிக்க யோகீஸ்வரர் குறிப்பிட்டுள்ளார்[7].

## 1.2. பெயர்க் காரணம்:

இராமபிரானுக்கு ஆன்ம ஞானத்தை வசிட்டமுனிவர் அருளியதைக் கூறும் நூல் ஆதலினால் இந்த நூல் ஞான வாசிட்டம் எனப்பெயர் பெற்றது இந்த நூல் நால்வகை யோகங்களுள் ஞானமும் யோகமுமே அதிகமாகக் கூறப்பட்டுள்ளன. யோக நிலையைக் கைக்கொள்ள வேண்டுமானால் குருவின் ஞான அருளுரை வேண்டும் என்பதை இந்த நூல் வலியுறுத்தியுள்ளது. யோகத்தினால் இறைவனை அடையலாம் என்ற கருத்தை வலியுறுத்த சமஸ்கிருதத்தில் யோகவாசிட்டம் எனப் பெயர் கொடுத்திருக்கலாம் பதஞ்சலியின் யோகசூத்திரத்தில் யோகநிலையே வலியுறுத்தப்பட்டுள்ளது அத்வைத கோட்பாட்டின் படி மூலப்பொருளை அடைவதற்கு உறுதுணை செய்வது ஞானமாகும். ஞானத்தினால் இறைவனை அடைய முடியும் என இந்த நூலில் வலியுறுத்தப்படுவதாலும் வசிட்டர் இராமனுக்கு அறிவுறுத்தியிருப்பதாக அமைந்திருப்பதாலும் இந்தப் பெயர் பெற்றிருக்கலாம் என்பது தெளிவு.

## 1.3. நூல் ஆசிரியர்:

*1.3.0.* நூல் எழுதிய ஆசிரியர் பற்றிய குறிப்பு நூலில் காணப்படுவதே தகுந்த ஆதாரமாகும்.

உரைச்சிறப்புப் பாயிரத்திலும், நூலாசிரியர் மரபு கூறல் என்ற பகுதியிலும் வீரை ஆளவந்தார் ஞானவாசிட்டத்தை ஆக்கித் தந்தார் என்ற குறிப்பு உள்ளது. இதைத் தவிர நூலில் அவரது வேறு எந்த வரலாற்றுக் குறிப்பும் இல்லை.

'போதமார் முனிவன்புகழ் திரு வீரைவாழ்
மாதவப் பட்டன் வமிசத்துதித்த
ஆளவந் தானெனும் அற்புத மூர்த்தி'
(உரைசிறப்புப்பாயிரம், வரி-46-48).

ஆளவந்தார் பல காலத்திலும், பல ஊரில் வாழ்ந்ததாகவும் இருமதத்தவராகவும் இருகுலத்தவராகவும் இருந்ததாகக் குறிப்புக் கள் கிடைத்துள்ளன அவை இந்தப்பகுதியில் விளக்கப் பட்டுள்ளன.

### 1.3.1. ஆளவந்தார் பல காலத்தவர்:

1.3.1.0. ஆளவந்தார் என்னும் பெயர் கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு வரை உள்ள இலக்கிய வரலாற்றுக் குறிப்புக்களில் காணப்படுகின்றது.

1.3.1.1. அபிதான சிந்தாமணி என்னும் நூலில் யமுனைத் துறைவர் எனப்படும் ஆளவந்தார் ஒருவரைப் பற்றிய செய்தி விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது[8]. இந்த ஆளவந்தார் கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவராகக் கருதப்படுகிறார் (கலிவருடம் நாலாயிரத்து பதினேழுக்கும் மேல் பத்தாவதாண்டு ஆடிமாதம் பிறந்தவர் என்பது குறிப்பு) அவர் சிதம்பரத்தை அடுத்த வீரநாராயணபுரத்தவர். மகாபாச்ய பட்டருடன் சேர்ந்து பாடல்கள் படித்தவர். மணக்கால் நம்பிக்குப் பின் வந்த வைணவாச்சாரியர்களுள் ஒருவர். அவரது பாட்டனராகிய நாதமுனியின் கட்டளைப்படி யமுனைத் துறை கோவர்த்தனப் பெருமாளின், 'யமுனைத்துறைவர்' எனும் பெயர் இடப்பெற்றவர். அவர் காலத்து அரசரின் அவைப்புலவராக இருந்த ஆக்கியாழ் வானை இளமையிலே வாதில்வென்று, அதற்குப் பரிசிலாக அரசனிடம் இருந்து நாட்டில் பாதியும், அரசியிடமிருந்து ஆளவந்தார் என்னும் சிறப்புப் பெயரையும் பெற்றார். அரசரிடம்

இருந்து கிடைத்த நாட்டை ஆண்டுவரும்போது நாதமுனியின் வேண்டுகோளுக்கு இணங்க மணக்கால் நம்பி ஆளவந்தாரைத் திருவரங்கத்திற்கு அழைத்து வந்தார். நாதமுனிகள் கொடுத்துச் சென்ற பெருநிதியைப் பார்க்கும்படிக்கூறி அரங்கநாதனைக்காட்டி ஆட்படுத்தினார். உடனே ஆளவந்தார் துறவு பூண்டு வைணவ சித்தாந்த உண்மைகளை வெளிப்படுத்தும் தொண்டை மேற் கொண்டு திருவரங்கத்தில் வாழ்ந்து வந்தார் திருமலையாண்டான் முதலிய பல சீடர்கள் அவருக்கு இருந்தனர்.

ஆளவந்தார் இறந்தபின் இராமானுசர் அவர் பூத உடலைச் சென்று கண்டார். ஆளவந்தாரின் கைவிரல்கள் மூன்று மட்டும் மடங்கி இருக்கக் கண்டு அது பற்றி மற்றவர்களைக் கேட்டார். அவர்கள் வியாசபராசரிடத்திலே நன்றி பாராட்டும் முறையில் ஒரு சீடரை வளர்க்க வேண்டும் என்பதும் நம்மாழ்வார் திருவாய் மொழிக்கு உரை எழுத வேண்டும் என்பதும், வியாச சூத்திரங் களுக்கு வசிட்டாத்வைத பரமாக ஓர் உரை எழுத வேண்டும் என்பதும் ஆளவந்தார் விருப்பங்கள் என்றும் அவை நிறை வேறாமையால் விரல்கள் மடங்கி இருக்கின்றன என்றும் விளக்கம் கூறினார்கள். அதைக் கேட்ட இராமானுசர் அவர் விருப்பங் களைத் தாம் நிறை வேற்றுவதாக உறுதி கூறவே விரல்கள் நிமிர்ந்தன.

இந்த செய்திகள் விநோதர மஞ்சரி நூலிலும்[9] தமிழ்க் கலைக் களஞ்சியத்திலும்[10], மு. அருணாசலத்தின் தமிழ் இலக்கிய வரலாற்றிலும்[11], சிறப்புப்பெயர் அகராதியிலும்[12] காணப்படு கின்றன.

1 3.1.2. ஆராய்ச்சியாளர் ஆர். ராமானுஜாசாரியார் ஆளவந்தார்க்கு யமுனைத் துறைவன் எனவும் யமுனாச்சாரியார் எனவும் பெயர்களிருப்பதால் அவருடைய காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டு என்று குறிப்பிடப்பட்டுள்ளார்[13].

1.3.1.3 கி.பி. பதினோராம் நூற்றாண்டு வரலாற்றுக் குறிப்பில் அவர்க்கும் இராமானுசர்க்கும் உள்ள தொடர்பையும் மு. அருணாசலம், கா சு. பிள்ளை போன்றோர் குறிப்பிட்டுள்ளார் கள்[14].

1.3 1 4. மது. ச. விமலானந்தம் என்பவர் தன்னுடைய நூலில் ஆளவந்தார் கி.பி பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வீர நாராயண புரத்தில் பிறந்தவர் என்றும் திருவாய்மொழிக்கு முதன் முதலில் உரைவகுத்தவர் என்றும் குறிப்பிட்டுள்ளார்[15].

1.3 1.5. கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரலாற்றுக் குறிப்பிலும் பட்டர் பற்றிய செய்தியைக் குறிப்பிட்டுள்ளார் மூ. அருணாசலம்[16].

1.3.1.6. ச. கந்தசாமி முதலியார் விரை. ஆளவந்தார், கவிராஜ பண்டிதருடைய மகன் என்பதால் அவருடைய காலம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டு என்று குறிப்பிட்டுள்ளார்[17].

1.3 1 7. மு. சண்முகம் பிள்ளை, பி.சி. கந்தையாபிள்ளை, மு. கோவிந்தசாமி போன்றோர் ஆளவந்தார் காலம் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு என்கின்றனர்[18].

1.3.2. பல ஊரினர்:

1.3.2.0. ஆளவந்தாரின் ஊர்பற்றி மாறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன.

1.3.2.1. இராமானுஜாசாரியர், ஆளவந்தாரை சிதம்பரத்தை அடுத்துள்ள வீரநாராயணபுரத்தில் பிறந்தவர் எனக்குறிப்பிட்டுள் ளார்[19].

1.3.2.2. கா.சு. பிள்ளை, சேது நாட்டிலுள்ள வீரசோழபுரம் எனதம்முடைய ஆராய்ச்சியில் தெரிவித்துள்ளார்.[20]

1.3.2.3. ஆளவந்தார் வேம்பத்தூரில் வாழ்ந்த பார்ப்பனப் புலவர் எனத் தெரிவித்துள்ளார் ந.சி. கந்தையா பிள்ளை.[21]

1.3 2.4 சு. அ. இராமசாமிப் புலவர் ஆளவந்தாரை மதுரை மாவட்ட திருமங்கலம் தாலுகா கள்ளிக்குடியைச் சேர்ந்த வடக்கம்பட்டியில் வாழ்ந்தவர் எனக்குறிப்பிட்டுள்ளார்.[22]

### 1.3.3. இரு குலத்தவர்:

1.3.3.0. ஆளவந்தாரின் குலத்தைச் சுட்டிக்காட்டும்போது கூட திறனாய்வாளர்கள் மாறுபட்டிருப்பதைக் காணமுடிகிறது

1.3.3.1. அபிதான சிந்தாமணி, கலைக்களஞ்சியம், இலக்கிய வரலாறு போன்ற நூற்களின் ஆசிரியர்கள், ஆளவந்தாரை சிரேஷ்டகுலம், பிராமணகுலம் என்றும் பட்டர் யமுனாச்சாரியார் வழியினர் என்றும் குறிப்பிட்டுள்ளனர்[23].

1.3.3.2. அந்தணர் குலம் என்று தெரிவித்துள்ளார் ச. கந்தசாமி முதலியர்[24].

1.3.3.3. ஆளவந்தார் இராமசாமி ரெட்டியார் மகன் என சு.அ. இராமசாமிப்புலவர் குறிப்பிட்டுள்ளார்[25]

### 1.3.4. இருமதத்தவர்:

1.3.4.0. குலத்தில் மாறுபட்ட கருத்து இருப்பது போல மதத்திலும் மாறுபட்ட சிந்தனைகள் தோன்றியுள்ளன.

1.3.4.1. கலைக்களஞ்சியம் போன்ற நூற்களில் குறிப்பிட்டிருக்கின்ற கருத்துக்களை நோக்கும்போது அவர் விசிட்டாத்வைத மதத்தைச் சார்ந்தவர் எனலாம்

1.3.4.2. ஞானவாசிட்டத்தைப் பாடியிருப்பதால் அவர் ஓர் அத்வைதி எனலாம்

1.3.4.3. விசிட்டாத்வைத நோக்கில் உரை தோன்ற வேண்டும் என்ற எண்ணம் உடையவர் எனக் குறிப்பிடப்பட்டிருக்கும் செய்தியினை நோக்கும்போது எவ்வாறு அத்வைத நூலைப்பாடியிருப்பார் என்பது ஆய்வுக்குரியதாகும்.

### 1.3.5. முடிவுகள்:

1.3.5.1. ஆளவந்தாரின் காலத்தை கி பி. பதினேழாம் நூற்றாண்டின் இறுதிக்கும் பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்திற்கும் இடைப்பட்ட காலம் எனலாம்.

1.3.5.2. மதுரை மாவட்ட விரை ஊரில் வாழ்ந்தவர் எனலாம்.

1.3.5.3. அந்தணர் குலத்தவராவார்.

1.3.5.4. அத்வைத மதத்தவர் என்பது தெளிவு.

1.4. நூலின்காலம்:

1.4.0. மூலநூலைப்போன்றே ஞானவாசிட்டமும் எழுந்த காலத்தைப்பற்றிய தெளிவான வரையறை கிடைக்கப்பெற வில்லை.

1.4.1. பி. குப்புசாமி என்பவர் தமது நூலில் யோக வாசிட்டத்தின் காலம் கி.பி. ஆறாம் நூற்றாண்டு என்று குறிப் பிட்டுள்ளார்[26].

1.4.2. யோகவாசிட்டத்தைப் பின்பற்றி எழுந்த லகுயோக வாசிட்டத்தின் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்றும், யோகவாசிட்டம் வால்மீகியால் எழுதப்படவில்லை என்ற கருத்தைக் கொண்டவரும் ஆன பி. எல். ஆத்ரயா என்பவர் சமஸ்கிருத யோகவாசிட்டம் கி.பி. பத்தாம் நூற்றாண்டுக்கும் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டக் காலத்தில் தான் தோன்றிருக்கவேண்டும் என தம்முடைய ஆய்வு நூலில் குறிப்பிட்டுள்ளார்.[12]

1.4.3. டி.ஜி. மைன்கார் என்பவர் யோகவாசிட்டம் கி.பி. 1200இல் தோன்றியிருக்க வேண்டும் என தெரிவித்துள்ளார்[28].

1.4.4. இக்காலகட்டத்திற்குப் பிறகுதான் இதன் தழுவல் நூலாகிய ஞானவாசிட்டம் தோன்றி இருக்கவேண்டும்

1.4.5. திருவாய்மொழிக்கு முதன்முதலில் உரை எழுதியவர் ஆளவந்தார்தான் என்று மது. ச. விமலானந்தம் கருதுவதால் இந்த நூல் கி.பி. பதினோராம் நூற்றாண்டில் தோன்றி யிருக்கலாம்[29].

1.4.6. கி.பி. பத்தாம் நூற்றாண்டில் எழுந்ததாகக் கொள்ளப் படுகின்ற சீவகசிந்தாமணி என்னும் பெருங்காப்பியத்தில்தான் விருத்தம் என்னும் பாவினம் முதன்முதலில் எடுத்தாளப்பட்டது. சிந்தாமணிக்குப் பின்னே எழுந்த காப்பியங்களும் புராணங்களும்

விருத்தப்பாவிலே இயற்றப்பட்டுள்ளன என்பார் ரா. பி. சேதுப் பிள்ளை [30].

1.4.7. மொழிபெயர்ப்பு நூற்களும் தழுவல் நூற்களும் பிற்காலத்தில்தான் அதிகமாகத் தோன்றியுள்ளன. மேலும் இந்தநூலில் கம்பராமாயணத்தில் உள்ள அமைப்பு போன்று (பாலகாண்ட கையடைப் படலத்திலுள்ள முதல் பதினாறு பாடல் செய்திகளும் பிரிவுகளும்) சில அமைந்திருப்பதால் கம்பராமாயணத்திற்குப் பிறகுதான் ஞானவாசிட்டம் தோன்றி யிருக்கவேண்டும் கம்பராமாயணத்தின் காலத்தை கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு என்பர் [31].

1.4.8. இலக்கிய மீட்சிக் காலமாகிய கி.பி. 1400-1600இல் ஞானவாசிட்டம் முதலிய வேதாந்த நூல்கள், சைவசித்தாந்த நூற்கள் தோன்றியிருக்க வேண்டும் எனக்குறிப்பிட்டுள்ளார் எஸ் வையாபுரிபிள்ளை [32].

1.4.9. தமிழ் இலக்கிய வரலாற்று ஆசிரியர் மு. அருணாசலம் கி.பி பதினைந்தாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்று நூலில் சொருபசாரம் என்ற வேதாந்த நூலைப்பற்றிக் குறிப்பிடும் போது அதில் 'ஞானவாசிட்டக் கதைகள் அவதாரிகை' என்ற ஒரு பிரிவு இருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார் [33].

1.4.10. அவரிடம் நேரடி கடிதத்தொடர்பு கொண்டதில் ஞானவாசிட்டம் தோன்றிய காலம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதி எனத் தெரிவித்துள்ளார். அந்தக் கையெழுத்துப் பிரதியின் நகல் கட்டுரையின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது.

1.4.11. சமஸ்கிருத நூலாகிய யோகவாசிட்டப் பெருநூலைச் செந்தமிழில் விருத்த நடையில் மொழியாக்கியக் காலம் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டாக இருக்கலாம் என மு. சண்முகம் பிள்ளை போன்றோர் குறிப்பிட்டுள்ளனர் [34].

1.4.12. மலையாளத்தில் கி.பி. 1903 இலும் தெலுங்கில் கி.பி. 1940 இலும் தான் ஞானவாசிட்டம் முதன்முதலில் வெளிவந்துள்ளது தமிழில் கி.பி. 1870 இல் முதல் பதிப்பு உரையுடன் வெளிவந்துள்ளது.

1.4.13. முடிவு:

இந்தக் கருத்துக்களை நோக்கும்போது ஞானவாசிட்டம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் இறுதிக் காலத்திற்கும், கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்திற்கும் இடைப் பட்ட காலத்தில் எழுதப்பட்டிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

1.5. நூல் அமைப்பு:

1.5.0. ஞானவாசிட்டம் இரண்டாயிரத்து ஐம்பத்தைந்து விருத்தப்பாக்களைக் கொண்டது இதில் ஆறுபிரகரணங்களும் முப்பத்தேழு கதைகளும் காணப்படுகின்றன.

1.5.1. பிரகரணம் என்பது அத்தியாயம் என பொருள்படும் (பார்க்க: 1.8.. வைராக்கியப் பிரகரணம், முமூட்சுப்பிரகரணம் உற்பத்திப்பிரகணம், திதிப்பிரகரணம், உபசாந்திப்பிரகரணம், நிருவாணப் பிரகரணம் என்பன நூலில் காணப்படும் பிரகரணங் களாகும்.

1.5.2. நூலாசிரியர் கருத்துப்படி அறக்கருத்துக்களைக்கூறும் கதைகளின் எண்ணிக்கை நாற்பத்து மூன்று எனத் தெரிய வருகிறது.

> ''மோனவுண்மை மொழிந்துளவாசிட்ட
> ஞான நூற்கதை நாற்பது மூன்றுமே''
>
> (வைரா: 18.3,4)

கதை எனும் இலக்கிய மரபிற்கு ஏற்ற நிலையில் நிகழ்ச்சித் தொகுப்புகளாக வரும் கதைகள் முப்பத்தேழே உள்ளன.

| | |
|---|---|
| 1. சுகர்கதை | 20. உத்தாலகன்கதை |
| 2. ஞானவிண்மகன் கதை | 21. சுரகு கதை |
| 3. லீலைகதை | 22. பாசவிபாசன் கதை |
| 4. கற்கடிகதை | 23. வீதகவ்வியன்கதை |
| 5. அயிந்தவர்கதை | 24. புசுண்டன் கதை |
| 6. வஞ்சவிந்திரன் கதை | 25. தேவபூசை கதை |
| 7. மனத்தின் கதை | 26. வில்வபலக் கதை |
| 8. பாலன் கதை | 27. சிலைக் கதை |
| 9. சித்தன் கதை | 28. அருச்சுனன் கதை |
| 10. சுக்கிரன் கதை | 29. சத வுருத்திரர்கதை |
| 11. தாமவியாள கடர்கதை | 30. வேதாள கதை |
| 12. வீமபாசதிடர் கதை | 1. பகீரதன் கதை |
| 13. தாசூரன் கதை | 32. சகித்துவசன் கதை |
| 14. கசன்கதை | 33. கசன்கதை |
| 15. சனகராசன் கதை | 34. மித்தையா புருடன்கதை |
| 16. புண்ணியபாவனன்கதை | 35. விரதசூடையி கதை |
| 17. மாவலிகதை | 36. இட்சுவாகு கதை |
| 18. பிரகலாதன் கதை | 37. மானுவேடன் கதை |
| 19. காதிகதை | |

1.5 2 1. கதைகளின் எண்ணிக்கை மாறுபடுவதை நோக்க பின்வரும் செய்தி புலனாகின்றது காப்பியக் கூறுகளுள் ஒன்றாகக் கூறப்படும் கதை அல்லது படலம் என்பதுபோல் நூலாசிரியர் கதைகளைப் பலத் தொகுப்புகளாகப் பிரித்து அவற்றிற்கு முன்னுரை போல் மெய்யுணர்வுக் கருத்துக்களைக் கூறும் பகுதியையும் தனிப்பிரிவாகக் கருதியிருகலாம். நூலின் முழுமை யான வடிவத்திற்கு உடைவு ஏற்படா வண்ணம் கதை என்று அவற்றையும் எண்ணியிருக்கலாம். முமுட்சுப் பிரகரணத்தில் கதை எதுவும் கூறப்பட வில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1.5.3. நூலின் ஆரம்பத்தில் பதினைந்து பேர்கள் பாடிய சாற்றுக்கவிகளும், உரைச் சிறப்புப்பாயிரமும், பாயிரமும் உள்ளன.

சாற்றுக்கவிகள் உரையாசிரியரை (அருணாசல சுவாமிகள்)ப் புகழ்ந்து பாடியதாக அமைந்துள்ளன. பாயிரமாக அமைந்துள்ள ஆத்மவடிவ வணக்கம், உபாசனா மூர்த்தி வணக்கம், வேதாந்த சந்தான சமயாசாரியர் வணக்கம், அருளிறையடிகள் வணக்கம், அவையடக்கம் என்ற ஐந்து பிரிவுப் பாடல்களும் உரையாசிரியரால் இயற்றப்பட்டன.

1.5.4. நூலில் ஆசிரியர் விநாயகரைச் சகுணமாகவும் நிர்க்குணமாகவும் வழிபட்டு கடவுள் வணக்கத்தை ஆரம்பித்துள்ளார்.

1.5.6. அடுத்துள்ள பதின்மூன்று பாடல்களில் ஒவ்வொரு பிரிவின் பெயரையும் பாடல் எண்ணிக்கையும் குறிப்பிட்டுள்ளார்.

1.5.7. பதினைந்தாவது பாடலில் ஞானமே (சித்) எங்கும் நிறைந்துள்ளது. அதனையே வணங்க வேண்டும் என வெளிப்படுத்தியுள்ளார்.

'பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத்
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்ச்
துன்னுவ தப்பொரு டொழுதி றைஞ்சுவாம்'
(வைரா: 15)

1.5.8. அடுத்து நான்முகன் முதலான கடவுள்களும், எல்லா வேதங்களும், சாத்திரங்களும் ஞானத்தினால் நிறைந்திருக்கின்றது என்று விளக்கியுள்ளார்.

1.5.9. மேலும் ஐந்து பாடல்களில் நூலின் பெருமைகளையும் இரண்டு பாடல்களில் அவையடக்கமும், ஒரு பாடலில் நூலினைக் கேட்கத் தகுதியுடையவர் யாவர் என்பதையும் கூறி; பின் நூலின் செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார்.

1.5.10. நூலின் இறுதியில், நூலின் வரலாறு உரைத்தல், நூலின் மகிமையுரைத்தல், பிரமன் முதலிய ஆசிரியரை வாழ்த்துதல், பிரமன் முதலிய ஆசிரியர் வடிவம் தனது வடிவமாயிருத்தலினால் அவரைவணங்குவேன் எனல், இந்த நூலைப் பெற்றவர்களின்பேறுரைத்தல், இந்த நூலாசிரியர் மரபு கூறல் என்ற ஆறு பிரிவுகளில் ஆறு பாடல்களை அமைத்துள்ளார் ஆசிரியர்.

## 1.5.11. பிரிவுகள்

1.5.11.0. நூலில் காணப்படும் ஆறு பெரும்பிரிவுகளையும்

அதன் உட்பிரிவுகளையும் தொகுத்து இப்பகுதியில் விளக்கப் பட்டுள்ளது.

### 1 5.11.1. வைராக்கியப் பிரகரணம்:

வைராக்கியம் என்னும் சொல் வெறுப்பு, அவாவற்றிருத்தல், விடாப்பிடி, நிராசை போன்ற பல பொருள்தரும்[35]. ஆன்மாவல்லாத அனான்மப் பொருட்களிலிருந்து மனதை ஆன்மாவின் கண் ஒதுக்குவதும், கருமத்தின் கட்டளையின்படி வருவது வரட்டும் என்று ஒன்றையும் விரும்பாமல் இறைவனை மட்டும் விரும்பிக் கொண்டிருப்பது வைராக்கியமாகும்.[36] ராகமின்மை, புலன்களில் பற்றில்லாமல் இருப்பதும் வைராக்கியமாகும். மனம் அடங்காது ஓடுதற்குக் காரணம் யாது என்று விசாரித்துப் பார்த்தால் அது எப்பொழுதாவது எதனிடத்தாவது பற்று வைத்திருந்தால் அப்பொருளையே அது நாடி அலைகிறது என்பது விளங்கும். இந்திரிய விசயங்களிலுள்ள கேடுகள் மனத்துக்கு ஞாபகமூட்டி அதை அவற்றிடமிருந்து மீட்டெடுப்பது வைராக்கியம் என்பர்[37].

ஞானவாசிட்ட வைராக்கியப் பிரகரணத்தில் இராமன்இருந்த வைராக்கிய நிலையைக் கூறும் போது அவனுக்கு ஏற்பட்டிருந்த இல்வாழ்க்கை வெறுப்பையும் மற்ற பொருட்களின் மேல் அவாவற்று இருந்த நிலையையும் தான் அடைந்திருந்த மன நிம்மதியற்ற நிலைக்கு மீட்சிகாண வேண்டும் என்ற விடாப்பிடியையும் ஆசிரியர் கூறியுள்ளார். இந்தப்பிரகரணத்தில் இராமனைப் போல மன நிம்மதியில்லாமல் இருந்த சுகரைக்காட்டி அவன் பெற்ற நிலையையும் விளக்கியுள்ளார் (பார்க்க 2.3.1 1.1 ).

### 1.5.11.2. முமுட்சுப்பிரகரணம்:

வீடுபேற்றில் விருப்பம் உள்ளவனை முமுட்சு என்பர். இராமன் வீடுபேற்றில் விருப்பம் கொண்டிருந்தமையால் அதனை அடைவதற்குரிய வழியாகிய முயற்சியையும், அதற்குக் கருவியான சுத்தவாசனையையும், சாந்தியாதி குணங்களையும் அதனால் அடைந்த பலன்களையும் இந்தப்பிரகரணத்தில் ஆசிரியர் காட்டியுள்ளார்.

### 1.5.11 3. உற்பத்திப்பிரகரணம்:

பிறப்பு அல்லது தோற்றத்தை உற்பத்தி என்று கூறுவர்.

சத்தா (மனம்) மாத்திரமாக ஒளிவிடுகின்ற பிரமத்தின் எண்ணப் பிரதிபலனான அறிவே இந்த உலகத்தின் தோற்றத்துக்குக் காரணம் என இந்தப்பிரகரணத்தால் அறிய முடிகிறது. இந்தக் கருத்தை உறுதிப்படுத்த எட்டுகதைகளை ஆசிரியர் விளக்கி யுள்ளார்.

சுவாமி ஸ்ரீ சின்மயாநந்த பதிப்பில் இந்தப்பிரகரணத்துக்கு உற்பத்திப்பிரகரண இதோபதேசம் எனப்பெயரிடப்பட்டுள்ளது.

### 1.5.11.4. திதிப்பிரகரணம்:

திதி என்ற சொல்லுக்கு நிலைபேறு, சம்பத்து, இருப்பு, வளர்ச்சி, சாத்திரமானநாள், சிரார்த்தம், நிலைமை போன்ற பல பொருள் கொள்வர்[38]. திதிப்பிரகரணம் என்றால் உயிரினங் கள் காக்கப்படும் நிலை என்றும் கூறுவர். இந்தநூலின் இந்தப் பிரிவில் உலகம் பிரமமயமாக விளங்கும் என்ற நிலை விளக்கப் பட்டுள்ளது. இந்தக் கருத்தை வலியுறுத்த ஐந்து கதைகளை விளக்கியுள்ளார் நூலாசிரியர்.

### 1.5.11.5. உபசாந்திப்பிரகரணம்:

மனவமைதி அல்லது தணிகை என்று உபசாந்திக்குப் பொருள் கூறுவர். அறிவே உலகமாக விளங்குவதால் உலகம் எப்போதும் இல்லை என்றும் அறிவின் சாந்தியே உலக சாந்தம் என்றும் ஆசிரியர் விளக்கியுள்ளார். இந்தக் கருத்தை வலியுறுத்த ஒன்பது கதைகளைப் பயன்படுத்தியுள்ளார்.

### 1.5.11.6. நிருவாணப் பிரகரணம்:

கவலையின்மை, வீடுபேறு, மோட்சஇன்பம், பரகதி, அம்மணம். முத்திநிலை என நிருவாண நிலைக்குப் பொருள் கொள்வர். ஞானவாசிட்டத்தில் துரியாநிலையே (யோகிகள் தன்மயமாக நிற்கும் உயர்நிலை) எங்கும் காரணமாக விளங்கு வதை அனுபவம் மூலமாக அறிவிக்கும் பொருட்டு பதினான்கு கதைகளில் விளங்கியுள்ளார்.

## 1.6 பாடல்கள் அமைப்பு:

அளவடி, நெடிலடி, கழிநெடிலடி விருத்தங்களாலும் கலித் துறைகளாலும் பாடல்கள் (2055) அமைந்துள்ளன. (பார்க்க. அட்டவணை. 1)

## 1.7. நூலின் பெருமை:

1.7.0. ஞானவாசிட்டம் மொழிபெயர்ப்பு நூலாக இருந்தாலும் அதன் பெருமையை நூலாசிரியரே திறம்பட விளக்கியுள்ளார். ஆசிரியரைத்தவிர சாற்றுக்கவி எழுதிய புலவர்களும் உரையாசிரி யரும் நூலை புகழ்ந்துள்ளனர்.

1.7.1 வீரை ஆளவந்தார்,

'நிகரில் வாசிட்டமா நிபுண ஞானநூல்' (வைரா: 16 4) என ஞானவாசிட்டத்திற்கு இணையான ஞானநூல்இல்லை எனக் குறிப்பிட்டுள்ளார். இது ஒரு தற்புகழ்ச்சி எனக் கொள்ள வழியில்லை முதனூலின் சிறப்பை ஒட்டியே குறிப்பிட்டிருப்பதால் அவ்வாறு கூற முடிகிறது.

இந்த ஞானநூல், பிரமதேவனது இதய கமலத்துக்கு ஞான சூரியனாகவும், வில்லை எடுப்பதற்கு மனம் இல்லாமலிருந்த இராமனது செவிக்கு அமுதமாகவும், வான்மீகியால் உருவாக்கப் பட்ட தத்துவநூல் ஆகும் என்பர் ஆசிரியர்.

தலைமைநான் முகன்மனத் தாம ரைக்கினன்
சிலையில்ரா கவன்றிச் செவிக்குத் தெள்ளமு
துலைவில்வான் மீகிவாக் குதித்த தத்துவ
நிலைமைவா சிட்டமா நிபுண ஞானநூல் (வைரா. 17)

பெரியவர்களால், அறிஞர்களால், அறியத்தக்க மேன்மை நிறைந்தது என்றும், அற்ப அறிவை உடையவர்களால் இந்த நூல் அறியத் தகாதது என்றும், வீடுபேற்றை அடைய தகுதி யுடையவர்களுக்கு மெய்ஞ்ஞானத்தை அறிவிக்கின்ற நூல்களுள் மிகச்சிறந்தது என்றும் கூறியுள்ளார் (வைரா. 18).

தாயை விடச்சிறந்த நூல் என்றும், இந்த நூலைப் படித்தால் மறுபிறப்பு இருக்காது என்றும் தெரிவுபடுத்தியுள்ளார்.

அருமைவா சிட்டநூற் கன்னை யொப்பளோ
அரியதாய் பிறவியை யுள்ள தாக்குவள்
பெருமைவா சிட்டமிப் பிறப்பை மாற்றுமே
(வைரா. 19. 1–3)

ஆசிரியரே கதையின் வாயிலாகவும் நூலின் பெருமையைக் கூறும்படி அமைத்துள்ளார். புசுண்டன் கதையில் புசுண்டமுனி வாயிலாக 'ஞானவாசிட்டத்தைப் பாரத நூலுக்கு இணையாகக்' குறிப்பிட்டுள்ளதைக் (புசுண்.70) காணமுடிகிறது. நிருவாணப் பிரகரணத்தில் நூலில் பெருமையை வருணித்திருப்பதைக் காண முடிகிறது.

பாடல் சாத்திரத்திற் பெரியதிது தடங்காவியத்திற் பெரியதிது
மாத்திரத்தின் மெய்ஞ்ஞான வழியாற் பெரியதிது ஞான
நேத்திரத்திற் பெரியோர்க்கு நிதிபோற் பெரியதிது கதிரோன்
கோத்திரப் பொற்பாத்திரத்திற் குதித்தவமுதாம் வாசிட்டம்'
(நிரு: 65)

இவ்வாறு ஆசிரியரே நூலின் சிறப்பைக் கூறியிருப்பதைக் காண முடிகிறது.

1.7.2. சாற்றுக்கவிபாடியவர்கள் இந்தநூலின் சிறப்பை,

'அம்புவியோ ரெளிதுணர்ந்து முட்மலமற்றருள்வடிவ மாகவெண்ணி
வெம்பறை ஞானவா சிட்டநூற்கு'

என வேதகிரி நாயக்கரும்,
'ஞானநூல்' என்று பாரிப்பாக்கம் முனியப்பமுதலியார் சுப்பிரமணிய பண்டிதர், கந்தப்பமுதலியார், சண்முகஞான புரம் முருகப்பிள்ளை போன்றோர்களும்,

'னகத்தலத்தாமலக மென்னத் தெறித்திடக்கனிவு கூர்ந்தலகின்ஞான
காவியங்களினரிய ஞானவாசிட்டம்'

என இராமசாமி கவிராயரும் குறிப்பிட்டிருப்பதைக் காண முடிகிறது.

1.7.3. உரையாசிரியர் அருணாசலசுவாமிகளும் இந்த நூலை 'ஞானநூல்' (வைரா. 1,14, நிரு. 68,68) என பல இடங்களில் சுட்டிக் காட்டியுள்ளார்.

1.7.4 ஞானவாசிட்ட நூற்கருத்துக்களையும், நூலின் பாடல் களையும் பல நூற்களில் எடுத்தாளப்பட்டிருப்பதிலிருந்து நூலின் பெருமையை அறியமுடிகிறது (பார்க்க: பின்னிணைப்பு 2).

1.7.5. ஞானவாசிட்டம் பலராலும் போற்றுதற்குரிய பெருமை வாய்ந்த நூல் என்பது தெளிவாகிறது.

## 1.8. பிரகரணம்:

1.8.0. பிரகரணம் என்ற சொல்லுக்குத்தமிழில் அத்தியாயம், பகுதி, நாடகவகை, செய்தி முடிவு[39] போன்ற பல பொருள்கள் உள்ளன.

1.8.1. ஞானவாசிட்டத்தில் அது அத்தியாயம் என்ற பொருளிலேயே கையாளப்பட்டுள்ளது. சில யோக வாசிட்டப் பதிப்புக்களில் பிரகரணத்திற்குப்பதிலாகக் காண்டம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. மலையாளத்தில் சந்தர்ப்பத்திற்கும் (Context) பிரகரணம் என்று கூறுவர்

1.8.2. மலையாளத்தில் லகுயோகவாசிட்ட சங்கிரகம் என்ற நூலை எழுதிய சுவாமி ஞானாநந்த சரஸ்வதி அந்த நூலின் முகவுரையில் பிரகரணம் என்ற தலைப்பில் சில கருத்துக்களை வெளியிட்டுள்ளார். கி.பி. எட்டாம் நூற்றாண்டிற்குப் பிறகு தத்துவ நூல்களை எழுதிய ஆசிரியர்கள் பலருடைய கருத்துக் களை எடுத்து அதே போன்று ஒரு நூலை பாடலாகவோ, உரைநடையாகவோ எழுதினால் அதற்கு பிரகரணம் எனப் பெயரிடுவர் என்று குறிப்பிட்டுள்ளார். அவ்வகையில் ஞானவா சிட்டத்தை ஒரு பிரகரண நூல் என்றே குறிப்பிட்டுள்ளார்[40].

1.8.3. பத்துவகையான காட்சிக்குரிய காப்பிய வகையான வடிவத்தில் (ரூபகத்தில்) பிரகரணமும் ஒன்று எனக் கொள்வர் நாடகம், பிரகரணம், சமவாகாரம், ஹியாமிருகம், தீமம், வியாயோகம், அங்கம், பிரகசனம், பானம், வீதி என்பன பத்துவகை ரூபகங்களாகும். எல்லா ரூபகங்களும் நாடகத்தையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. சமஸ்கிருத நாடக இலக்கியத்தில் பிரகரணத்தைப் பொதுமக்கள் கையாளும் சமூக நாடகம் எனக் கருதலாம். பிரகரணத்தின் கதை கவியினால் கற்பிக்கப் பட்ட கதையாய் இருத்தல் வேண்டும். நிகழ்ச்சி பூவுலகத்தில் நடக்க வேண்டும். தலைவன் அமாத்தியன், விப்பிரன், வணிகன் என்னும் வகையில் ஒருவனாய்த் தீரசாந்தனாய், அபயமுற்றவ னாய், அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றினையும் கருதிய

பொருளாகக் கொண்டவனாய இருத்தல் வேண்டும். இதில் குலமாது நாயகியாய் இருந்து நல்லொழுக்கத்தையே காட்டும் வகையும் உண்டு. விலைமாதை நாயகியாகக் கொண்ட காதல் கதையை அமைத்த பிரகரணங்களும் உள்ளன. குலமகள் தலைவியாக உள்ள பிரகரணம் சுத்தம் எனவும்; விலைமாதைத் தலைவியாகக் கொண்ட பிரகரணம் விகிர்தம் எனவும்; இருவரும் வந்தால் சங்கீர்ணம் எனவும் பிரிப்பர். மிருச்சடிகம் சங்கீர்ணப் பிரகரணத்தைச் சார்ந்ததாகும்[41].

1.8.4. இந்தப் பிரகரண இலக்கிய மரபு கிறித்தவ சகாப்தத்தின் தொடக்கத்திலேயே நன்கு கையாளப்பட்டிருந்த ஒன்றாகும்.

பிரகரண நூற்கள்:

1. அசுவகோஷன்—சாரீபுத்திர பிரகரணம்
2. விசாகதத்தன்—தேவீசந்திரகுப்தம்
3. பவபூதி —மாலதீமாதவம்
4. பிரமயசஸ்சுவாமி—புஷ்பதூஷிதகம்

இவை தவிர தரன்கதத்தா என்ற பிரகரண நூல் வடமொழி இலக்கிய வரலாற்று நூலில் குறிப்பிடபட்டுள்ளது. ஆனால் இந்த நூல் கிடைக்கப்பெறவில்லை[42].

1.8.5 ஞான வாசிட்டம் நாடக வகை போன்று அமைந்தது அல்ல. ஞானநந்த சரஸ்வதி குறிப்பிடுவது எந்த வகையில் பொருந்தும் என்பது ஆய்வுக்குரியது. ஆளவந்தார் யோகவாசிட்டத்தில் உள்ள சொல்லை அப்படியே கையாண்டுள்ளார் எனலாம். இரண்டு நூற்களிலும் காணப்படுவதிலிருந்து பிரகரணம் என்பது அத்தியாயத்தைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமாக உள்ளது எனலாம்.

## 1.9. உரையாசிரியர்.-

1.9.0. ஞானவாசிட்டத்திற்கு உரை எழுதியவர்கள் பலர் ஆவார் இது சமயநூல் என்பதால் பலர் எழுத விரும்பி இருக்கலாம் எனத் தோன்றுகிறது. உரை நடை வடிவில் சில வசன நூற்களும் சாரம், தெளிவு, திரட்டு போன்ற நூற்களும் தோன்றியுள்ளன.

1.9.1. கி.பி. 1870 ஆம் ஆண்டில் வெளிவந்த (காஞ்சிபுரம் திருவேங்கட முதலியார் இயற்றமிழ் அச்சுக் கூடம்) பிறைசை அருணாசல சுவாமிகளுடைய உரையே சிறந்த ஒன்றாய் நிலவு கிறது.

1.9.1.1. அருணாசல சுவாமிகள் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சார்ந்த பொறையாறு என்ற ஊரைச் சார்ந்தவர் எனவேதான் அவர் பிறையாறு அருணாசல சுவாமிகள் அல்லது பிறைசை அருணாசல சுவாமிகள் என அழைத்தனர் என்பர். அவரது காலம் கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டு என்பர். தரங்கம் பாடியில் வாழ்ந்த சபாபதி என்பார் வேண்டுகோளுக்கு இணங்க இந்த உரை எழுதப்பட்டது. மேலும் வேதாந்த சூளாமணி, இராமானந்த சுவாமிகள் இயற்றிய சங்கற்ப நிராகரணம், தாண்டவராய சுவாமிகள் இயற்றிய கைவல்லிய நவநீதம், தத்துவராயர் இயற்றிய சசிவண்ண போதம், தெய்வ நாயக சுவாமிகள் இயற்றிய தசகாரிய மகாவாக்கியம் போன்ற நூற்களுக் கும் அருணாசல சுவாமிகள் உரை எழுதியுள்ளார் [48].

1.9.1.2. கைவல்லிய நவநீத உரையையும், ஞானவாசிட்ட உரையையும் ஒப்பிடும் போது இரண்டு உரையும் ஒருவரே எழுதி யிருக்கலாம் என்ற எண்ணம் தோன்றுகிறது. ஆனால் தொடர்புச் செய்திகள் இருநூற்களிலும் காணப்படவில்லை.

1.9.1.3. அருணாசல சுவாமிகள் எழுதிய உரை நூற்களில் ஞானவாசிட்டத்திற்கு உரைசெய்ததாகக் குறிப்பு இல்லை. அதனால் இந்த உரை அவரது இறுதி காலத்தில் எழுதப்பட்டது எனலாம்.

1.9.1.4. அருணாசல சுவாமிகள் பலநூல் புலமை உடையவர் என்பதும் சமஸ்கிருதப் புலமை உடையவர் என்பதும் அவரது உரையால் அறிய முடிகிறது.

1.9.1.5. ஒவ்வொரு பிரிவுக்கும் உரிய கருத்தின் சுருக்கத்தை அவதாரிகை என்ற பிரிவில் பாடல்களை ஆரம்பிக்கும் முன் கொடுத்துள்ளார். மேலும் ஒவ்வொரு பாடலுக்கும் பதப் பொருள், பொழிப்புரை, பதசாரம், இதன் தாற்பரியம் என நான்கு பிரிவுகளாகப் பிரித்துப் பொருள் கொடுத்துள்ளார். ஒவ்வொரு

பாடலுக்குரிய சுருக்கத்தை அல்லது அதன் உயிர்ப் பொருளைச் சிறு சிறு தலைப்புகளில் கொடுத்துள்ளது அவரது சிறந்த திறனாய்வு நோக்கை வெளிப்படுத்துகிறது. பாடல்களில் வரும் தெளிவில்லாத சொற்களுக்குத் தனித்தனியாக பொருளும் விளக்கமும் கொடுத்துள்ளார்.

1.9.2. அருணாசல சுவாமிகளின் உரைதான் முதன்முதலில் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பது மு. சண்முகம் பிள்ளை என்பவர் கருத்தாகும்[44]. கிடைத்தவற்றுள் முழுமையாக உள்ள உரை நூற்களில் இதுவே முதல் நூல் என்றும் கூறலாம்.

1.9.3. இதற்கு முன்பே ஆலய சுந்தரம் பிள்ளை (1853) அவர்களால் எழுதப்பட்ட ஞானவாசிட்ட தெளிவு என்ற நூல் தோன்றி இருக்கிறது.

1.9.4. இதைத் தவிர காலம் தெரியாத பல உரை நூற்களும் காணப்படுகின்றன. மேலும் முழுமை பெறாத சின்மயானந்த ஞானதேசிக சுவாமிகளின் உரையும் கிடைக்கிறது.

## 1.10. உரைகளும் பிற பதிப்புகளும்:

1.10.0. அருணாசல சுவாமிகள் உரையைத் தவிர கீழ்க் குறிப்பிடப்பட்டிருக்கும் ஆசிரியர்கள் உரையும், தெளிவும், வசனங்களும் எழுதியுள்ளார்கள். அவற்றுள் ஒரு சிலவே இப்பொழுது கிடைக்கப் பெறுகின்றன.

1.10.1

| | | | |
|---|---|---|---|
| 1. | குப்புசாமி ராசு, வெ-ஞானவாசிட்ட | உரை | -கி.பி 1921 |
| 2 | வீரசுப்பையா ஞானதேசிகர் | ,, | -கி.பி 1931 |
| 3. | சிவானந்த மூர்த்தி | ,, | -19 ஆம் நூற்றாண்டு |
| 4. | சின்மயானந்த ஞான தேசிக சுவாமிகள் | ,, | 1974 |
| 5. | சமுசார தரணியும் வீரசேகரரும் | ,, | - |
| 6. | ஆநந்த போதேந்திர சரஸ்வதி சுவாமிகள் | ,, | - |

7. ஆறுமுக அடிகள் - ஞானவாசிட்ட அநுப்பதவுரை -

8. வேலாயுதம் பிள்ளை, நெ - வாசிட்ட முக்கிய விசயமூலமும் உரையும் - 1905

9. அலால சுந்தரம் பிள்ளை - ஞான வாசிட்டத் தெளிவு - 1853

10. நமச்சிவாய ஐயர் - ஞானவாசிட்டத் திரட்டு -

11. மாணிக்கசாமி முதலியார் - ஞானவாசிட்ட சாரம் -

12 தெய்வசிகாமணிமுதலியார், பி.-ஞானவாசிட்ட வமல ராமாயண வசனம் - 1874

13 லோகநாத முதலியார், கொ. " - 1902

14. தளவாய் இராமசாமி முதலியார் " - 1905

15. வீரச்சாமி ராசு. ராம " - 20ஆம் நூற்றாண்டு

16. கொன்னூர் லோகநாத முதலியார் " -

17. சுப்பிரமணிய முதலியார், ம.அ. " -

1.10-2. இந்த நூற்களைத் தவிர ஞானவாசிட்டத்தின் உரைச் சுருக்கமும், ஞானவாசிட்டத்திரட்டும் சென்னை அரசாங்க நூல் நிலையத்தில் கையெழுத்துப் பிரதிகளாக உள்ளன[45].

1.10 3. பல நூலகங்களில் சுவடிகளாக ஞானவாசிட்டம் உள்ளது.

1.10 3.1. கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தில்,

எண்: 3919எ - ஞானவாசிட்டம்

" 9061 - "

" 11236 - "

" 5958எ - ஞானவாசிட்டக் கதை

" 8926 - ஞானவாசிட்ட உரைநடை என்ற ஐந்து சுவடிகள் உள்ளன. அவற்றுள் பல ஏடுகள் சிதைந்து காணப் படுகின்றன.

1.10.3.1.1. 11236 - ஞானவாசிட்டம் (வேதாந்தம்)

அளவு - 22.8" × 4.1"

மொத்த இலக்கு - 243 அதில் 19 இலக்குகள் இல்லை.

குறிப்பு: சமஸ்கிருத ஆசிரியர் - வான்மீகி
தமிழ் ஆசிரியர் - ஆளவந்தார்

பக்கத்துக்கு 11 முதல் 12 வரிகள் உள்ளன.

காலம்: சூயஎ (கி.பி. 1842) வைகாசி மீ யங
சுக்கிர வாரத்தன்றைக்கு எழுதப்பட்டது.

எழுதியவர்: ஊற்காடு நாராயணய்யர்

1.10.3.1.2. 5953எ – ஞானவாசிட்டக்கதை (வேதாந்தம்)
அளவு = 30'' × 3.9.''
மொத்த இலக்குகள்: 128

இது உரை நடையில் அமைந்தது. பக்கத்துக்கு 9 முதல் 10 வரிகள் வரை உள்ளன. விக்கிரம ஞு அற்பசி மீ யஉ தேதி (28–9–1115, கி பி. 1940) என ஏடு எழுதப்பட்ட காலத்தையும் ஊத்தக்குளியிலிருக்கும் குப்பவாத்தியார் தொண்டாம் புத்தூரிலிருக்கும் முத்துக்குமார முதலியாரவர்க்காக எழுதியது என ஏடு எழுதியவர் பெயரும் யாருக்காக எழுதப்பட்டது என்பதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

1.10.3.1.3. பிற சுவடிகள் படித்துப் பார்த்து ஆய்வு செய்யும் நிலையில் இல்லாமல் சிதைந்துக் காணப்படுவதால் அவை பற்றிய குறிப்புக்கள் விளக்கப்படவில்லை.

1 10 4. தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் டி. 652 எம். நம்பர் 315 ஞானவாசிட்டம் 199 இலக்குகள்

| | | | |
|---|---|---|---|
| 653/316 | " | -308 | " |
| 937 | " | -224 | " |

என்ற மூன்று ஏட்டுச் சுவடிகள் உள்ளன.

1.10.4. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு தவத்திரு ஈசான ஞான தேசிகள் திருமடாலயத்தலைவரால் ஒரு ஞானவாசிட்ட ஏட்டுப் பிரதி கொடுக்கப்பட்டுள்ளது[46].

## 1.11. இராமாயணத்தில் ஞானவாசிட்டத்தின் இடம்:

ஞானவாசிட்டத்தில் காணப்படும் கருத்துக்களை, வசிட்டர், விசுவாமித்தரர் ஆகியோர் இராமனுக்கு இராமாயண பால

காண்டமையடைப்படலத்தில் அறிவுறுத்திருக்கவேண்டும் என்பது நூலில் காணப்படும் சான்றுகளால் அறியமுடிகிறது. மேலும் இதுபற்றிய விளக்கங்கள், "ஞானவாசிட்டத்தில் தத்துவ விளக்கக்கதைகள்" என்ற புத்தகத்தின் முதல் இயலில் உள்ளது.

## 1.12. பிறமொழிகளில் ஞானவாசிட்டம்:

1.12.0. தமிழில் தோன்றியிருக்கும் இதிகாசங்கள், காப்பியங்கள், புராணங்கள் பல வடமொழி நூற்களைப் பின்பற்றி எழுந்தவை. ஆளவந்தார் ஞானவாசிட்டத்தைச் சமஸ்கிருத மொழியிலிருந்து மொழி பெயர்த்தாலும் பிற தமிழ் வழி நூற்களைப் போன்று தமிழ் மரபுக்கு ஏற்றவாறு உவமைகளையும், வருணனைகளையும், பாநலன்களையும் அழகுடன் திறம்பட அமைத்துள்ளார். மூல நூலுக்கும், தமிழ், மலையாள, தெலுங்கு நூற்களுக்கும் உள்ள ஒப்பீடுகள் இந்தப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

### 1.12.1. சமஸ்கிருதம்:

1.12.1.0. இராமாயணம் வான்மீகியால் எப்பொழுது எழுதப் பட்டது என்று அறுதியிட்டுக் கூறமுடியாதது போன்றே, யோகவாசிட்டத்தையும் வான்மீகி எப்பொழுது எழுதியிருப்பார் என்று கூற முடியவில்லை. இரண்டு நூற்களையும் வான்மீகியே எழுதியுள்ளார் என்பது நூல் சான்றுகளால் அறியப்பட்டதாகும். யோகவாசிட்ட சமஸ்கிருத மூலநூல் ஒன்று (பழைய சமஸ்கிருத கிரந்த எழுத்தினால் எழுதப்பட்டது) கேரளப் பொது நூலகத்தில் உள்ளது (எண்: J6; 28197). அதில் எழுதியவர் வான்மீகி என்றே குறிப்பிடப்பட்டுள்ளது அதில் இருபத்தேழாயிரம் சுலோகங்களே உள்ளன. அந்த நூல் கி.பி. 1896ஆம் ஆண்டு உபாக்க ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரி என்பவரால் வெளியிடப் பட்டுள்ளது.

1.12.1.1. இப்பொழுது கிடைக்கின்ற யோகவாசிட்ட நூலின் வைராக்கியப் பிரகரணத்தில் முப்பத்து மூன்று சருக்கங்களும் முமூட்சு விவகாரப் பிரகரணத்தில் இருபது சருக்கங்களும்

உற்பத்திப் பிரகரணத்தில் நூற்றி இருபத்திரண்டு சருக்கங்களும், ஸ்திதிப் பிரகரணத்தில் அறுபத்திரண்டு சருக்கங்களும், உபசாமப் பிரகரணத்தில் தொண்ணூற்றி மூன்று சருக்கங்களும், நிருவாணப் பிரகரணத்தில் முன்னூற்றி நாற்பத்து நான்கு சருக்கங்களுமாக மொத்தம் அறுநூற்றி எழுபத்தி நான்கு சருக்கங்களும், ஆறு பிரகரணங்களும் அமைந்துள்ளன. அவற்றுள் ஐம்பத்தைந்து கதைகள் உள்ளன. நிருவாணப் பிரகரணம் புருவரதா, உத்தரதா என இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது

1.12.1.2. மூலநூல் ஒரு லட்சம் சுலோகம் உடையது எனத் தமிழ் ஞானவாசிட்ட உரைச்சிறப்புப் பாயிரத்திலும், யோகவாசிட்ட நூற்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. அதை பின்பற்றியே பண்டிதர் பகவான்தாஸ் என்பவர் கி.பி. 1905இல் முப்பத்திரண்டாயிரம் சுலோகம் உடைய நூல் ஒன்றை எழுதியுள்ளார். ஆனால் இப்பொழுது கிடைக்கப் பெற்றுள்ள பகவன்தாஸ் நூலில் இருபத்தெட்டாயிரம் சுலோகங்களே உள்ளன. இந் நூலைப் பின்பற்றியே காஸ்மீரத பண்டிதர் அபிநந்தர் ஆறாயிரம் சுலோகங்களில் 'லகுயோக வாசிட்டம்' என்ற நூலை ஆக்கியுள்ளார். லகுயோகவாசிட்டத்தைப் பின்பற்றி 'யோகவாசிட்டத்தின் சாரம்' என்ற நூலை ஸ்ரீ ஞானானந்த பாரதி என்பவர் கி.பி 1982இல் ஆயிரத்து அறுநூற்றித் தொண்ணூற்றெட்டு சுலோகங்களில் எழுதியுள்ளார்[47]. லகுயோக வாசிட்டத்தைப் பின்பற்றியே மற்ற மொழிகளிலுள்ள நூற்கள் தோன்றியுள்ளன.

### 1.12.1.3. லகுயோக வாசிட்டம்:

லகுயோக வாசிட்டம், யோக வாசிட்டத்தைப் பின் பற்றி எழுந்த நூலாக இருந்தாலும் அதில் யோகவாசிட்டத்தின் பல பகுதிகள் விடப்பட்டுள்ளன. யோக வாசிட்ட நிருவாணப் பிரகணத்தின் இரண்டாம் பகுதியான உத்தரதாவில் காணப்பட்ட இருநூற்றிப் பதினாறு சுலோகங்களைப்பற்றி எந்தச்செய்தியும் லகுயோக வாசிட்ட நூலில் குறிப்பிடப்படவில்லை. முதல் பகுதியில் யோக ஸப்த பூமி கோபாக்யானம், சாஸ்தர கிரஹனபல நிர்த்தேசம், பரத்வசானு சாசனம் என்ற மூன்று பிரிவுகளும்

சேர்க்கப்படவில்லை. இந்தப்பகுதியிலுள்ள சில செய்திகள் நிருவாணப் பிரகரண முடிவு என்ற பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. நூலை ஆரம்பிக்கின்ற போதும் பல மாற்றங்களை ஆசிரியர் செய்துள்ளார்.

### 1.12.2. தமிழ்:

1.12 2 0 தமிழ் ஞானவாசிட்டம் பற்றி இந்தக் கட்டுரையில் நூல் அமைப்பு என்ற பிரிவில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது (பார்க்க: 1.2).

### 1.12.2.1. ஞானவாசிட்டமும் யோகவாசிட்டமும்:

1.12.2.1.0 ஞானவாசிட்டம் லகுயோக வாசிட்டத்தைப் பின் பற்றி எழுந்த நூலாகையால் யோகவாசிட்டத்தில் உள்ள பல செய்திகள் விடப்பட்டுள்ளன. அவைபற்றி அமைப்பியல் முறையில் மட்டுமே இங்கு விளக்கப்பட்டுள்ளது.

1.12.2.1.1 இரண்டு நூற்களிலும் ஆறுபிரகரணங்களே உள்ளன. யோகவாசிட்டத்தின் உத்தரதாவில் காணப்படும் செய்திகள் ஞானவாசிட்டத்தில் இல்லை யோகவாசிட்டத்தில், ஐம்பத்தைந்து கதைகள் உள்ளன. ஆனால் ஞானவாசிட்டத்தில் முப்பத்தேழு கதைகளே உள்ளன. ஞானவாசிட்டத்தில் ஒரு கதையாகக் கூறப்பட்டுள்ள சிகித்துவசன் கதை யோகவாசிட்டத்தில் நான்கு கதைகளாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. யோகவாசிட்டத்தில் ஆசிரியர் பிரித்துக் கூறியுள்ள கதைகளை ஞானவாசிட்டத்தில் கதையினுள் கதைகூறுமுகமாக கிளைக் கதை வடிவில் ஆசிரியர் கூறியுள்ளார். பலகதைகளுக்குக் கதையின் பெயர்கள் மாறிக் காணப்படுகின்றன (பார்க்க: அட்டவணை: 2).

1..2.2.1.2. பாலன் கதை ஞானவாசிட்டத்தில் தாய் மகனுக்குக் கூறுவது போல அமைநதுள்ளது. ஆனால் யோகவாசிட்டத்தில் முதிர்ந்த பணிப்பெண் தான் பாதுகாத்துவரும் சிறுவனுக்குக் கூறுவதுபோல உள்ளது. இவைபோன்று பலகதைகளில் மாறுதல்கள் உள்ளன (பார்க்க. இயல். 2.).

### 1.12.2 1.3 நூல் ஆரம்பம்:

இரண்டு நூற்களிலும் ஆரம்பம் வைராக்கியப் பிரகரணமாக இருந்தாலும் அதில் தொடங்கும் செய்திகள் மாறுபட்டே காணப் படுகின்றன.

சுதீட்சனன் மனத்தில் சந்தேகம் கொண்டு அகத்தியரிடம் சென்று, 'முனியே! மோட்சத்தை அடைய, சாதனம் செய்ய வேண்டியது கர்மமா! அல்லது ஞானமா!' என்று கேட்பதாக நூலைத் தொடங்கியுள்ளார் யோகவாசிட்ட ஆசிரியர். ஆனால் ஞானவாசிட்டத்தில்,

ஒருங்குணர் குரவனா முயர்வான் மீகனை
மருங்குறப் பரத்துவன் வணங்கி வன்பவ
நெருங்குவெந் துயரிலே நின்ற தெங்ஙன
அருங்குணத் திராமனி யருளிற் கூறென்றான்'

(வைரா. 22)

எனத் தொடக்கம் அமைந்துள்ளது.

இந்தச் செய்தி யோகவாசிட்டத்திலும் உள்ளது. அது சுதீட்சணன் சந்தேகம், காருண்யன் வரலாறு, சுருசி, தேவதூதன் வரலாறு அரிஷ்ட நேமியின் வரலாறு, வான்மீகியின் வசனம், இராமாவதாரத்தின் காரணம் போன்றவற்றைக் கூறிய பின் மகாராமாயணம் ஏற்பட்ட முறை என்ற பிரிவில் காணப் படுகிறது.

### 1.12.2.1.4. வைராக்கியப் பிரகரணம்:

இந்தப் பகுதியில் சுதீட்சணன் சந்தேகம், காருண்யன், சுருசிதேவதூதன், அதிர்ஷ்டநேமி போன்றவர்களின் வரலாறு, வான்மீகியின் வசனம், இராமாவதாரததின் காரணம் போன்றவை ஞானவாசிட்டத்தைவிட யோகவாசிட்டத்தில் கூடுதலாகக் காணப்படுகின்றன. மேலும் ஞானவாசிட்டத்தில் இராமன் தன் வைராக்கிய நிலையைக் கூறும் பகுதி வரை யோகவாசிட்டத்தில் காணப்படுகின்றது. விசுவாமித்திரர் கூற்று, சுகர்கதை போன்றவை யோகவாசிட்ட முமுட்சு வியவகாரப் பிரகரணத்தில் உள்ளன.

ச வைராக்கியப் பிரகரணத்தை வைராக்கிய காண்டம் என்று சில பதிப்புக்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதில் முப்பத்து மூன்று பிரிவுகள் உள்ளன.

1.12.2.1.5 முமுட்சுப் பிரகரணம்:-

வீடுபேற்றிற்குரிய வழி வகைகளை விவரித்துக் கூறுவதால் இந்தப் பகுதியை அவ்வாறு குறிப்பிட்டிருக்கலாம் யோகவாசிட்டத்தில், முமுட்சு வியவகாரப் பிரகரணம் என இந்தப் பகுதி பெயரிடப்பட்டுள்ளது. ஞானவாசிட்டத்தில், வியவகாரம் என்ற சொல் இடம் பெறவில்லை (வியவகாரம்-வணிகம், வேலை). சில பதிப்புகளில் முமுட்சு காண்டம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது அதில் இருபது பிரிவுகள் உள்ளன.

யோகவாசிட்டத்தில் காணப்படும். இந்தப் பிரகரணச் செய்திகளாகிய விசுவாமித்திரர் அறிவுரை, சுகர்கதை, வசிட்டர் அறிவுரை போன்றவை ஞானவாசிட்ட வைராக்கியப்பிரகரணத்தோடு சேர்க்கப்பட்டுள்ளன.

1.12.2.1.6. உற்பத்திப் பிரகரணம்:-

சில பதிப்புக்களில இந்தப் பகுதியை உற்பத்திக் காண்டம் என்று குறிப்பிட்டுள்ளனர். அதில் நூற்றி இருபத்திரண்டு பிரிவுகள் உள்ளன ஞானவாசிட்டத்தில் உள்ளது போன்ற எட்டுக்கதைகளும் உள்ளன. கதைகளின் பெயர்களில் சில மாறியுள்ளன

1.12.2.1.7. ஸ்திதிப் பிரகரணம்:-

ஞானவாசிட்டத்தில் திதிப்பிரகரணம் என்றிருப்பது யோகவாசிட்டத்தில் ஸ்திதிப் பிரகரணம் என்றுள்ளது. பொருளில் எந்த மாற்றமும் இல்லை. அதில் அறுபத்திரண்டு பிரிவுகள் உள்ளன. சில கதைகள் கூறும் வகையில் மாறுபட்டுள்ளன.

1.12 2.1.8. உபசமபிரகரணம் -

இந்தப் பிரகரணம் ஞானவாசிட்டத்தில் உபசாந்திப் பிரகரணம் என்று குறிப்பிடபட்டுள்ளது. சில பதிப்புக்களில் உபசாம காண்டம் என்றுள்ளது. உபசமம் என்றால் சமாதானம் என்று பொருள். உபசாந்தி என்றால் மனவமைதி, தணிகை என்பது பொருள். கருத்துக்களில் எந்த மாற்றமும் இல்லை அதில் தொண்ணூற்றி மூன்று பிரிவுகள் உள்ளன.

### 1.12.2.1.9 நிருவாணப் பிரகரணம்:-

யோகவாசிட்ட நிருவாணப் பிரகரணம் புருவரதா, உத்தரதா என இருபகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. புருவரதா என்ற பகுதியில் நூற்றி இருபத்தெட்டுப் பிரிவுகளும் உத்தரதா பகுதியில் இருநூற்றிப் பதினாறு பிரிவுகளும் உள்ளன. ஞானவாசிட்டத்தில் புருவரதா பகுதியிலுள்ள கதைகளும் செய்திகளுமே இடம் பெற்றுள்ளன. மற்றபகுதி இடம் பெறவில்லை. லகுயோக வாசிட்டத்திலும் அந்தப்பகுதி இடம்பெறவில்லை. சில கதைகளிலும் மாற்றங்கள் உள்ளன (பார்க்க: அட்டவணை 2).

**1.12.2.1.10.** முதல் இரண்டு பிரகரணத்தைத் தவிர மற்ற பிரகரணங்களில் பிரகரணச் செய்திகளைக் கூறிவிட்டுக் கதைகளைக் கூறியுள்ளார் யோகவாசிட்ட ஆசிரியர். ஞானவாசிட்டத்தில் கதைகளைக் கூறிய பின் பிரகரணச் செய்திகளைக் குறிப்பிட்டுள்ளார்.

### 1.12.2.2. ஞானவாசிட்டமும் லகுயோக வாசிட்டமும்:-

ஞானவாசிட்டம் லகுயோகவாசிட்டத்தினுடைய தமிழ் ஆக்கமே ஆகும். லகுயோகவாசிட்டம் யோகவாசிட்டத்தின் சாரமாகும். லகுயோகவாசிட்டம் சுலோக அமைப்பிலும் ஞானவாசிட்டம் விருத்தப்பா அமைப்பிலும் அமைந்துள்ளது.

### 1.12.3. மலையாளம்.

1.12.3.0. கவிதிலகன் வரஹூர் சாமுமேனேன் என்பவர் மலையாளத்தில் ஞானவாசிட்டம் என்ற நூலை எழுதியுள்ளார். இந்த நூல் கி.பி. 1903இல் வெளிவந்துள்ளது[48]. அதை ஞானவாசிட்ட கேரள பாஷாகானம் என்றும் அழைப்பர்.

1.12 3.1. இந்த நூல் லகுயோகவாசிட்டத்தினுடைய மொழி பெயர்ப்பை ஒட்டியதாக இருந்தாலும், லகுயோகவாசிட்டத்தில் இறுதியில் இல்லாத பிரிவுகள் சில காணப்படுகின்றன. சில பிரிவுகள் சிறு சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. எனவே இந்த நூல் யோகவாசிட்டத்தையும் லகுயோக வாசிட்டத்தையும் பின்பற்றி எழுந்துள்ளது எனக் கருதலாம்.

1.12.3 2. மலையாள ஞானவாசிட்டத்திலும் ஆறுபிரகரணங்கள் உள்ளன. தமிழ்ல் கதை என்று ஒவ்வொரு பிரிவையும்

குறிப்பிடுவதை மலையாளத்தில் உபாக்கியானம் என்றே குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். உபாக்கியானம் என்றால் பொருள் பொதிந்த கதை என்று குறிப்பிடுவர். இந்தக் கருத்தைத் தமிழும் தழுவி நிற்கிறது. மலையாள நூலாசிரியர் நூலின் உள்ளடக்கத்தில் ஐம்பது பிரிவுகளாகக் குறிப்பிடப்பட்டுள்ள செய்திகள் நூலின் உள்ளே காணப்படவில்லை. பல பிரிவுகள் விடப்பட்டுள்ளன. அதன் காரணம் கூறப்பட வில்லை. ஆனால் செய்திகள் அடுத்த பிரிவின் ஆரம்பத்தில் உள்ளன.

சான்று: சூவ்ய பாக்யானம், பார்க்கவோ பாக்யானம், ஜனகோ பாக்யானம் பூஸிண்டோபாக்யானம் போன்றவை நூலின் உள்ளே தலைப்புக் கொடுக்காமல் அடுத்த பகுதியுடன் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. உள்ளடக்கத்தில் சாம்பரிகோ பாக்கியானம் என்றுள்ள கதைப்பிரிவு நூலின் உள்ளே லாம்பரி உபாக்யானம் என்றுள்ளது.

1.12.3.3. தமிழில் வைராக்கியப் பிரகரணம் ஒரு பிரிவாக உள்ளது. ஆனால் மலையாளத்தில் வைராக்கியப் பிரகரணம் ஜகத் தோஷபிரகாரம் என இரண்டு பிரிவுகளாக உள்ளது. மேலும் தமிழிலுள்ள சிகித்துவசன் கதை மலையாளத்தில் ஐந்து பிரிவுகளாக உள்ளது. கதைப் பெயர்களில் மாற்றங்களும் காணப்படுகின்றன. ஆனால் செய்திகளில் மாற்றம் இல்லை [பார்க்க அட்டவணை. 2].

1.12.3.4. நூலின் உள்ளடக்கம் ஐம்பது பிரிவு எனக் கூறி இறுதியில் நாற்பத்தாறு சருக்கங்கள் என்று கூறியிருப்பது ஆய்வுக்குரிய தாகும். ஆசிரியர் அவ்வாறு அமைத்தாரா அல்லது பதிப்பித்தவர்கள் அவ்வாறு செய்தார்களா என்பது சிந்தனைக் குறியதாகும். கிடைத்த எல்லா பதிப்புக்களிலும் அவ்வாறே காணப்படுகிறது.

1.12.3.5. தமிழில் காணப்படாத யோக சப்தபூமிகோபாக்யானம், சாஸ்திரகிரகணபல நிரத்தேசம், பரத்வாசானுசாசன் என்ற மூன்று பகுதிகளும் மலையாளத்தில் காணப்படுகின்றன. அவற்றுள் யோக சப்த பூமி என்கின்ற பகுதியிலுள்ள கருத்துக்களைத் தமிழில் ஞானபூமி என நிருவாணப் பிரகரணத்தில் காண முடிகிறது.மற்ற செய்திகள் இல்லை. அவை மலையாளத்தில்

தனியாகக் குறிப்பிட்டிருப்பதால் நாற்பத்தாறு பிரிவுகள் என்கின்றனர் எனலாம்.

1.12.3.6. மலையாள நூலாசிரியர் தமிழ் மொழியின் சொல்லாட்சிகள் பலவற்றைக் கையாண்டுள்ளதைக் காணமுடிகிறது.

**சான்று:**

1. சொன்னது (மலை. வைரா: வரி: 239, 244)
2. ஓதிய ( ,, : 242)
3. நேர்த்து ( ,, : 151)
4. தாழ்மை ( ,, : 143)
5. வாரி (கடல்) மலை: ஜகத்: 107)
6. நாயகம் ( ,, : 60)
7. ஊழி ( ,, : 68)

இவை போன்ற பல சொற்களை மலையாள நூலில் காண முடிகிறது. இவற்றை நோக்கும் போது ஆசிரியர் தமிழ் ஞான வாசிட்டத்தை பின்பற்றியும் மொழி பெயர்த்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

1.12.3.7. தமிழில் பாடல்கள் ஆசிரிய விருத்தப்பா வினால் அமைந்துள்ளன. மலையாளத்தில் ஒவ்வொரு பிரிவின் கீழும் தொடர்நிலைப் பாடல்களாக அமைந்துள்ளது. அதைக் கிளிப் பாட்டு கைவிருத்தம் என்று கூறுவர். தமிழில் உள்ளதை விடப்பாடல்கள் எளிமையாகக் காணப்படுவதால் தமிழில் உரை நூற்கள் தோன்றிய அளவு, உரை நூற்கள் மலையாளத்தில் தோன்றவில்லை. ஆனால் யோக வாசிட்டத்தைப் பின்பற்றிப்பல ஆசிரியர்கள் சுருக்கி எழுதியுள்ளனர். லகுயோக வாசிட்ட சங்கிரகம் என்ற உரைநடை நூல் மலையாளத்தில் வெளிவந்துள்ளது. அதில் சாமுமேனோன் எழுதியுள்ள எல்லாப் பிரிவுகளும் செய்திகளும் காணப்படவில்லை. மேலும் காவுங்கல் ஸ்ரீநிலகண்டபிள்ளை எழுதிய ஞானவாசிட்ட கதைப்பாட்டும், ஸ்ரீ.கெ.வி.யம்மின் எழுதிய ஞானவாசிட்ட கதைப்பாட்டும் தோன்றியுள்ளன என லகுயோக வாசிட்ட சங்கிரகம் எழுதிய சுவாமி ஞானாநந்த சரஸ்வதி தம்முடைய நூலில் குறிப்பிட்டுள்ளார்[49].

1.12.3.8. தமிழில் காணப்படுவது போன்ற பாயிரம், நூலின் வரலாறு, நூலின் பெருமை, வாழ்த்து, நூலாசிரியரின் மரபுகூறல், சாற்றுக்கவி போன்றவை எதுவும் மலையாள நூலில் காணப்பட வில்லை.

### 1.12.4 தெலுங்கு:

1.12.4.0. கோத்தப்பட்டினம் வென்னெல கண்டி சுந்தரராம சர்மா என்பவரால் தெலுங்கில் ஞானவாசிட்டம் எழுதப்பட்டது. இந்த நூலுக்கு ஸ்ரீமதாந்தரவ(ச்)சன ஞானவாசிட்டம்' (வான்மீகி மகரிசியுடைய ஞானவாசிட்டத்துக்குச் சரியான தெலுங்கு) எனப் பெயரிட்டு ஆசிரியர் எழுதியுள்ளார். இந்த நூல் கி.பி. 1940 இல் எழுதப்பட்டது என அவரது வாழ்க்கைக் குறிப்பால் அறிய முடிகிறது. ஆனால் இந்த நூல் முதன் முதல் 1965இல் வி. வெங்கடேஸ்வர சாஸ்திரலு டிரஸ்டால் சென்னையில் வெளியிடப்பட்டது[50].

1.12.4.1. தமிழ், மலையாள நூற்களில் காணப்படுவது போன்று தெலுங்கில் பாடல் அமைப்புக்கள் இல்லை. உரை நடை வடிவிலேயே ஆசிரியர் எழுதியுள்ளார். ஒவ்வொரு பிர கரணத்திலும் பல பிரிவுகளை அமைத்துள்ளார். வைராக்கிய பிரகரணத்தில் இருபத்தைந்து பிரிவுகளும், முமூட்சுப் பிரகரணத் தில் பத்து பிரிவுகளும், உற்பத்திப் பிரகரணத்தில் நாற்பத்தாறு பிரிவுகளும், ஸ்திதிப் பிரகரணத்தில் இருபது பிரிவுகளும், உப சமப் பிரகரணத்தில் நாற்பத்தாறு பிரிவுகளும், நிருவாணப் பிரகரணத்தில் எண்பத்தொரு பிரிவுகளுமாக இருநூற்றி இருபத் தெட்டுப் பிரிவுகளில் செய்திகளை விளக்கமாகக் கூறியுள்ளார். பிரகரண அமைப்பிலும் கதை அமைப்பிலும் எந்த மாற்றமும் செய்யவில்லை. லகுயோக வாசிட்டத்தை பின்பற்றியே அமைத் துள்ளார். தெலுங்கு நூலில் காணப்படும் பிரிவு தமிழ், மலையாள நூற்களிலுள்ளவற்றைக் காட்டிலும் வேறுபட்டு காணப்படுகிறது. ஒவ்வொரு கதையையும் பல பிரிவுகளாகப் பிரித்துக் கூறியுள் ளார். சில கதைகளுக்குப் பிரிவு கூறப்படவில்லை.

**சான்று:**

| | கதை | | பிரிவு எண் |
|---|---|---|---|
| 1. | லீலா | உபாக்யானம் | 13 |
| 2. | கற்கடி | " | 11 |
| 3. | அயிந்தவர் | " | 4 |
| 4. | லவண | " | 12 |
| 5. | சுக்கிர | " | 6 |
| 6. | தாம முதலாவர் | " | 3 |
| 7. | மீம முதலாய அரக்கர்மார்களுடைய | " | 6 |
| 8 | தாசூர | " | 4 |
| 9. | சனகருடைய | " | 6 |
| 10. | பலிசக்கரவர்த்தி | " | 3 |
| 11. | பிரகலாத | " | 3 |
| 12. | காதி | " | 5 |
| 13. | உத்தாலக | " | 7 |
| 14. | சுரகு | " | 5 |
| 15. | பாசவிபாச | " | 6 |
| 16. | வீதகவ்வியோ | " | 10 |
| 17. | புசுண்டோ | " | 3 |
| 18. | வேதாள | " | 2 |
| 19. | பகீரத | " | 2 |
| 20. | சிகித்துவச | " | 30 |
| 21. | கம்சா | " | 2 |
| 22. | பிருங்கிசோ | " | 5 |
| 23. | இட்சுவாகோ | " | 3 |

1.12.4.2. நூலைப் படிப்பவர்களுக்கு எளிதில் புரிந்து கொள்ளும் உத்திகளில் ஒன்றாக இப்படிப்பட்ட பிரிவினை ஆசிரியர் அமைத்திருப்பார் எனலாம்.

1.12.4.3. கதைகளின் செய்திகள் ஒன்றாக இருந்தாலும் சில கதையின் பெயர்கள் தமிழிலிருந்து மாறியுள்ளன (பார்க்க அட்டவணை: 2). லகுயோகவாசிட்டத்தை அடியொற்றி நூலை அமைத்தமையால் அந்நூலிலுள்ள பெயர்களையே ஆசிரியர் அவ்வாறே கையாண்டுள்ளார் என்பது தெளிவு.

1.12.4.4. நூல் உரைநடை வடிவில் இருப்பதால் படிப்பதற்கு மிக எளிமையாக உள்ளது. இருந்தாலும் வடமொழி கலப்பு அதிகமாகக் காணப்படுகிறது.

1.12.4.5. பிரிவுகளை மலையாள நூலில் காணப்படுவது போன்றே உபாக்கியானம் என்று குறிப்பிட்டுள்ளார். சில கதை களைச் சரித்திரம் என்று குறிப்பிட்டுள்ளார்.

சான்று: 1. சுகர் சரித்திரம்
2. கசன் சரித்திரம்

1.12.4.6. தெலுங்கு ஞானவாசிட்டம் நாற்பத்தாறு சருக்கங் களைக் கொண்டது. மலையாளத்தில் உள்ளது போன்று தமிழில் இல்லாத மூன்று பிரிவுகளும் இந்த நூலில் காணப்படுகிறது. இதிலிருந்து தெலுங்கு ஞானவாசிட்டம் லகுயோக வாசிட்டத்தை மட்டுமின்றி யோகவாசிட்டத்தையும் பின்பற்றி மொழி பெயர்க்கப் பட்டுள்ளது எனக்கருதலாம் யோகவாசிட்டத்திலுள்ள உத்தரா பகுதி தெலுங்கிலும் காணப்படவில்லை.

## 1.12.5. ஒப்பீட்டின் நோக்கம்:

தமிழ்நூல் எந்த நூலைப் பின்பற்றி எழுந்தது என்பதைப் பற்றியும் எம்மொழிக்கு முன்னால் எழுந்தது என்பதைப்பற்றியும் கதை எவ்வாறு அமைந்துள்ளது என்பதைப்பற்றி அறியவும் இந்த ஒப்பீட்டு ஆய்வு செய்யப்பட்டது.

## 1.12.6. பயன்:

1,12.6.1. பிற மொழிகளின் அமைப்பை அறிய முடிந்தது.

1.12.6.2. தமிழ் மொழியிலுள்ள வேறுபாட்டை அறியமுடிந்தது.

1.12.6.3. மலையாளத்தோடு ஒப்பிட்டதால் தமிழ்ச்சொற்கள் பல இடம்பெற்றிருந்ததை அறியமுடிந்தது.

1.12.6.4. தெலுங்குநூல் உரைநடையில் இருந்ததை அறிய முடிந்தது.

1.12.6.5. தமிழ், லகுயோகவாசிட்டத்தைப் பின்பற்றியது என்பது தெளிவானது.

## 1.13. சிலப் பொதுக் கூறுகள்:

1.13.1. சமஸ்கிருதத்திலும், தெலுங்கிலும், மலையாளத்

திலும் நான்காவது ஐந்தாவது பிரகரணத்தில் தலைப்பில் சில மாற்றங்கள் காணப்பட்டாலும் பொருளில் எந்த மாற்றமும் காணப்படவில்லை தமிழில் திதி, உப சாந்தி என அமைந்துள்ளன. மற்றமொழிகளில் ஸ்திதி, உபசமம் என காணப்படுகிறது. யோகவாசிட்ட சில பதிப்புக்களில் உபசமப் பிரகரணம் என்பது உபசம காண்டம் என உள்ளது.

1.13.2. சமஸ்கிருத யோகவாசிட்ட நூலைப் பின்பற்றித் தெலுங்கு, மலையாள நூற்கள் தோன்றினாலும் அவை முழுக்க அந்த நூலைப் பின்பற்றவில்லை. நிருவாணப் பிரகரணத்தின் இரண்டாவது பாகமான உத்தராவிலுள்ள இருநூற்றிப்பதினாறு பிரிவுகளையும் எடுத்தாளவில்லை. அதனால்தான் மூல நூலிலுள்ள ஐம்பத்தைந்து கதைகளும் அந்தந்த நூல்களில் சுட்டப்படவில்லை.

1.13.3. நூலின் ஆரம்பம் மூலநூலை அடியொற்றி அமைக்கப் படவில்லை. எல்லா மொழி நூற்களிலும் லகுயோக வாசிட்டத்தில் உள்ளது போன்றே நூல் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. எனவே லகுயோகவாசிட்டத்தைப் பின்பற்றியே பிறமொழி நூற்கள் தோன்றியிருக்க வேண்டும்.

## 1.14. முடிவுகள்:

1. ஞானவாசிட்டம் இராமாயண பாலகண்ட கையடைப் படலத்தில் அறிவுரை செய்யப்பட்டிருக்க வேண்டும்.

2. அத்துவித கோட்பாட்டிற்கு ஏற்றவாறு ஞானவாசிட்டம் எனப்பெயரிட்டிருக்கவேண்டும்.

3. மலையாள, தெலுங்கு ஞானவாசிட்டத்திற்கு முன்னால் தமிழ் ஞானவாசிட்டம் எழுதப்பட்டது.

4. தமிழ் ஞானவாசிட்ட நூலாசிரியர் வீரை ஆளவந்தாரின் காலம் கி பி 17, 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பட்டகாலமாகும்.

5. உரையாசிரியர் பிறைசை அருணாசல சுவாமிகள் காலம் கி.பி. 19-ஆம் நூற்றாண்டு.

6. தமிழ் ஞானவாசிட்டம் லகுயோகவாசிட்டத்தின் மொழி பெயர்ப்பு.

7. கதைப் பெயர்களைத் தமிழ் மொழிக்கு ஏற்றவாறு அமைத்திருப்பது ஆளவந்தாரின் தனிச்சிறப்பாகும்.

**அடிக்குறிப்புகள்:**

1) ந.சி. கந்தையா பிள்ளை, செந்தமிழ் அகராதி, 1960, ப. 324.
2) ச. கந்தசாமி முதலியார், க.க., தொகுதி ஐந்து, 1958, ப. 298
3) ஞானவாசிட்ட உரைச் சிறப்புப்பாயிரம், 1901, வரி. 30.
4) T.G. Manikar, The Vasistha Ramayana-A Study, 1977 Page. 1.
5) வரகூர் கவிதிலகர் சாமுமேனோன், ஞானவாசிட்டம், 1982, பூமிகா, ப. 3.
6) ச. கந்தசாமி முதலியார், க.க. தொகுதி ஐந்து, 1958, ப. 291.
7) சுந்தரமாணிக்க யோகிஸ்வரர் நவநீதம், ஆண்டு குறிக்கப் படவில்லை, ப 9.
8) ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, 1981 ப. 142.
9) அட்டாவதானம் வீராசாமி செட்டியார், விநோதரச மஞ்சரி, 1961, பக். 61, 62.
10) ஆர். இராமாநுஜசாரியர், க.க. தொகுதி எட்டு, 1961, ப. 579.
11) மு. அருணாசலம், தமிழ்இலக்கிய வரலாறு - 12-ஆம் நூற்றாண்டு, 1973, ப. 765.
12) சு.அ. இராமசாமி புலவர், சிறப்புப் பெயர் அகராதி, 1970, ப. 57.
13) ஆர். இராமானுஜாசாரியர், க.க, தொகுதி எட்டு, 1961, ப. 579.
14) கா. சுப்பிரமணிய பிள்ளை, இலக்கிய வரலாறு (இரண்டாம் பாகம்), 1973, ப. 851
15) மது. ச. விமலானந்தம், தமிழ் இலக்கிய வரலாறு, 1979, ப. 292.
16) மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு - 12 ஆம் நூற்றாண்டு, 1973, ப. 761.
17) ச. கந்தசாமி முதலியார், க.க. தொகுதி ஐந்து, 1958, ப. 291.

18) அ) மு. சண்முகம் பிள்ளை, க.க. தொகுதி பத்து, 1968, ப. 48.
ஆ) ந.சி. கந்தையாபிள்ளை, தமிழ்ப்புலவர் அகராதி (புலவர் அகரவரிசை), 1960, ப. 39.
இ) மு. கோவிந்தசாமி, தமிழ்இலக்கிய வரலாறு (இலக்கியத் தோற்றம்), 1969, ப. 113.
19) ஆர். இராமானுஜசாரியர், க.க தொகுதி எட்டு, 1961, ப. 579.
20) மது. ச. விமலானந்தன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.292
21) ந.சி. கந்தையா பிள்ளை, தமிழ்புலவர் அகராதி, (புலவர் அகரவரிசை), 1960, ப. 39.
22) சு.அ. இராமசாமிப்புலவர், சிறப்புப்பெயர் அகராதி, 1970 ப. 57.
23) அ) ஆ) சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப. 142.
ஆ) மு. சண்முகம் பிள்ளை, க க. தொகுதி பத்து, ப.48.
இ) மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 1969, ப. 115. 115-ஆம் நூற்றாண்டு, 1969, ப. 835.
ஈ) மு. கோவிந்தசாமி, தமிழ் இலக்கிய வரலாறு, 1979, ப. 115.
உ) மது. ச. விமலானந்தன், தமிழ் இலக்கிய வரலாறு, ப. 292.
24) ச கந்தசாமி முதலியார், க.க., தொகுதி ஐந்து, ப.291.
25) சு. அ. இராமசாமிப்புலவர், சிறப்புப்பெயர் அகராதி, ப 57.
26) B. Kuppuswamy, Quintessence of Yoga Vasishtha, 1978, Page. 2
27) B.L. Atraya, The Philosophy of Yoga Vasishtha, Pages 7, 13.
28) T.G. Manikas, The Vasishtha Ramayana – A study, page.1
29) மது.ச. விமலானந்தம், ப. 292.
80) ரா.பி. சேதுபிள்ளை, க.க., தொகுதி மூன்று, 1956, ப.214.
31) பி ஜி. கருத்திருமன், கம்பர் கவியும் கருத்தும், 1963, ப.22.
82) எஸ். வையாபுரிப்பிள்ளை, தமிழ் இலக்கிய சரித்திரத்தில் காவிய காலம், 1957, ப. 80.

33) மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு - 15 ஆம் நூற்றாண்டு, ப. 335.

34) அ) மு சண்முகம்பிள்ளை, க.க., தொகுதிபத்து, ப.48.

ஆ) ந.சி. கந்தையாபிள்ளை, தமிழ் புலவர் அகராதி, ப. 39.

இ) மு. கோவிந்தசாமி, ப. 115.

35) கழகத்தமிழ் அகராதி, 1974, ப. 881.

36) ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகாநந்தகிரி, பக்தி ஞானாமிர்தம், 1974, ப. 80.

37) சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ.), ஸ்ரீமத் பகவத்கீதை, 1980, ப. 36.

38) கழகத் தமிழ் அகராதி ப. 588.

39) கழகத் தமிழ் அகராதி ப. 671.

40) சுவாமி ஞானானந்த சரஸ்வதி, லகுயோக வாசிட்ட சங்கிரகம், 1981, பக். 1-3.

41) பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார் (மொ. பொ.), மண்ணியல் சிறுதேர் (அணிந்துரை), 1968, ப.19

42) வே. ராகவன், க.க., தொகுதி ஆறு, 1959, ப. 372.

43) அ) சு.அ இராமசாமிப்புலவர், தமிழ்ப்புலவர் அகரவரிசை இரண்டாம் தொகுதி, முதல் பகுதி, 1962, ப. 48.

ஆ) க. சுப்பிரமணியபிள்ளை, ப. 351.

இ) வ.சுப. மாணிக்கம், தமிழ் இலக்கிய அகராதி, இலக்கிய அகரவரிசை, 1952, ப. 65.

44) மு. சண்முகம்பிள்ளை, க.க., தொகுதிபத்து, 1968, ப.48.

45) ந.சி. கந்தையாபிள்ளை, தமிழ் இலக்கிய அகராதி, இலக்கிய அகரவரிசை, ப. 65.

46) தமிழ்ப் பல்கலைக்கழகச் செய்திமலர், தஞ்சை, 14-6-1983, ப.8.

47) Sri Jnanananda Bharati, The Essense of Yoga Vasishtha, Page (iii)

48) வரலூர் கவிதிலகன் சாமுமேனோன், ஞானவாசிட்டம், பூமிகா, ப.3.

49) சுவாமி ஞானானந்த சரஸ்வதி, லகுயோக வாசிட்ட சங்கிரகம், ப.3.

50) வென்னெலக்கண்டி சுந்தரராமசர்மா, ஸ்ரீமதாந்த ராவச்சன ஞானவாசிட்டம், 1965

—0—

# 2. ஞானவாசிட்டக் கதைகள்

2.0. ஞானவாசிடத்தில் காணப்படும் கதைகளையும் அவை உணர்த்தும் கருத்துக்களையும் சுட்டிக் காட்டுவதே இந்த இயலின் நோக்கமாகும். கதைகளே நூலில் முக்கிய பங்கு வகிப்பதால் அவற்றை இந்தப் பிரிவில் விரிவாக விளக்கப் பட்டுள்ளது.

2.0.1. இந்த இயலில் கதையின் அமைப்பு, அதன் வளர்ச்சி நிலை, கதைகள், அமைப்புகள் ஆசிரியர் கையாண்டுள்ள உத்திகள் போன்றனவும் சுட்டப்பட்டுள்ளன.

2.0.2. கதைச்சுருக்கம் என்றப் பிரிவில் ஒவ்வொரு முதல் பகுதி கதைச் சுருக்கத்தையும், அடுத்தபகுதி கதையால் அறியப்படும் செய்திகளையும், மூன்றாவது பகுதி கட்டுரையாளரால் கொடுக்கப்படும் விளக்கத்தையும் காணலாம்.

## 2.1. அமைப்பு:

ஞானவாசிட்டத்தில் ஆறு பிரகரணங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் முப்பத்தேழு கதைகள் அமைந்துள்ளன. முதல் பிரகரணத்தில் ஒரு கதையும் மூன்றாவது பிரகரணத்தில் எட்டுக் கதைகளும், நான்காவது பிரகரணத்தில் ஐந்து கதைகளும், ஐந்தாவது பிரகரணத்தில் ஒன்பது கதைகளும், ஆறாவது பிரகரணத்தில் பதினான்கு கதைகளும் காணப்படுகின்றன. இரண்டாவது பிரகரணத்தில் கதை கூறப்படவில்லை.

## 2.2. கதைகளை அமைத்துள்ள பாங்கு (கதை வளர்ச்சி):

2.2 0. இராமனின் வைராக்கிய நிலை எவ்வாறு இருந்தது. அது எவ்வாறு நீக்கப்படலாம் என்பதற்கு ஞானிகள் கூறும் முறையில் ஆசிரியர் அமைத்துள்ளப் பாங்கை நூலில் காண முடிகிறது.

2.2.1. வைராக்கியப் பிரகரணத்தில் இராமன் எவ்வாறு இருந்தான் என்பதை விளக்குவதற்குச் சுகரைப் போல (உறைப்பு நிலையில்) இருந்தான் எனக் கூறி முதல் கதையை விளக்கி யுள்ளார் ஆசிரியர்.

2.2.2. முமூட்சுப் பிரகணத்தை அமைத்து அதன் பின்பு நான்கு பகுதிகளாகப் பகுத்து மோட்சத்தை அடைய ஆசை

கொண்டவர்களின் நிலை எவ்வாறு இருக்கும் என்றும், நிலை பேறு எவ்வாறு இருக்கும் என்றும், எந்தவகையான மனஅமைதி உடையவர்களுக்கு அந்த நிலை கிடைக்கும் என்றும், மோட்ச நிலையை அடைந்தவர்கள் எந்தவகையான இன்பம், மனநிலை உடையவர்களாக இருப்பார்கள் என்றும் முறையே உற்பத்தி, திதி, உபசாந்தி, நிர்வாணப் பிரகரணங்களில் விளக்கப்பட்டுள்ளது. இந்த நிலையில் கதையை ஆசிரியர் வளர்த்துச் சென்றுள்ள பாங்கைக் காண முடிகிறது [பார்க்க. 2.40.].

2.3. கதை: கதை என்பதற்குக் காரணச் சொல், உரையாடல், சரிதை, வரலாறு போன்ற பல பொருட்கள் உள்ளன[1]. ஞானவாசிட்டத்தில் காணப்படும் கதைகளில் பல காரணச்சொல் அமைப்பிலே உள்ளன. சரிதை, வரலாறு போன்ற அமைப்பு நூலில் காணப்படவில்லை. சிகித்துவசன் கதை ஓரளவு வரலாறு என்ற அமைப்பில் காணப்படுகிறது. உரையாடல் என்ற பொருளே ஞானவாசிட்டத்தில் உள்ள கதைகளில் அதிகமாக காணமுடிகிறது. இந்த நூலில் கதை என்ற பிரிவு உரையாடலை அடிப்படையாகக் கொண்டது என்பதில் ஐயமில்லை.

குறுக்க எண் விளக்கங்கள்:

முதலில் உள்ள எண் இயலையும்;
இரண்டாவது உள்ள எண் இயலில் உள்ள பிரிவையும்;
மூன்றாவது உள்ள எண் கதை எண்ணையும்;
நான்காவது உள்ள எண் பிரகரண எண்ணையும்;
ஐந்தாவது உள்ள எண் பிரகரணத்தில் உள்ள கதை எண்ணையும்;
ஆறாவது உள்ள எண் கதையின் உட்பிரிவுகளையும்குறிக்கும்

எ.டு. 2.4.1.1.1.1.

2—இரண்டாவது இயல்
4—கதைகள் என்ற பிரிவு
1—மொத்த கதையின் வரிசையில் ஒன்று
1—முதல் பிரகரணம் (வைராக்கியப் பிரகரணம்)
1—முதல் பிரகரணத்திலுள்ள சுகர் கதை.
1—முதல் கதையிலுள்ள உட்பிரிவு, கதை உணர்த்தும் செய்திகள்].

1. வைராக்கியப் பிரகரணம்

1.1. சுகர்கதை

↓

2. முமுட்சுப் பிரகரணம்

↓

**3. உற்பத்திப் பிரகரணம்**

1. ஞானவிண்மகன் கதை
2. லீலை கதை
3. கற்கடி கதை
4. ஆயித்தவர் கதை
5. வஞ்ச விந்திரன் கதை
6. மனத்தின் கதை
7. பாலன் கதை
8. சித்தன் கதை

**4. திதிப் பிரகரணம்**

1. சுக்கிரன் கதை
2. தாமவியாள கடர்கதை
3. வீமபாச திடர்கதை
4. தாசூரன் கதை
5. கசன் கதை

**5. உபசாந்திப் பிரகரணம்**

1. சனகராசன் கதை
2. புண்ணியபாவனன் கதை
3. மாவலி கதை
4. பிரகலாதன் கதை
5. காதி கதை
6. உத்தாலகன் கதை
7. சுரகு கதை
8. பாசவிபாசன் கதை
9. வீதகவ்வியன்கதை

**6. நிர்வாணப் பிரகரணம்**

1. புசுண்டன் கதை
2. தேவபூசை கதை
3. வில்வபலக் கதை
4. சிலைக் கதை
5. அருச்சினன் கதை
6. சதவுருத்திரர் கதை
7. வேதாள கதை
8. பகீரதன் கதை
9. சிகித்துவசன் கதை
10. கசன் கதை
11. மித்தையாபுருடன் கதை
12. விரதசூயை கதை
13. இட்சுவாகு கதை
14. மானுவேடன் கதை

### 2.4.1.1.1. சுகர்கதை

2.4.1.1.1.0. வியாசருடைய மகன் சுகர். அவன் உண்மையை அறிய நினைத்துத் தந்தையிடம் துக்கமயமான மாயையைப் பற்றிக் கேட்டான். மாயை எப்படி வந்தது; அதை அழிப்பது எப்படி; தொடர்ச்சியில் அது யாரை உடையது; எவ்வளவு காலம் இருக்கும்; எப்போது உண்டாயிற்று எனப் பல சந்தேகங்களைக் கேட்டான். வியாசர் இவை பற்றிய விளக்கம் அனைத்தையும் கூறியும் மன அமைதி அடையாமல் சுகர் இருக்கவே, வியாசர் சுகரிடம் நீ சனகரையே கேட்டு தெளிவாயாக என்று கூறி அனுப்பிவைத்தார். சுகர் சனக அரசன் அரண்மனை சேர்ந்தான். அவன் வந்திருக்கும் காரணத்தை மனத்தினால் அறிந்து கொண்ட சனகர் நேரில் வரவேற்கவில்லை. சுகரும் அதைப் பொருட்படுத்தவில்லை. சனகர், சுகனை வாயிலிலே ஏழு நாள் காத்திட வைத்துப் பக்குவச் சோதனை செய்தார். இரண்டாவதாக உள் வாயிலில் ஏழுநாள் இருக்க வைத்து குரோத (சினம்) சோதனை செய்தார். மூன்றாவதாக அந்தப்புரத்திற்கு அழைத்துச் சென்று போக மோக சோதனை செய்தார் சனகர். சுகர் போகத்தில் மகிழ்ச்சியும் அவமதிப்பில் இகழ்ச்சியும் அடையவில்லை. அதைப் பார்த்த சனகர் சுகரைச் சென்று அழைத்து மனத்தால் எல்லாவுண்மைகளையும் அறிந்தவனுக்கு மற்றவர் அறிவுரை தேவையில்லை என்று கூறி அனுப்பி விட்டார்,

### 2.4.1.1.1.1. கதையால் அறியப்படுபவை:

1. மன உறுதி இருந்தால் கற்றபின் எவரிடமும் சந்தேகம் கேட்க வேண்டிய நிலை ஏற்படாது.
2. தான் உணர்ந்து அறிவதே அறிவு.
3. மன உறுதியால் பந்த மற்ற நிலையும் அறிவும் ஏற்படும்.
4. மன உறுதியோடு இருந்தால் எந்த வகைப் போகங்களில் ஈடு பட்டாலும் அவற்றில் பற்று இல்லாது இருக்கும் நிலையும், அகம்பாவம அற்றிருக்கும் நிலையும் ஏற்படும்.
5. எண்ணம் (சங்கற்பம்) நீங்கினால் முத்தி கிடைக்கும்.

2.4.1.1.1.2. வேதவியாசர் வழங்கிய தேவிபாகவதம் என்ற நூலில் இந்தக் கதைச் செய்தியை நான்கு பகுதிகளாகப் (சுகர் வைராக்கியம், வழிகாட்டிய கதை, மிதிலை நகரத்து அனுபவங்கள், சுகர் சனகா விவாதம்) பிரித்து விளக்கப்பட்டுள்ளது[2].

### 2.4.2.3.1. ஞானவிண்மகன் கதை:-

2.4.2.3.1.0. ஞானவிண்மகன் அந்தணர் குலத்தவன். ஞான ஆகாயமே அவன் உண்டாவதற்குக் காரணமாகும். காலன் உலக உயிர்களை உணவாகக் கொள்கிறவன். ஞானவிண்மகன் பல நாட்களாகியும் அழியாமல் இருப்பதைக் கண்ட காலன் அவனை அழிக்காமல் இருந்த காரணத்தை அறிய வேண்டி அவன் ஊருக்குச் சென்றான். ஞானவிண்மகனைக் காலன் தன்னுடைய ஆயிரம் கையினால் பிடித்து இழுத்தான். அவன் அகப்பட வில்லை அந்தச் செய்தியை இயமனிடத்தில் சென்று காலன் முறையிட்டான். இயமன், உலகம் கன்மத்தினால் அல்லாமல் அழியாது. ஒருவருக்கு உதவி செய்வது அவர்களுடைய கருமங்களே ஆகும். எனவே, அவற்றையே ஆயுதமாகக் கொண்டு செல்ல வேண்டும் என்றான். காலன் அந்தணன் செய்த கருமங்களைத் தேடினான். எதுவும் அகப்பட வில்லை. திரும்ப வந்து இயமனிடம் கூறினான். அவன் ஞான ஆகாயத்தில் பிறந்ததினால் கருமங்களைச் செய்யவில்லை. அவனைப் பிடிக்க முயற்சி செய்வதினால் பயன் இல்லை என்று இயமன் கூறினான். காலன் தனது இடத்திற்கு ஆச்சரியத்துடன் சென்றான்.

### 2.4.2.3.1.1. கதையால் அறியப்படுபவை:-

1. ஒருவனுக்கு அவன் செய்த கன்மங்களே விரோதமாக இருக்கும்.

2. பிரம்மமே ஞான விண்மகன்; பிரம்மத்துக்கு அழிவில்லை; மற்ற உயிர்களுக்கு அழிவுண்டு.

3. பிரம்ம ஞானத்தால் பிறந்தவர்கள் கன்மங்களைச் செய்வதில்லை.

4. பிரம்மத்துக்குப் பூத உடலும் புகழுடலும் ஒன்று என்றும் உலக மக்களுக்கு இரண்டு என்றும் கூறுவர்.

5. அறிவினால் உண்டான எண்ணம் அறிவே; அறிவுக்கு அழிவு இல்லை.

6. சங்கற்ப வடிவமாய்ச் சடசித்துக்களில் சஞ்சரிக்கின்ற மனத்துக்கு மோகம் முதலிய பெயர்கள் மாத்திரமே உண்டு. உருவம் கிடையாது.

7. இயமன் வேறு காலன் வேறு.

2.4.2.3.1,2. இயமன் காலன் என்ற இருவரும் இந்தக் கதையில் வெவ்வேறாகக் குறிப்பிட்டுள்ளனர். ஆனால் பொதுவாக இருபெயரும் ஒருவரையே சுட்டுவதாகக் கூறுவர். அபிதான சிந்தாமணியில் காலன் இயமனது மந்திரிகளில் ஒருவராகக் குறிப்பிடப்பட்டுள்ளான்[3].

2.4.2.3 1.3. இந்தக் கதையில் அந்தணன் என்று குறிப்பிட்டிருப்பதின் பொருள் நற்குண நற்செயல் உடையவன் என்பதாகும்.

**2.4.3.3.2. லீலை கதை:-**

2.4.3.3 2.0. லீலை பதும மன்னனின் மனைவி. லீலை தன் கணவன் மேல் கொண்ட அன்பினால் எப்பொழுதும் இளமையுள்ளவனாகவும், மரணம் அடையும் போது அவன் சீவன் அவள் வீட்டிலே இருக்க வேண்டும் என விரும்பினாள் அதற்காக அந்தணர்களிடம் வழி கேட்டாள் அவர்கள் உலகில் பிறந்தவர்கள் இறப்பது உறுதி எனக் கூறி மறுத்து விட்டனர். அதனால், அவள் சரஸ்வதி தேவியை வேண்டித் தவம் இருந்து தன்னுடைய எண்ணத்தைக் கூறி வரம் பெற்றுக் கொண்டாள். ஆண்டுகள் பல சென்றபின் லீலையின் கணவன் மரணமடைந்தான். சீவன் பிரிவதற்கு முன்னே சரஸ்வதி தோன்றி லீலையின் மோகத்தை மாற்றினாள். மரணமடைந்த அரசனது உடலைப் பூக்களால் மூடி வைத்தால் பூக்கள் வாடும். உடல் கெடாது. சீவன் அந்தப் புரத்தில் அடைந்திருக்கும் என்றும் அதனால் துக்கம் தீர்வதாகவும் எனக் கூறி மறைந்தாள். அவ்வாறே செய்த பின் லீலை சரஸ்வதியை நோக்கித் தனது நாயகனைப் பிரிந்து தன்னால் வாழ முடியாது என்றும், அவன் சேர்ந்த இடத்தில் தன்னையும் சேர்த்திட வேண்டும் என்றும் கேட்டாள். சரஸ்வதி லீலைக்கு அருள் கொடுக்க அவள் தன் உடலை நீக்கி வானில் பறந்து சென்றாள். பதுமன் அடுத்த பிறவியில் வீற்றிருக்கும் அரசவைக்குச் சென்று அங்கு நடந்தவற்றைப் பார்த்துத் திரும்ப தனது உடலில் புகுந்து கொண்டாள்.

சரஸ்வதியிடம் திரும்பவும் தனது நாயகனுக்கு இறந்த பின்பு முன் போலவே பந்தமுள்ள பிறப்பு உண்டான காரணத்தைக் கேட்டாள். சரஸ்வதி, வசிட்டர் என்ற

அந்தணன் இந்த நாட்டில் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி அருந்ததியாவாள். ஒரு சமயம் அரசன் ஒருவன் தன் பரிவாரங்களுடன் அந்தணன் தங்கியிருந்த குடிசைப் பக்கமாகச் செல்லக் கண்டான். அதைப் பார்த்த அந்தணன் எப்பொழுது தாம் அரசனாக மாறுவோம் என்று எண்ணி எண்ணி உயிர் விட்டான். அதன் பயனால் அடுத்த பிறவியில் பதுமன் என்னும் அரசன் ஆனான். அருந்ததியும் அவ்வாறே வேண்ட அவன் மனைவியாக வந்தாள். இந்தப் பிறவியிலும் அவ்வாறே வேண்ட விடூரதன் பிறப்பு உண்டாயிற்று என்றாள். இதை ஞானக் கண்ணால் பார்ப்பாயாக என்று தேவி அருள் செய்ய லீலை பார்த்தாள்.

லீலை முற்பிறப்பை நேரில் பார்க்க ஆசைப்பட்டு உடம்பை நீக்கித் தேவியுடன் சென்றாள். முற்பிறப்பில் தன் குழந்தைகள் வருத்தத்தில் இருப்பதைக் கண்டு அவர்களுக்கு ஆறுதல் கூறினாள். விடூரதன் பிறப்பைக் காண இருவரும் விடூரதன் அரண்மனைக்கு வந்தனர். விடூரதன் போர்க்களத்தில் இருந்து வீட்டிற்கு வந்து உறங்கிக் கொண்டிருந்தான். சரஸ்வதி விடூரதனின் அமைச்சனை எழுப்பி அவர்கள் வரலாற்றைக் கூறக் கேட்டாள். அவன் வரலாற்றை வரிசைப்படிக் கூறினாள். பின் அரசனை எழுப்பி ஞானத்தினால் அவனது பழம் பிறப்பைப் பார்க்கச் செய்தாள். விடூரதன் தேவியைப் பார்த்து அவனது பழைய உடலை அடையும் காலத்தைக் கேட்டான். அவள் இப்போரில் இறந்த பின் பழைய பிறப்பை அடைவாய் எனக் கூறினாள். அந்த நேரம் ஒருவன் போருக்காக அழைக்க, புறப்பட்டான். வழியில் அவன் மனைவி வர, சரஸ்வதி காப்பாள் எனக் கூறிச் சென்றான். புதிய லீலையைப் பார்த்து, தேவியானவள், விடூரதன் பழைய லீலையைப் போல மனைவி வேண்டும் என்று ஆசைப்பட்டதால் புதிய லீலை பிறந்ததாகச் சரஸ்வதி கூறினாள். அரசன் அந்தப் போரில் மரணமடைந்து பழைய உடலில் போய்ச் சேர்ந்தான். மற்றவர்களும் லீலையின் அந்தப்புரம் வந்தனர். சரஸ்வதி பழைய புதிய லீலைகளையும் அரசனையும் வாழ்த்திச் சென்றாள். அவர்கள் பல ஆண்டுகள் நாட்டை ஆட்சி செய்து விதேக முத்தியை அடைந்தனர்.

**2 4.3.3.2.1 கதையால் அறியப்படுபவை:**

1) பிறந்தவர்கள் அனைவரும் இறப்பர்.

2) இறந்தவர்கள், அவர்களின் எண்ணங்களைப் போல பிறப்பார்கள்.
3) ஞானம் பெற உடல் தடையாக அமையும்.
4) ஞானம் எங்கும் நிறைந்திருக்கும் (எல்லாம் சிதாகாய வடிவமே).
5) பிறவிகள் தோறும் கன்மங்கள் தொடரும்.
6) தான் என்னும் அகங்காரம் இருந்தால் ஞானத்தை அடைய முடியாது.
7) அன்பினால் இறைவனிடம் விரும்பிக் கேட்டது கிடைக்கும்
8) சமாதி நிலையை அடைந்திருந்தாலும் அகம்பாவம் இல்லாது இருக்க வேண்டும்.
9) மனத்தினால் தான் கால அளவு தோன்றியதேயன்றி உண்மையில் இல்லை (ஒருநாள் = எழுபது வருடம்; லீலை: 59:3).

2.4.3.3.2.2. ஸ்ரீ சின்மயாநந்த பதிப்பில் லீலை கதை லீலை (மண்டபக்)கதை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. விளக்கம் கொடுக்கப்படவில்லை. தலைப்புக்கும் செய்திக்கும் எவ்வகையில் பொருந்தியுள்ளது என்பது ஆய்வுக்குரியது.

### 2.4.4.3.3. கற்கடி கதை:

2.4.4.3.3.0. இமயமலைக்கு வடக்குப் பக்கத்தில் கற்கடி என்னும் அரக்கி வாழ்ந்து வந்தாள். அவள் உலகிலுள்ள உயிர்களை உண்டும் பசி நீங்காமையால், பசியைக் குறைக்க வேண்டி, பிரமனை நோக்கி ஆயிரம் ஆண்டுகள் தவம் இருந்தாள். பிரமன் காட்சி கொடுக்க தன் உயிர் ஊசியாக வேண்டும் என்று வேண்டினாள். பிரமன் விரும்பத்தகாத உணவை உண்போர்களுடைய உயிரோடு கலந்து கொள், மற்றவர்களை ஏதுவும் செய்யாதே என்று கூறி அவள் கேட்ட வரத்தையும் கொடுத்து மறைந்தான்.

கற்கடி உயிருடைய ஊசிவடிவமெடுத்தும் திருப்தி அடையாமல் பழைய உருவத்தை அடைந்தாள். அதன் பிறகு பிரமன் வாக்குப்படி நடக்க வேண்டி வேடர்கள் நாட்டை அடைந்து அறியாமையில் மூழ்குபவர்களை மட்டும் கொன்று உண்டு காட்டில் வாழ்ந்து வந்தாள். அவ்வாறு இருக்க ஒருநாள் அந்

நாட்டு அரசனும் அமைச்சனும் அங்கு வந்தார்கள். அவர்களைக் கண்ட அரக்கி அவர்கள் அறியாமையில் மூழ்கியவர்களாக இருப்பர் என நினைத்து அஞ்சும்படி ஆரவாரித்தாள். அதற்கு அவர்கள் அஞ்சாமல் இருக்க, பக்கத்தில் சென்று யார் என்று கேட்டாள். அமைச்சன் அவளைப்பார்த்து. அவன் வேடர்களுக்கு அரசன் என்றும், தான் அவனது அமைச்சன் என்றும் கூறினான். மேலும் அவளைப் போன்ற தீயவர்களை அடக்க தாங்கள் வந்திருப்பதாகவும் கூறினான். அதைக் கேட்ட அரக்கி, தான் கேட்கும் கேள்விகளுக்கு பதில் கூறினால் விட்டுவிடுவேன் என்றும் இல்லாவிட்டால் இருவரும் தனக்கு உணவாக வேண்டும் என்றும் கூறி கேள்விகளைக் கேட்டாள். அதற்கு அரசனும் அமைச்சனும் தெளிவான பதிலைக் கூறினார்கள்.

கற்கடி மகிழ்ந்து அவர்களுக்குத் தான் செய்யும் உதவியாது என்று கேட்டாள். அவர்கள், உயிர்களைக் கொல்லாது இருக்க வேண்டும் என்றும் தங்களுடன் நட்பாகி வந்தால் கொலை செய்பவர்கள், கள்வர்களுடைய உடலை உணவாகத் தருவதாகவும் கூறினர். கற்கடியும் சம்மதித்து அரசனுடன் சென்றாள். பகல் பொழுதில் திருமகள் போலவும் இரவில் அரக்கி போலவும் வாழ்ந்து வந்தாள். அரசன் வாக்களித்தபடி தன் நாட்டிலுள்ள கொலைகாரர்களை அவனுக்கு உணவாகக் கொடுத்தான். அவள் மகிழ்ச்சியாக வாழ்ந்து பின் விதேக முத்தியை அடைந்தாள்.

### 2.4.4.3.3.0.1. கற்கடியின் கேள்விகள்:

கடலில் தோன்றும் குமிழிகள் போல ஒன்றான எந்த அணுவுக்கள் அளவிறந்த உலக வரிசைகள் பலவாய், விரிந்து, தோன்றி ஒடுங்கும்? ஆகாயமாகியும் ஆகாயம் அல்லாததும் எது? வரையறை உள்ளதாய் இருந்தும் இல்லாததும் எது? நடமாட்டம் உள்ளதும் இல்லாததும் எது? காணக் கூடியதும் கூடாததும் எது? சித்தாகியும் கல்லாகியும் தெரிவது எது? ஆகாயத்தில் சித்திரம் எழுதுகின்றது எது? விதையினிடத்தில் மரங்களைப் போல எந்த அணுவில் உலகங்கள் எல்லாம் இருக்கின்றது? எதனிடத்திருந்து தோன்றி கடலில் உண்டானஅலைநுரைகளைப் போல எந்தப் பொருளும் வேறுபடாமல்; நிறைந்த நீரையும் குறைவற்ற நெகிழ்ச்சியையும் போல உண்டாகி இந்த இரண்டும் எங்கு ஒன்றாயிருக்கும்?

### 2.4.4.3.3.0.2. பதில்கள்:

மன முதலிய ஆறு இந்திரியங்களுக்கு எட்டுதற்கரிய தன்மையினால் ஞானமாயும், ஆகாயத்தில் அற்பமாயும் பரம அணுவாயும் இருக்கின்ற பொருட்களுக்குள் உலகம் அனைத்தும் உண்டாகி வளர்ந்து அழியும். பிரம்மத்துக்கு வேறானது இல்லாத படியால் பிரம்மமே ஆகாயமாகும். அது ஞானமாகி இருத்தலால் பூதாகாயமல்ல. சுட்டியறிதற்கரிய தன்மையினால் நிலையில்லாததாகும். சத்தாய் இருத்தலால் உள்ளதாகும். சிறிதாக பிரகாசிப்பதால் ஞானமாகும். அறியும் தன்மை இல்லாததால் திடமாக இல்லைப் போலாகும். தானாக இருக்கிற சிதாகாயத்தில் உலக வரிசையாகிய சித்திரத்தைத் தானே எழுதும். உலகம் அனைத்தும் தனது ஒளியாகையால் பொருளுக்கு அன்னியம் ஒன்றுமில்லை. உலகத்திலுள்ள பொருட்கள் எல்லாம் அழியும் தன்மையுடையன. பொருட்கள் உணர்வால் உலாவிக் கொண்டிருக்கும். அது தன்னை தவிர வேறு இடமில்லையாதலால் அலையவில்லை. தனக்கு அன்னியமாய் வேறு இடமில்லையாதலால் அது இல்லை. எல்லாப் பொருட்களிடத்தும் சத்தாய் இருப்பதால் அவை தோன்றும்.

### 2.4.4.3.3.1. கதையால் அறியப்படுபவை:

1) அறிவற்றவராக இருந்தாலும் அருந்தவம் செய்தால் நினைத்த பொருள் கிடைக்கும்.
2) எந்த வகையான வேடம் தரித்தாலும் மனமே எல்லாவற்றிற்கும் காரணம்.
3) விரும்பத்தகாத உணவுகளை உண்போர்கள் வெறுக்கப் படுகின்றனர்.
4) அத்வைதப் பிரம்மமே எல்லாம்.
5) நல்ல அமைச்சன் அரசனுக்குக் கிடைத்தால், எல்லா வகையிலும் அரசன் நன்மை அடைபவனாக இருப்பான்.
6) கொடியவர்களானாலும் அன்பினால் நட்பாவார்கள்.
7) வேதமே எல்லாவற்றிற்கும் முக்கியமானதாகும்.

2.4.4.3.3.2. ஸ்ரீ சின்மயாநந்த பதிப்பில் இந்த கதைக்குக் கர்க்கடி (சூசி) கதை எனப் பெயரிடப்பட்டுள்ளது. கர்க்கடியின் சூசி வடிவத்தையும் கதைப் பெயரோடு இணைத்து தலைப்பு கொடுத்திருக்கலாம்.

## 2.4.5.3 4. அயிந்தவர்கதை:

2.4.5 3.4.0. பிரமதேவன் படைப்புகள் அனைத்தையும் நிறுத்திவிட்டு இரவில் உறங்கச் சென்றான். உதயகாலத்தில் உலகத்தைப் படைப்பதற்கு ஆகாயத்தைப் பார்த்தான். மனத்தினால் விரியும் ஆகாயத்தில் பலவிதமான படைப்புக்கள் உருவாகி இருப்பதைக் கண்டான். அவற்றைப் படைத்தவரை எண்ணி வியப்புற்றான். அதில் ஒரு சூரியனை அழைத்து படைத்தவர் யார் என்று கேட்டான். சூரியன், சம்புத்தீவிலுள்ள இந்து வென்னும் அந்தணன் குழந்தை இல்லாமையால் மனைவி யுடன் கயிலைமலைக்குச் சென்று பரமசிவனை நோக்கித் தவம் செய்தான். சிவன் காட்சி கொடுக்க கல்வி அறிவில் சிறந்த பத்து குழந்தைகள் வேண்டும் என்று இந்து கேட்டான். பரமசிவன் அவ்வாறே கொடுத்துச் சென்றான். பத்துபேர்களும் தாய் தந்தையர் மறைவுக்குப் பின் கயிலைமலையில் சென்று சிந்தனை செய்தார்கள். தமது பிறப்பு நீங்கும்படி சிற்றரசர்களாக வேண்டும் என்றும், அந்தப் பதவி குறைவாதலினால் அரசராக வேண்டும் என்றும், அதுவும் சிறிது ஆகையால் தேவேந்திரனாக வேண்டும் அதுவும் குறைவாதலினால் பிரமனாகுதலே குற்றமற்ற செல்வம் என்றும் பத்துபேர்களும் நிச்சயித்தார்கள். பத்துபேரும் பத்மா சனத்திலிருந்து ஒவ்வொரு வரும் பிரமதேவனே என்றும் படைப்பு கள் யாவும் தாமே என்றும் சொல்லி படைப்புத் தொழிலைச் செய்தனர். பத்து உலகம் உண்டாயிற்று. அவற்றுள் தானும் ஒருவனே எனக் கூறிச் சென்றான்.

### 2.4.5.3.4.1. கதையால் அறியப்படுபவை:

1) மனமே அலவற்ற படைப்புக்களுக்கு காரணமாக விளங்கும்.
2) மனமே பிரம்மம்; மனமே உலகம்; மனமே எல்லாம்.
3) ஞானசக்தியினுடைய விரிவே உலகம்.

2.4 5.3.4.2. கதையின் தலைப்பு கதையின் ஓட்டத்திற்கு பொருத்தமாக அமைந்ததாகத் தெரியவில்லை. ஐந்தவர்கதை என சில நூல்களில் இந்தப் பகுதிக்குப் பெயர் உள்ளது. ஐந்தவர் என்றால் ஐந்து பேரைக் குறிக்கும். ஆனால் பத்து பேர்கள் பத்து உலகத்தைப் படைத்ததாகக் கதைச் செய்தி கூறுகிறது. இஃது ஆய்வுக் குரியதாகும்.

## 2.4.6.3.5. வஞ்சவித்திரன் கதை:

2.4.6.3.5.0. மகத நாட்டை ஆண்டுவந்த இந்திரத்துய்ம்மன் என்னும் அரசனின் மனைவி அகலிகை. அந்நாட்டில் இந்திரன் என்னும் காமுகன் (தூர்த்தன்) ஒருவன் வாழ்ந்து வந்தான். புராணத்தில் அகலிகையுடன் இந்திரன் நடத்திய வாழ்க்கையைக் கேட்டு இந்த நாளில் தாங்களும் அவர்களொன்று இருவரும் இன்புற்று வந்தனர். அதை அறிந்த அரசன் அவர்களை நீரில் அழுத்தியும், தீயில் வெதுப்பியும், யானையால் இடறும்படி செய்தும், சவுக்கால் அடித்தும் வருத்தினான். அவ்விருவரும் வருத்தம் யாதுமின்றி மகிழ்ச்சியோடு இருந்தார்கள். ஆச்சரியப் பட்ட அரசன் அவர்கள் துன்பப்படாது இருக்கும் விதத்தைக் கேட்டான். அவர்கள் மகிழ்ச்சியினால் ஒன்றி அன்பாய் பிடித்திருகின்ற மனத்துக்கு உடல் தெரியாதபோது துன்பம் எவ்வாறு தோன்றும் என்றனர். அதைக் கேட்ட அரசன் பரதமுனியிடம் சிந்தையில் காம மயக்கம் அடைந்திருந்தும், அவர்கள் ஞானபாவனையே சொன்னார்கள் என்று கூறி மனமகிழ்ந்து வேற்று நாட்டிற்கு அனுப்பிவிட்டான்.

## 2.4.6.3.5.. கதையால் அறியப்படுபவை:

1. உலகங்களைப் படைப்பவனும் ஆத்மாவும் மனதாகும்.
2. மனத்தினால் செய்யக்கூடிய செயலே செயலாகும்; உடலினால் செய்யும் செயல்கள் செயலாகாது.
3. எல்லாவற்றையும் நடத்துகின்ற மனமே முதன்மை யானது.
4. பூரண ஞானிகள் பிரம்ம பாவனையால் உடலிலுள்ள இன்பதுன்பங்களை நினைக்க மாட்டார்கள்.
5. ஒன்றில் மனம் பற்றுமானால் உடலை அரிந்தாலும் வருத்தம் தோன்றாது.

## 2.4.7.3.6. மனத்தின் கதை:

2.4.7.3.6.0. கொடிய துன்பமும் அச்சமும் நிறைந்த பொய் யான காட்டில் ஒரு ஆண்மகன் வாழ்ந்துவந்தான். அவன் அளவில் லாத கண்களையும் கைகளையும், சிதறுகின்ற கருத்துக்களையும் கொண்டவன். ஆகாயம் போன்ற விரிந்த உருவம் உள்ளவன்.

அடிக்கடி விரைவில் செல்லுகின்ற பலவளைதடிகளைக் கைகளில் கொண்டு தன்னைத்தானே சிதறும்படி அடிப்பான். எல்லாத்திசைகளிலும் கதறி, ஓடி வழிதப்பி அச்சம் அதிகரிக்கின்ற தீவினையாகிய பாழுங்கிணற்றில் விழுவான். வெகுகாலம் கழிந்ததும் எழுந்து உடலில் அடித்து, அழுதுகொண்டு ஓட்டத்தில் அலைவான். பின்னர் வாடுதலை நீங்கி, வாழைத் தோட்டத்தில் மகிழ்ச்சியாயும், கருவேலங்காட்டில் அலைந்தும், கிணற்றில் விழுந்தும் அலைந்து கொண்டிருக்கையில் பிடித்து வீணாக வருந்துதலைச் செய்வான். அவனிடம் யார் என்று கேட்டால் அவனென்று ஒருவனும் இல்லை. தனக்கு ஒரு செயலும் இல்லை என்று தளர்ந்தான். தடுத்தவன் அவனுக்குப் பகையாவான். இங்கு ஒரு தொழிலையும் காணவில்லை ஒற்றுமை இல்லாததைக் கேட்டதால் வாடுவதாகக் கூறினான். பின் அழுதான். ஒரு நொடியில் அழுகையை விட்டு வெகுநேரம் சிரித்தான். திரும்பவும் தனது அங்கங்களை எல்லாம் நீக்கி, விதியின் வயத்தினால் அவன் ஓரிடத்தை அடைந்தான். எதிராக வந்த ஒருவன் சமீபத்தில் வந்தவனைப்போல அடித்துக்கொண்டு போனான். மற்றொருவன் அந்தப் பாழுங்கிணற்றில் விழுந்தான். வெகுநாட்கள் கழித்தும் அவன் திரும்பி வரவில்லை. அந்த காட்டில் மேலும் ஒருவன் வர அவனைத் தடுத்துக் கூறியும் கேளாமல் மேலும் மேலும் அடித்துக் கொண்டே போனான். மூர்க்கராயுள்ளவர்கள் அவனைப் போலத் துன்பப்படுவார்கள்.

## 2.4.7 3.6.0.1 கதையின் விளக்கம்:

காடு என்றது உலகம். புருடன் என்றது மனம். உடலை அடித்துக் கொண்டான் என்பது அதிக துன்பங்களாகும். அதிக தூரம் ஓடியது அறிவினால் அடிப்பட்டு மயங்கிய நிலை. பாழுங் கிணறு என்றது நரகம். கருவேலங்காடு பூலோகம். வாழைத் தோட்டம் போகம் நிறைந்து விண்ணுலகம். அன்பினால் கேட்டது பகுத்தறிவு. முள் என்பது மோகம் நிறைந்த ஆண்களும் பெண்களும் நினைக்கின்ற சுகதுக்கங்களாகும். நிறுத்திக் கேட்டது விவேகம். தானே தனக்கு எதிரி என்பது அறிவினால் நசிக்கின்ற மனது துன்புற்றுக் கூறியது. அழுதது ஆசையைக் கொடுக்கின்ற

வருத்தத்தினால் ஆகும். கறிபழுதது ஞானம் நிறையாத மனமானது ஆசையை விடும்போது துன்பப்பட்டு வருந்துகின்றது. வருத்தும். நகைத்திருந்தது ஞானத்தால் ஒன்றான ஆனந்தம் பலிக்காமல் விவேகத்தில் தடைபட்ட மனமானது பிரமத்தை உணர்ந்து இளைப்பாறியது. முடிவில்லாத ஞானத்தினால் ஆசையை விட்ட மனமானது தனது உருவத்தை நாசம் செய்யும் பேர்ந்து ஆநந்தம் படுவதே மகிழ்ச்சி. கிணற்றில் விழுந்தவன் வெளியே வரவில்லை என்றது பாவகன்மம் நீங்காத மனமாகும் (நரகத்தில் அழுந்துகிறவன்). குற்றம் பொருந்திய மனமாகிய பழுத்தறிவை இழந்து அறியப் படாத்தக்கனது அறிவு வயத்தால் ஒடிந்தது என்றது மோகம் மாறாத மனம். சங்கற்பங்களும் எண்ணங்களும், வாசனைகளும் தன்னைத்தானே கோசகாரப்(பட்டுப்) புழுவைப்போல பாசத்தால் கட்டுப்படும்படிச் செய்யும். அழுதது, சிரித்தது, மகிழ்ந்தது, ஒடிந்து முதலியவை ஞானப் பழக்கத்தி லுண்டான மனோ விருத்திகளும், குடும்ப மாலையிலுள்ள விரிவு களுமாகும்.

## 2.4.7.3.6.1. கதையால் அறியப்படுபவை:

1. மனம் சத்தாகவும் சித்தாகவும் உள்ளது.
2. மனமே சங்கற்பத்தோடு சேர்ந்த ஆத்மாவாக உள்ளது.
4. மனமே எல்லாவகைத் துன்பங்களுக்கும் காரணமாக உள்ளது.

## 2.4.8.3.7. பாலன் கதை

2.4.8.3.7.0. மெய்யறிவு இல்லாத சிறுவன் ஒருவன் தன் தாயிடம் கதை கூறும்படிக் கேட்டான். உள்ளது போல முழுதும் பொய்யான ஒரு கதை கூறினாள் தாய்.

மூன்று அரசகுமாரர்கள் இல்லாதப் பட்டிணத்தில் வாழ்ந்து வந்தார்கள். அம் மூன்று பேர்களில் இரண்டு பேர்கள் பிறந்த தில்லை. ஒருவன் காரணமாகிய கருப்பத்திலுமில்லை. எல்லாம் தெரிந்தவர்களாய் எங்கும் சஞ்சரிப் பவர்களாய் ஆகாயத்தில் பல கனிகளையுடைய வனத்தில் பழவகைகளை உண்டு பசி நீங்கி

மேலும் சென்றார்கள். அந்தக் கானகத்தின் பக்கத்தில் மூன்று ஆறுகளைக் கரையில் மோதுகின்ற அலைகளுடன் பார்த்தார்கள். அவற்றில் இரண்டில் நீர் இல்லை. ஒன்று உலர்ந்த வெண்மணலை உடையது. அந்த நதியில் குளித்து நீர் அருந்தினவர்கள் மாலை நேரத்தில் இனி உருவாகப் போகும் பட்டணத்தைச் சேர்ந்து அங்கு மூன்று வீடுகளைக் கண்டார்கள். அந்த மூன்றில் இரண்டு இல்லவே இல்லை; மேலே மரங்களும் சுற்றிலும் சுவர் இல்லாத வீடொன்று இருந்தது. அம்மனைகளில் அரசகுமரர்கள் குடிபுகுந்திருந்தனர். அங்கு மூன்று தமனியப்பொன் பாத்திரங்கள் பக்கத்திலிருக்கப் பார்த்தார்கள். அதில் இரண்டு ஓடாகும். ஒன்று மிகவும் தூள். உருவமில்லாத அந்தப் பாத்திரத்தில் ஆறுமரக்காலின் குறைப் பதக்கைத் தள்ளி மீதியிருந்த அரிசியைப் பாகம் செய்து வாயில்லாத அந்தணர்கள் பலருக்குப் பரிமாறினார்கள். அந்த அந்தணர்கள் அனைவரும் பூரணமாகப் புசித்த (உண்ட) பின்பு மீதத்தை அவர்கள் உண்டு வேட்டையாடி அந்த இடத்தில் வாழ்ந்து வந்தார்கள்.

## 2.4.8.3.7.1. கதையால் அறியப்படுபவை:

1. ஞானமில்லாதவர்கள் உலகத்தைச் சத்தியமாய் நம்புவார்கள்.
2. ஞானிகளுடைய மனமானது எப்பொழுதும் முடிவுறாத பிரம்மவடிவமாவதன்றி வேறில்லை.
3. பிரம்மவடிவமே எப்பொழுதும் எவ்விடத்திலும் உண்டாகியிருக்கும், இதனிடத்தில் இல்லாதவை ஒன்றுமில்லை.
4. மனத்தின் விரிவே சங்கற்பமாகும்.

2.4.8.3.7.2. யோகவாசிட்டத்தில் இந்தக்கதை கூறும் பாத்திரத்தில் மாறுபாடு காணப்படுகிறது. பணிப்பெண் குழந்தைக்குக் கூறுவது போலக் காணப்படுகிறது. ஞானவாசிட்டத்தில் தாய் குழந்தைக்குக் கூறுவது போல அமைந்துள்ளது.

## 2.4.9.3.8. சித்தன் கதை:

2.4.9.3.8.0. அரிச்சந்திர மரபைச் சார்ந்த லவணன் என்னும் அரசன் உத்தர பாண்டவம் என்ற நாட்டை ஆண்டு வந்தான்.

ஒரு நாள் அரசவையில் வீற்றிருக்கையில் இந்திரசால வித்தையில் வல்ல சித்தன் ஒருவன் சுழற்றுகின்ற மயிலிறகின் வட்டத்தை அரசன் பார்த்தான். அந்த இடத்தில் சயந்கவநாட்டு அரசன் அனுப்பிய தூதன் ஒரு குதிரையைக் கொண்டுவந்தான். அரச னைப் பார்த்து, அது தன் அரசன் அனுப்பிய குதிரை என்றும் அதன்மேல் ஏறும்படியும் கூறினான். அரசன் குதிரையைக் கூர்மை யாகப் பார்த்து முகூர்த்த நேரம் சமாதியிலிருந்தது போல இருந் தான். நான்கு நாழிகை நீங்கியபின்பு சிங்காதனத்தின் முன்பு சரிந்தான். அருகிலிருந்தவர்கள் தாங்கிக்கொண்டனர். அதன்பின் அரசன் உழல்கின்ற தன் மனது தெளிந்து அறிந்தான்.

அரசனைப் பார்த்து அமைச்சர் எல்லோரும் தளர்ச்சி அடைந் ததற்கான காரணம் கேட்டனர். சித்தன் கூற்றினால் அறிவு மயங்கி குதிரையில் ஏறி வேட்டையாடும் நிமித்தம் (காரணம்) செல்ல நேர்ந்தது. அப்போது காட்டில் ஒரு கொடியானது கழுத் தில் சுற்றிக் கொள்ள குதிரை தன்னை விட்டு நீங்கிற்று. காலை யில் அந்தக் கொடியை அறுத்துச் சோலையில் புகுந்தேன். அங்கு ஒருவரையும் காணவில்லை. பகல் பொழுது கழியும் போது ஒரு பெண்ணைக் கண்டேன். அவள் கையில் அமுதம் இருந்தது. பசியால் அவளிடம் அமுது தரும்படிக் கேட்டேன். அவள், தான் ஒரு நீசப்பெண் என்றும், அந்த உணவு வேண்டு மானால் தன் தந்தையிடம் வந்து தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றும் கூறினாள் அதற்கு சம்மதித்ததால் அமுதைக் கொடுத்தாள். பின் அவளது தந்தையிடம் அழைத்துக் கொண்டு போனாள். அங்குத்திருமணம் நடந்தது. அவனுடன் இன்பமாக வாழ்ந்து மூன்று குழந்தைகளைப் பெற்றெடுத்தேன். வயதான காலத்தில் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது பலர் இறந் தனர். பலர் நாடு விட்டுச் சென்றனர். தன்னுடைய மக்களில் இருவரைத் தோளிலும், ஒருவனைத் தலையிலும் வைத்து மனைவியுடன் அந்நாட்டைவிட்டு வேறுநாட்டுக்குப் புறப்பட் டேன். வழியில் ஒரு பனை மரத்தடியில் சற்று நேரம் இளைப்பாறு வதற்காகத் தங்கிய போது மனைவி இறந்து விட்டாள். இளைய குழந்தை தனக்கு உணவு தேவை என அழுதது. அதன் அழுத கண்ணீரைப் பார்த்து வருந்தி அவன் பிழையான் என்று எண்ணி

தானும் உயிரை விட நினைத்தேன். அக்கினியை வளர்த்து அதில் விழலாம் என நினைத்து எழுந்திருந்தேன். அப்படி எழும்பும் போதுதான் கீழே விழும் நிலை ஏற்பட்டது என்று அரசன் கூறினான்.

## 2.4.9.3 8.1. கதையால் அறியப்படுபவை:

1) மன உறுதி இல்லாதவர்கள் மயக்கமடைவார்கள்.

2) பந்தம் விடுபட்டால் மோட்சம் கிடைக்கும் என்பது போன்ற செய்திகள் தெளிவுறுத்தப்படுகின்றன.

3) மாயையின் செயல் படம் பிடித்துக் காட்டப்படுகிறது

4) பசிவந்தால் குலப்பெருமையைக் கூட மறந்து விடுவர் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது

5) மாயை அறிவை கெடுக்கும்.

6) காணப்படும் பொருள் சுகதுக்கவடிவமாயும், சிற்சத்தி பரந்து இருக்கிறது. மனமே கால அளவாக இருக்கிறது.

2.4.9.3.8.2. சித்தன் கதைச் செய்தியை ஆசிரியர் இவ்வாறு முடித்து விட்டு உற்பத்திப் பிரகரணத்தில் இதன் தொடர்ச்சியைக் கூறுகிறார். கதை நிகழ்ச்சிகள் உண்மைதானா என்று அறிய அரசனும் அமைச்சனும் அந்த இடத்திற்குச் சென்றார்கள். அரசன் தான் கண்ட காட்சி அனைத்தையும் ஒரு மூதாட்டியிடம் கூறி, அவள் கூறியதையும் ஒப்பிட்டு உண்மை என உறுதி கொண்டான். இவ்வாறு ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். உற்பத்திப் பிரகரணத்திலுள்ள எட்டுக்கதைகளின் சாரத்தைக் கூறும்போது இந்தக்கதையின் முடிவையும் குறிப்பிட்டுள்ளார்.

2.4.9.3.8.3. இந்த அமைப்பில் ஒவ்வொரு பிரகரணத்திலுள்ள கதைகளின் சுருக்கங்களையும் இறுதியில் தொகுத்துக் கூறியுள்ளது அவரது உத்திகளில் ஒன்றாகக் கொள்ளலாம்.

2.4.9.3.8.4. ஸ்ரீ சின்மயானந்த பதிப்பில் இந்தக் கதைக்குச் சித்தன் (சாம்பரிகள்) கதை எனக் குறிப்பிடப்பட்டிருப்பது,

ஒரு நாள் அரசபையில் வீற்றிருக்கையில் இந்திரசால வித்தையில் வல்ல சித்தன் ஒருவன் சுழற்றுகின்ற மயிலிறகின் வட்டத்தை அரசன் பார்த்தான். அந்த இடத்தில் சயந்கவநாட்டு அரசன் அனுப்பிய தூதன் ஒரு குதிரையைக் கொண்டுவந்தான். அரசனைப் பார்த்து, அது தன் அரசன் அனுப்பிய குதிரை என்றும் அதன்மேல் ஏறும்படியும் கூறினான். அரசன் குதிரையைக் கூர்மையாகப் பார்த்து முகூர்த்த நேரம் சமாதியிலிருந்தது போல இருந்தான். நான்கு நாழிகை நீங்கியபின்பு சிங்காதனத்தின் முன்பு சரிந்தான். அருகிலிருந்தவர்கள் தாங்கிக்கொண்டனர். அதன்பின் அரசன் உழல்கின்ற தன் மனது தெளிந்து அறிந்தான்.

அரசனைப் பார்த்து அமைச்சர் எல்லோரும் தளர்ச்சி அடைந்ததற்கான காரணம் கேட்டனர். சித்தன் கூற்றினால் அறிவு மயங்கி குதிரையில் ஏறி வேட்டையாடும் நிமித்தம் (காரணம்) செல்ல நேர்ந்தது. அப்போது காட்டில் ஒரு கொடியானது கழுத்தில் சுற்றிக் கொள்ள குதிரை தன்னை விட்டு நீங்கிற்று. காலையில் அந்தக் கொடியை அறுத்துச் சோலையில் புகுந்தேன். அங்கு ஒருவரையும் காணவில்லை. பகல் பொழுது கழியும் போது ஒரு பெண்ணைக் கண்டேன். அவள் கையில் அமுதம் இருந்தது. பசியால் அவளிடம் அமுது தருமபடிக் கேட்டேன். அவள், தான் ஒரு நீசப்பெண் என்றும், அந்த உணவு வேண்டுமானால் தன் தந்தையிடம் வந்து தன்னைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்றும் கூறினாள் அதற்கு சம்மதித்ததால் அமுதைக் கொடுத்தாள். பின் அவளது தந்தையிடம் அழைத்துக் கொண்டு போனாள். அங்குத்திருமணம் நடந்தது. அவனுடன் இன்பமாக வாழ்ந்து மூன்று குழந்தைகளைப் பெற்றெடுத்தேன். வயதான காலத்தில் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது பலர் இறந்தனர். பலர் நாடு விட்டுச் சென்றனர். தன்னுடைய மக்களில் இருவரைத் தோளிலும், ஒருவனைத் தலையிலும் வைத்து மனைவியுடன் அந்நாட்டைவிட்டு வேறுநாட்டுக்குப் புறப்பட்டேன். வழியில் ஒரு பனை மரத்தடியில் சற்று நேரம் இளைப்பாறுவதற்காகத் தங்கிய போது மனைவி இறந்து விட்டாள். இளைய குழந்தை தனக்கு உணவு தேவை என அழுதது. அதன் அழுதநீரைப் பார்த்து வருந்தி அவன் பிழையான் என்று எண்ணி

தானும் உயிரை விட நினைத்தேன். அக்கினியை வளர்த்து அதில் விழலாம் என நினைத்து எழுந்திருந்தேன். அப்படி எழும்பும் போதுதான் கீழே விழும் நிலை ஏற்பட்டது என்று அரசன் கூறினான்.

### 2.4.9.3 8.1. கதையால் அறியப்படுபவை:

1) மன உறுதி இல்லாதவர்கள் மயக்கமடைவார்கள்.
2) பந்தம் விடுபட்டால் மோட்சம் கிடைக்கும் என்பது போன்ற செய்திகள் தெளிவுறுத்தப்படுகின்றன.
3) மாயையின் செயல் படம் பிடித்துக் காட்டப்படுகிறது
4) பசிவந்தால் குலப்பெருமையைக் கூட மறந்து விடுவர் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது
5) மாயை அறிவை கெடுக்கும்.
6) காணப்படும் பொருள் சுகதுக்கவடிவமாயும், சிற்சத்தி பரந்து இருக்கிறது. மனமே கால அளவாக இருக்கிறது.

2.4.9.3.8.2. சித்தன் கதைச் செய்தியை ஆசிரியர் இவ்வாறு முடித்து விட்டு உற்பத்திப் பிரகரணத்தில் இதன் தொடர்ச்சியைக் கூறுகிறார். கதை நிகழ்ச்சிகள் உண்மைதானா என்று அறிய அரசனும் அமைச்சனும் அந்த இடத்திற்குச் சென்றார்கள். அரசன் தான் கண்ட காட்சி அனைத்தையும் ஒரு முதாட்டியிடம் கூறி, அவள் கூறியதையும் ஒப்பிட்டு உண்மை என உறுதி கொண்டான். இவ்வாறு ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். உற்பத்திப் பிரகரணத்திலுள்ள எட்டுக்கதைகளின் சாரத்தைக் கூறும்போது இந்தக்கதையின் முடிவையும் குறிப்பிட்டுள்ளார்.

2.4.9.3.8.3. இந்த அமைப்பில் ஒவ்வொரு பிரகரணத்திலுள்ள கதைகளின் சுருக்கங்களையும் இறுதியில் தொகுத்துக் கூறியுள்ளது அவரது உத்திகளில் ஒன்றாகக் கொள்ளலாம்.

2.4.9.3.8.4. ஸ்ரீ சின்மயானந்த பதிப்பில் இந்தக் கதைக்குச் சித்தன் (சாம்பரிகன்) கதை எனக் குறிப்பிடப்பட்டிருப்பது,

கதையில் வரும் பாத்திரங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டி அவ்வாறு கொடுக்கப்பட்டிருக்கலாம்.

## 2.4.10.4.1. சுக்கிரன் கதை:

2.4 10 4.1.0 பிருகுமுனிவர் மந்திரகிரியினது பக்கத்தில் நிருவிகற்பச் சமாதியில் இருந்தார். அவருடைய பக்கத்தில் அவரை விட்டு நீங்காதவனாக அவர் மகன் சுக்கிரன் இருந்தான். ஒரு நாள் தேவப்பெண் ஒருத்தி அவ்வழியாக விண்ணில் சென்றதைச் சுக்கிரனால் காண நேர்ந்தது அவள் மேல் ஆசை கொண்டு அவள் தேவர் உலகப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும் என்ற எண்ணத்தினால் தேவலோகம் சென்றான். இந்திரனைக் கண்டு வணங்கி நிற்கும் போது தான் பார்த்த விச்சுவாசி என்ற பெண் வரக்கண்டான் சுக்கிரன். அந்த காரம் (இருள்) மூடிக் கொள்ள வேண்டும்படி எண்ணவும் அந்தகாரம் மூடிக் கொண்டது. எல்லோரும் பலதிசைகளிலும் மறைந்தனர். இருவரும் ஓருயிராக இடையூறில் லாமல் இன்பத்தில் எட்டு சதுர்யுகம் இருந்தனர். சுக்கிரன் தன்னுடைய முன்செய்த கருமங்கள் யாவும் முடிந்து போகும் என்ற சிந்தனையினால் தேவர் பூவுலகத்திற்கு வந்து சேர்ந்தான். தனது வடிவத்தை உலகத்திலிருந்து மறந்தான்.

சுக்கிரனுடைய உயிர்தேசார்ண நாட்டிலுள்ள ஓர் அந்தனனுக்கு மகனாக வந்து தோன்றியது. மேலும் அளவில்லாத பிறப்புகள் எடுத்து இறுதியில் அவன் கங்கைக் கரையில் ஓர் முனிமகனாய் வாசுதேவன் என்ற பெயருடன் அவதரித்தான். எண்ணூறு ஆண்டுகள் சமாதியில் இருந்தான்.

ஆயிரம் ஆண்டுகள் நிருவிகற்ப சமாதியிலிருந்த பிறகு முனிவர் கண் விழித்தார். எப்பொழுதும் தன் பக்கத்திலே இருக்கக்கூடிய மகனைக் காணாததினால் வருந்தினார். தன் அறிவினால் ஆராய்ந்து பாராமல், மகன் இறந்து போனான் என்று நினைத்து காலமல்லாத காலத்தில் மகனைக் கொன்ற காலனைக் கெடுப்பதாக எண்ணினார். இதை அறிந்த காலன் அச்சத்துடன் முனிவரது கோபத்தைத் தெளிவிக்க அறிவுரை

கூறத் தொடங்கினார். ஞானத்தினால் பாவிக்க முடிந்தும் பார்க்காமல் கோபம் அடைதல் முனிகளுக்கு ஏற்ற செயல் அல்ல என்று கூறினான். சுக்கிரனுடைய எல்லாப் பிறப்புக் களையும் கூறி இறுதியாக அவன் இருக்கும் நிலையையும் விளக்கினான். இதை ஞானப்பார்வையினால் பார்க்கும் படிக் கூற பிரகுமுனி எல்லாவற்றையும் பார்த்தான்.

காலன் பிரகுமுனியைச் சுக்கிரன் இருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றான். சமாதியை விட்டு வாசுதேவன் அவர் களைப் பார்க்கவேண்டும் எனக்காலன் எண்ண வாசுதேவன் இருவரையும் பார்த்தான். வாசுதேவனும் ஞானத்தினால் தன் பழம் பிறப்புக்களைப் பார்த்தான். பின் மூவரும் மந்திரகிரிமலைக்கு சென்றனர். காலன் வாசுதேவன் என்ற சுக்கிரனைப்பார்த்து பழைய உடலில் புகுந்து அவுணர்வுகளுக்கு (அசுரர்) ஆசிரியர் தொழிலைச் செய்யுமாறு கூறி இருவரையும் வாழ்த்திச் சென்றான். வாசுதேவன் வடிவிலிருந்த சுக்கிரன் பழைய உருவத்தை அடைந்தான். இருவரும் நீண்ட காலமாகச் சீவன் முத்தர்களாய் வாழ்ந்தார்கள்.

## 2.4.10.4.1.1. கதையால் அறியப்படுபவை:

1) கோபத்தால் தவத்தின் மகிமையைக் கெடுத்தல் கூடாது.
2) பந்தத்தில் ஈடுபட்டால் கோபம் ஏற்படும்.
3) ஞானப்பார்வைக்கு படைப்பவனும் அனுபவிப்பவனும் இல்லை.
4) மனமே ஆத்மா; மனமே உலகம்; மனத்தின் தொழிலே தொழிலாகும்.
5) ஞானக்கண்ணினால் தான் முற்பிறப்புக்களைப் பார்க்க முடியும்.
6) அறிவினால் ஏற்பட்ட மனத்தினால் உலகம் விளங்கும்.
7) பிறப்புகள் பல உண்டு.

## 2.4.11.4.2. தாமவியாளகடர் கதை:

2.4.11.4 2.0. பாதாள உலகத்தை ஒரு காலத்தில் சம்பாசுரன் என்பவன் ஆண்டு வந்தான். தேவர்கள் அசுரர்களைத் துன்புறுத்தி வந்தனர் என்ற செய்தியைக் கேட்ட சம்பராசுரன் ஆகுவன்.

திருமன், முண்டிகன் என்னும் மூவரையும் அவர்களைச் சார்ந்த படைகளையும் போர் செய்ய அனுப்பினான். தேவர்கள் காலம் கண்டு போர் செய்தார்கள் அதை அறிந்த சம்பராசுரன் தேவர் உலகம் சென்றான். தேவர்கள் அஞ்சி மறைந்தனர். வீதிகள் தோறும் தெய்வப் பெண்கள் நின்று அழும்படியாக எரிகின்ற அக்கினியை வருவித்துத் திரும்பினான். தேவர்கள் திரும்பவும் வந்தார்கள். அசுரன் படைகளை அனுப்ப தேவர்கள் பற்று அறும்படியாக அடித்து விரட்டினர். அதைக் கேட்ட சம்பராசுரன் கோபமுடன் மாயையினால் படைத்த தாமன், வியாளன், கடன் என்ற மூவரையும் அனுப்பினான் அவர்களைக்கண்ட தேவர்கள் அச்சப்பட்டு பிரம்மனிடம் சென்று முறையிட்டனர். பிரம்மன் அவர்களிடம் அச்சப்படவேண்டாம் என்றும், ஆயிரம் ஆண்டுக்குப் பிறகு சம்பராசுரனையும் அசுரர்களையும் தேவேந்திரன் கொல்லு வான் என்றும் கூறினார். அவர்களிடம் காலத்தைப்போக்கும் முகமாகப்போர் செய்யும்படி கூறினார். அகங்கார வாசனை தொடர்ந்து ஒருவனிடம் இருந்தால் அழிவு வரும் எனப்பிரமன் கூறி மறைந்தார்.

தேவர்கள் போர் செய்ய அசுரர்களை அழைத்தனர். காலத்தை நீட்டும் முகமாக ஓடி ஒழிந்தும் திரும்பிவந்தும் பல நாள் போர் செய்தார்கள். இதனால் அசுரர்கள் தான் என்கின்ற பழக்கத்தினால் மீண்டும் தான் என்ற ஆசையை விரும்பினார்கள். பின் அவர்களை அச்சம்பற்றிக் கொள்ள பந்தப்பட்ட மனத்தையுடையவராயும் நினைவினால் தீயமனத்தை உடைய வராயும் கலக்கமடைந்தனர். அதனால் தங்கள் வல்லமைகள் எல்லாம் போக்கி நடுக்கமடைந்து அஞ்சி ஓடி மூவரும் இறந்தனர்.

### 2.4.11.4.2.1. கதையால் அறியப்படுபவை:

1) மனத்தை வெற்றி கொண்டவர்களிடத்து வாசனை வராது
2) தான், தனது என்கின்ற பழக்கத்தால் வாசனை யுண்டாகினால் அழிவது உறுதி.
3) அஞ்ஞானத்தினால் பழக்கப்பட்டால் துன்பமே வந்தடையும்.

### 2.4.12.4.3. வீமபாசதிடர் கதை:

2.4.12.4.3.0. தாமவியாளகடர் கதையில் குறிப்பிடப்பட்ட மூவரும் இறந்ததினால் சம்பராசுரன் கோபம் அடைந்தான். தேவர்களைக் கொல்லும் பொருட்டுத் திட்டங்கள் வகுத்தான். அவன் முன்பு படைத்த மூன்று பேர்களும் ஆத்மஞானம் அற்றவர்கள். தான் தனது என்னும் அகந்தை உடையவர்கள். எனவே தேவருடன் போரிட்டு மறைந்தனர். மேல் படைக்கக் கூடியவர்களை ஆத்மஞான நூற்களைத் தெரிந்தவர்களாகவும், ஞானத்தை உடையவர்களாகவும் இருக்கும்படிச்செய்ய எண்ணி அவன், மாயையினால் வீமன், பாசன், திடன் என்ற மூவரையும் படைத்து தேவயுத்தத்துக்கு அனுப்பிட்டான்.

அவர்களிடம் தான், தனது என்ற எண்ணம் இல்லாமையினால் அளவில்லாத வருடங்கள் போர் செய்தார்கள். வீமபாசதிடர்களுடன் போர் செய்ய முடியாமல் தேவர்கள் திருமாலிடம் அடைக்கலம் புகுந்தனர். திருமால் தேவர்களுக்கு அருள் கொடுக்கும் முகமாகப் போர்க்களத்திற்கும் சென்று ஆழியால் அசுரர்களை அழித்தார்.

### 2.4.12.4.3.1. கதையால் அறியப்படுபவை:

1) ஞானிகள் உலகிலுள்ள எல்லாவற்றையும் துரும்பாக நினைப்பார்கள்.
2) முயற்சியாலும், யுத்திகளாலும், நூற்களினாலும் அறிந்து குற்றமற நடப்பவர்களுக்கு எல்லா நன்மைகளும் கிடைக்கும்.
3) தான் என்கின்ற அகங்காரத்தை நீக்கியவர்களே பெரியோராவர்.
4) தான் என்கின்ற அகங்காரம் ஞானத்தை மறைக்கும்.
5) உடலைத்தான் என்று எண்ணாமல் இருப்பதே முத்தி

2.4.12.4.3.2. தாமவியாளகடர் கதையையும் வீமபாசதிடர் கதையையும், படிக்கும்போது ஒரே கதையாகக் குறிப்பிட்டிருக்கலாம் என்னும் எண்ணம் தோன்றும். சம்பராசுரன் என்ற ஒரு பாத்திரத்தின் படைப்புத்தான் இந்த ஆறு அசுரர்களும். ஆனால் ஆசிரியர் தத்துவத்துக்கு ஒரு கதை என விளக்குவதால்

அஞ்ஞானத்துக்குத் தாமவியான கடர் கதையையும், ஞானத்துக்கு விமபாசதிடர் கதையையும் கொண்டு இரு வேறு தத்துவங்களையும் விளக்கியுள்ளார் எனலாம்.

## 2.4.13.4.4. தாசூரன் கதை:

2.4.13.4 4.0. சரலோமா என்ற முனிவருடைய மகனான தாசூரன் தன் தந்தையின் மறைவை எண்ணிப் பூசைகள் செய்யாமல் காட்டில் அழுது கொண்டு திரிந்தான். அங்கு ஒரு வனதேவதை அவனைப்பார்த்துத் துன்புறுவதற்குக் காரணம் கேட்டது. அவன் தன் நிலையைக் கூறினான். சூரியன் உதய மானால் மறையாமல் இருக்காது. அதுபோலப் பிறந்தவர்கள் மரணத்திலிருந்து தப்பமாட்டார்கள் என்று விளக்கியது. அதன் பிறகு தாசூரன் தன் துன்பத்தை மறந்து தவத்தில் விருப்பம் உடையவனாக இருந்தான். அக்கினியை வளர்த்து உடல் உறுப்புகளை அரிநது தீயில் இட்டுத்தவம் செய்தான். அக்கினி தேவன் வெளிப்பட்டு வேண்டியது யாது எனக் கேட்டான். அவன் பரிசுத்தமான இடத்தை இந்தப்பூமியில் காணததால் மரத்தின் நுனியிலுள்ள தளிர் இலையில் இருந்து தவம் செய்ய அருளும்படி வேண்டினான். தேவனும் அவ்வாறே அருளிச் செல்ல தாசூரன் கடம்பமரத்தளிர் இலையிலிருந்து தவம் செய்து வந்தான்.

ஒரு நாள் அந்தக்காட்டில் வாழும் தேவதை வந்து தனக்கு ஒரு குழந்தைத் தரும்படி வேண்டினாள். தாசூரன் ஒரு பூவைக் கொடுத்து ஒரு மாதத்தில் ஒரு புத்திரனைப் பெறுவாய் என்றும், அவன் வருத்தத்தினால் ஞானமடைவான் என்றும் கூறி அனுப்பிவிட்டான். குழந்தை பிறந்து வளர்த்து பன்னிரண்டு கழிந்த பிறகு தேவதை பாலகனை முனிவனிடம் கொண்டு வந்தாள் சகலமும் அறிந்தும் பிறப்பை நீக்கத்தக்க ஞானத்தை அடையாததால் துன்பப்படுகிறான எனவே குழந்தையைச் சீடனாக ஏறறுக கொண்டு அனுக்கிரகிகக வேண்டினாள். முனிவனும் அவனைச் சீடனாக ஏறறுக் கொண்டு அவளை அனுப்பிவிட்டான்.

முனிவன் சீடனுக்குப் பல கதைகளையும் பிரமாணங்களையும் உண்மைகளையும் கூறினான். ஒரு நாள் ஒரு தத்துவக்

கதையைக் கூறினான். தெளிஞன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் ஞான ஆகாயத்தில் பிறந்தவன் ஒருவருக்கும் அஞ்சாதவன் மும்மூர்த்திகளாலும் பின் தொடர முடியாத அளவுக்குப் பலம் பொருந்தியவன். உத்தமன், மத்திமன், தமன் என்றும் மூன்று பேர்களும் அவனுடைய உடலைச் சுமக்கத் தக்கவர்கள். மூன்று வித உடலுக்குத் தலைவன். ஞான ஆகாயத்தில் அவனது பட்டணத்தில் தெருக்கள் பதினான்கு. அதில் மூன்று வகைகளோடும் பொருந்திய வனங்கள், சோலைகள், செய்குன்றங்கள் ஏழு தடாகங்கள், இரண்டு விளக்குகள் முதலியவை நிறைந்திருந்தன. அந்த நகரத்தை அகங்காரம் என்னும் பேய்கள் காவல் செய்தன. அவன் அமைத்த பாசறையில் அகம்பாவம் என்னும் பேயுடன் நடனம் செய்வான். ஒருவீடு விட்டு அடுத்த வீடு போவது போல அவன் மரணத்தை அடைந்து திரும்பவும் தோன்றினான். தான் படைத்த அந்த நகரத்தில் விருந்து உண்டு தொழில்களைச் செய்தான். நன்மையும், தீமையும், அபிமானமும் ஏக்கமும், மயக்கமும் ஆகிய சுகதுக்கங்களில் அழுந்தினான். தளர்ந்தேன், பருத்தேன், தாழ்ந்தேன், உயர்ந்தேன், வளர்ந்தேன், குறைந்தேன் என்று கூறி வாழ்ந்தான்.

சீடன் குருவிடம் கதையின் விளக்கம் கேட்டான். முனிவர், சங்கற்பமே முன் கூறிய அரசன். அதன் வடிவமே உலகம். மும்மூர்த்திகள் முதலான தேவர்கள் சங்கற்பத்தின் உடல் உறுப்புகள். சங்கற்பமானது ஞான ஆகாயத்தில் உண்டாகிய மூன்று உலகம் என்னும் நகரம். உலகபாலர்கள் என்பது பதினான்கு மனுக்கள். சூரியனும் சந்திரனும் இரண்டு விளக்குகள். நதிக் கூட்டங்கள் முத்துமாலை. ஏழுகடல் என்றது ஏழுதடாகங்கள். கூடாரம் என்றது சரீரம். தாமதம், சாத்துவிகம், இராசதம் என்னும் மூன்று குணங்களே மூன்று உடலாய், மூன்று உலகங்களுக்கும் காரணமாகும் சங்கற்பத்தால் உண்டான எல்லாம் ஒரு கணத்தில் அழியும். சங்கற்பத்தாலுண்டாகிய அரசன் தன் சங்கற்பத்தால் அதிக துன்பத்தில் உழன்று சுகமில்லாமல் விசினமடைவான். இந்தச் சங்கற்பத்தைக் கெடுத்தால் முத்தியை அடையலாம் எனக் கூறினார்.

### 2.4.13.4.4.1. கதையால் அறியப்படுபவை:-

1) ஆத்ம நினைவால் உலகம் நிலை பெற்றிருக்கும்.

2) பற்றுடைய மனமே ஆத்ம அழிவாகும்.
3) சர்வம் பிரம்மமயம் என்றறிந்தவர்கள் முத்தி அடைவார்கள்.
4) ஞானத்தால் அன்றிமாயை கெடாது. மாயைகெட்டால் வீடுபேறு.
5) மனைவியிடத்தும் புத்திரர்களிடத்தும் பொருட்களிடத்தும் பாசம் மிகுமாயின் அவர்கள் விலங்குகளுக்குச் சமம் ஆவார்.
6) பிறந்தவர்கள் இறத்தல் உறுதி.
7) மனம் தான் எல்லாவற்றிற்கும் காரணம்.
8) சங்கற்பம் நசித்தால் பரமபதம் அடையலாம்.
9) மன உறுதியோடு இறைவனை வழிபட்டால் அருளும் காட்சியும் கிடைக்கும்.

2.4.13.4.4 2 யோக வாசிட்டத்தில் தாசூரனின் கவலையை மாற்ற அசரீரி ஒலித்ததாக உள்ளது. ஞானவாசிட்டத்தில் வனதேவதையே மறைந்திருந்து (தாசூ. 61) அறிவுரை கூறியதாகக் காணப்படுகிறது. நேரடி அறிவுரை நல்ல பயனைக் கொடுக்கும் என ஆசிரியர் அவ்வாறு புகுத்திருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

### 2.4.14.4.5 கசன் கதை:

2.4.14 4.5.0. கசன் சமாதியிலிருந்து எழுந்து ஒரு சமயம், எதைச் செய்வேன், எங்கே போவேன், விடுகிறது எது, பற்றுகிறது எது என்றும், பிரளய காலத்தில் தோன்றும் கடலைப் போல எங்கும் தனது ஆத்ம வடிவமே நிறைந்திருக்கிறது என்றும், உடலின் உள்ளிலும், வெளியிலும், திசைகளிலும், ஆகாயத்திலும், பூமியிலும் எவ்விடத்திலும் தனது வடிவமே அன்று வேறொன்றுமில்லை என்றும், தான் இல்லாதும், தன்னிடத்தில்லாததும், தன்னிடத்தில் ஒன்றும் இல்லை என்றும், தானே விளங்குகின்ற பொருட்கள் என்றும், வேறு ஒன்றுமில்லை என்றும், சச்சிதானந்த வடிவமே எங்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது என்றும் கூறினான்.

### 2.4.14.4.5.1 கதையால் அறியப்படுபவை;

1) எல்லாம் அறிவே.

2) வாசனையே பந்தம். அதை விடுதலே வீடு.

3) அறிவு நிறைந்திருந்தால் வேண்டியது வேறு ஒன்றும் ில்லை.

2.4.14.4.5.2. ஆசிரியர் இந்தப் பகுதிக்குக் கதை எனப்பெயர் கொடுத்துள்ளது ஆய்வுக்குரியது. இங்குக்கசன் கூற்றாகவே சில உள்ளன. இதை நோக்கும் போது அறிவுரைப் பிரிவுகளையும் கதை என்றே குறிப்பிடுகிறார் எனலாம்.

## 2.4.15.5.1. சனகரரசன் கதை:

2.4.15 5 1.0. சனகன் என்னும் அரசன் விதேக நாட்டை ஆண்டு வந்தான். வசந்த காலத்தில் பூங்காவனத்தில் தனியனாய் உலாவிக் கொண்டிருக்கும் போது சித்தர்கள் பேசிய பேச்சுகளைக் கேட்டான். அதன் பின் அரண்மனை மேல் நிலையில் தனியனாய் இருந்து ஆத்ம விசாரணை செய்யத் தொடங்கினான். சிந்தித் துக் கொண்டிருந்த அரசன் உலக ஒழுக்கம், ஆயுள், அரசபோகம் செல்வம், காலம், பொருள், உடல்பருவங்கள், அறம், பொருள், இன்பம் போன்றவற்றை இகழ்ந்து பேசினான். மனமே சுகதுக்கம் என்றும் கூறினான். மனம் என்னும் பெரும்பகையைத்தனது ஆத்ம ஞானத்தால் வெற்றி அடைந்ததாகக் கூறி சமாதியில் இருந்தான். சமாதியிலிருந்தவன் நிறைந்த மனத்தினோடு உலக இயல்பைப் பற்றிய எண்ணத்தினால், முயற்சியால் வரும் பொருள் யாது, கைக் கொள்ளத்தக்கது யாது, கற்பனை யாது போன்ற கேள்விகளை மனதினுள் கேட்டு அவையாவும் தனக்கு இயல்பான அறிவாகும் என்றும் கூறினான். ஆத்ம ஞான வடிவமாகிய தனது வடிவை அன்றி வேறு பொருள் தோன்றக் காணவில்லை என்றும் எத்தப் பொழுதும் தனது ஆத்மஞான வடிவத்தில் நிலை யாய் நிற்பதாகவும் கூறி பிரம்ம ஆநந்தத்தில் மூழ்கி ஒன்றா கினான்

## 2.4.15.1.5. கதையால் அறியப்படுபவை:

1) சாத்துவித குணமுடையவர்களுக்கு மாயாபாசங்கள் இல்லை.

2) குரு அறிவுரைகளை ஒழுங்காகக் கேட்டாலும், அறிவுரை வாக்கியங்களைத் தன் சுயவிருப்பத்தினால் படித்தாலும் முத்தி அடையலாம், பிறப்பையும் அறுக்கலாம்.

3) ஆசையை விடவேண்டும்.
4) இந்திரியங்களை அடக்க வேண்டும்.
5) மனமே சங்கற்பம், மனம் இறக்கில் பிறப்பு இறப்பு கெடும்; மனமே ஆத்மாவை மறைக்கும். கருவி அகங் காரத்தை மனதினால் கெடுக்க வேண்டும்.
6) உயர்ந்தவர்களாக இருந்தவர்கள் தாழ்ந்தவர்களாக மாறுவதால் உலகம் நிலையற்றது என்பர்.
7) குடும்ப வாழ்க்கையே அனைத்துத் துன்பத்திற்கும் காரணமாகும்.
8) ஆத்ம ஞானத்தால் பரமபதம் அடையலாம்.
9) இந்த உலகம் பிரம்மவடிவம் (சர்வம் பிரம்மமயம்).
10) ஞாதாவும் (அறிபவனும்) நேயமும் (அறியப்படு பொருளும்) ஒன்று சேர்ந்த இடத்தில் ஞானம் உண் டாகும்.

## 2.4.16 5.2. புண்ணிய பாவனன் கதை;

2.4.16 5.2. தீர்க்கதவன் என்னும் முனிவர் மகேந்திர மலை யில் வாழ்ந்து வந்தார். அவருக்குப் புண்ணியன் பாவனன் என்ற இரு பாலர்கள் உண்டு. கங்கைக் கரையில் அம்முனிவனின் தவப் பயனால் புண்ணியன் ஞானமடைந்தான். பாவனன் ஞானம் அடைவில்லை. அவ்வாறு இருக்க புண்ணிய பாவனன் தாய் தந்தையர் மரணம் அடைந்தார்கள். புண்ணியன் செய்ய வேண்டிய கருமங்களைச் செய்தான். பாவனன் துக்கத்தில் அழுந்தி மயக்கம் அடைந்தான். இவ்வாறு மயக்கம் அடைந்தவன் காட்டில் அலைந்து திரிந்தான். புண்ணியன், பாவனனிடம் கவலையை விட்டுவிடு. எல்லோருக்கும் கிடைக்க முடியாத முத்திப்பதத்தைத் தமது தாய் தந்தையர்கள் அடைந்துள்ளார் கள். அந்தப் பரம்பதத்தில் வாழுகின்ற பிதாக்களைப் பார்த்து கவலைப்படுவது நல்லதல்ல. தம்மைப் பெற்ற மாதாபிதாக் களுக்கு கணக்கில்லாத அளவு பிறவி எடுத்துள்ளோம். ஒவ்வொரு பிறவியிலும் மிகுந்த உறவினர்கள் இருந்திருப்பார்கள். அவர்களது பிரிவுகளுக்கெல்லாம் அழுதால் ஒரு முடிவும் ஏற்படுவதில்லை. பிரம்மத்தினால் பார்த்தால் நசிக்கின்ற துன்பமுள்ளது ஒன்றுமே இல்லை. புண்ணியன் என்றும் பாவனன் என்றும் சொல்லப்பட்ட

பெயர்கள் எல்லாம் மாறி, எல்லாம் ஞானமாய்த் தோன்றும். கடந்த பிறப்புக்களை எண்ணமுடியாது. அப்பொழுது உறவினர்களுக்காகத் துன்பப்படாதது போல இப்பொழுதும் துன்பப்படாது இருக்க வேண்டும். அறியாமை, துன்பம் இவற்றை விட்டாயானால் தனது ஆத்ம வடிவத்தைக் காணலாம். தனது ஆத்ம வடிவத்தைப் பார்க்கும்போது ஞான அறிவினால் ஆசைகள் பல உண்டாகும். அவற்றை விட்டு மனத்தினால் வடிவம் இப்படிப் பட்டது என்று பார்த்துச் சிறிதளவேனும் மயக்கமில்லாமல் கெடுத்தாயானால் நிருவாண சுகத்தை அடையலாம் என்று கூறினான்.

### 2.4.16.5.2.1. கதையால் அறிப்படுபவை:

1) பிறவிகள் பல உண்டு; ஒவ்வொரு பிறவியிலும் கவலை அடைந்தால் முத்தியும் ஞானமும் அடைய முடியாது.
2) பிறந்தவர் இறப்பது உறுதி.
3) பிறவிக்குக் காரணம் ஆசை, போகங்கள்; இவற்றில் மூழ்காமல் இருந்தால் ஞான அறிவுடன் நிருவாண சுகத்தை அடையலாம்.
4) ஞானமடையாதவன் கவலையினால் உலகத்தைச் சுற்றிக் கொண்டே திரிவான்.
5) அகம்பாவம் நீங்கினால் எல்லாம் தன்மயமாக விளங்கும்.
6) அகங்கார வடிவமான வாசனையை விட்டவர்கள் மேலான சத்துக்கள்.
7) பற்று இருக்கக் கூடாது; பந்தத்தை விடவேண்டும்.
8) இந்த உலகம் அசத்து.
9) மனத்தை விசாரணையினால் கட்டுப்படுத்த வேண்டும்.

2 4.16 5 2.2. ஸ்ரீசின்மயாநந்த பதிப்பில் இந்தக் கதைக்கு புண்ணிய பாவனர் என 'அர்' விகுதி சேர்ந்திருப்பது முனிவரின் உயர்வு கருதியாக இருக்கலாம். மற்ற பதிப்புகளில் அர் விகுதி கிடையாது.

### 2.4.17.5.3 மாவலி கதை:

2.4 17.5 3.0. மாவலிச் சக்கரவர்த்தி பாதாள உலகத்தை ஆண்டுவந்தவன். விரோசனனுடைய மகன். சிவனும் திருமாலும் தாழும்படிச்செய்த பெருமையை உடையவன். ஒருநாள் தனித்

திருந்து போகங்களை வெறுத்து குடும்ப வாழ்க்கையை விட நினைத்தான். மூன்று உலகங்களிலுள்ள செல்வங்களையும் நெடு நாட்களாக அனுபவிக்கக் கொடுக்கின்ற தனது அரசாங்கத்தால் என்ன பயன், கணநேரத்தில் நீங்குகின்ற செல்வத்தால் எந்தப் பலனையும் காணவில்லை. நேற்று அடைந்த இன்பத்தைத் தானே இன்றும் அடைகின்றோம். அனுபவித்த சுகமே திரும்ப வருகிறது; நாள், மாதம், வருடம், யுகங்கள் இவை முன்பு வந்ததே அன்றிப் புதிதாகத் தோன்றவில்லையே; போகத்தி லிருந்து விடுபடும் மார்க்கம் யாது எனச் சிந்தித்துக் கொண்டி ருந்தான். அவ்வாறு இருக்கும்போது தன் தந்தை கூறிய கூற்று அவன் நினைவுக்கு வந்தது. அவனே தன் தந்தையிடம் இன்ப மும் துன்பமும் என்று சொல்லப்படுவனவாகிய அனைத்திலும் ஒப்பற்றதும்; மனத்தின் மோகம் தீர்கின்றதும்; ஆசை, பற்று அனைத்தும் விடப்பட்டதும், பேரானந்தமாய் நிறைந்திருக்கின்ற துமாகிய இடம் யாது என்றும், தன் மனத்தை அறுத்துக் கொண்டிருக்கின்ற துன்பத்தை விடுத்து அழிவுகள் அனைத்தும் நீங்க வழியாது என்றும் கேட்டான். அவர் ஒரு கதையைக் கூறி விளக்கினார்.

பூதங்கள், மலைகள், காடுகள், தீர்த்தங்கள், தேவர்கள் முத லான ஆத்மாக்கள் இல்லாத பரந்த ஓர் நாட்டில் அரசன் ஒருவனே இருந்தான். அவன் நிறைந்த குணத்தை உடையவன். அந்த அரசனால் நியமிக்கப்பட்ட அமைச்சன் எல்லாத் தொழில் களையும் நடத்துவான். அமைச்சனானவன் நினைத்த நேரத்தில் இல்லாததை உள்ளதாகவும், உள்ளதை இல்லாத தாகவும் ஆக்கு வான். அமைச்சனுக்கு எதையும் அனுபவிக்க முடியாது. அரசன் விடாமல் எப்பொழுதும் நடப்பதால் அனைத்தையும் செய்வான். அரசன் தனியே இருப்பான். அதை கேட்ட மாவலி தந்தையிடம் விளக்கம் கூறக் கேட்டான். கூறிய நாடு முத்தி. அரசன் என்றது ஆன்மா, அமைச்சன் என்றது மனம், செய்திகள் அனைத்தையும் கெடுத்து நல்லவைராக்கியத்தை அடைவதே யூகபுத்தி என்றார்.

அதன்பிறகு மாவலி ஞானசுகத்தையும் பரமசுகத்தையும் அடைந்தான். அவ்வாறு அறிந்ததை சரிதானா எனச் சோதிக்கும் பொருட்டுத்தன் குரு சுக்கிராச்சாரியாரை வணங்கி உள்ளதும்

அப்பால் இருக்கின்றதும், அளவு, சொல்லப்பட்டதும் படாததும், பேசுகின்றதானும், கேட்கின்ற வர்களும், இந்த உலகமும் யாது என்று கேட்டான். அவர் அதற்கு எல்லாம் ஞானமே என்றும், அறிவினால் சிந்தித்தால் பிரம்ம பதத்தை அடையலாம் என்றும் கூறிச்சென்றார். அதன்பிறகு அவற்றை நினைத்து மாவலி சமாதி யிலிருந்தான். சமாதிநிலையிலிருந்து நீங்கி நிராசை பொருந்திய மனத்தினால் சுகதுக்கம் எதுவும் இல்லாமல் அரசாட்சி செய்தான்.

**2.4.17.5 3.1. கதையால் அறியப்படுபவை:**

1) மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டும்.
2) ஞானம் அடைந்தால் முத்தி கிடைக்கும்
3) நல்லறிவும் விவேகமும் நட்பானால் துயரம் நீங்கும்.

**2.4.18.5.4. பிரகலாதன் கதை:**

2.4.18.5.4.0. இரணியன் மகன் பிரகலாதன். அசுரர்களுக்குத் தலைவனாக ஆட்சி செய்து வந்தான். இரணியன் மரணம் அடைந்த போது பிரகலாதன் வருந்தினான். தன்னுடைய தந்தை யைக் கொன்ற திருமாலை வெற்றிகொள்ள முயற்சித்தான். 'நாராயணாய நம' என்கின்ற திருமந்திரத்தை உச்சரித்து, அவ னை வணங்கி, ஆராதனை செய்தால் முத்தி அடையலாம், வெற்றி அடையலாம் என்று எண்ணி வேத முறைப்படி ஆராதனை செய் தான். பிரகலாதன் அவ்வாறு செய்வதைக் கண்ட எல்லா அசுரர் களும் அவ்வாறே செய்யத் தொடங்கினார்கள். அதைக்கண்ட தேவர்கள் திருமாலிடம் சென்று காரணம் கேட்டனர். திருமால், பிரகலாதன் மீண்டும் பிறவாத பிறப்பை அடைந்திருக்கிறான். துன்பம் நீங்கி மெய்ஞ்ஞானத்தினால் முத்தி அடைவானாகையால் அதில் வஞ்சகம் ஒன்றுமில்லை என்றார். அதைக்கேட்ட தேவர் கள் பகைவர்கள் என்று சொல்லப்பட்ட அசுரர்களுடன் உறவா னார்கள்.

இமைநேரம் கூட நீங்காமல் ஆராதனை செய்த பிரகலாதன் போகங்களில் ஈடுபடாமல், ஊசலைப்போல மனத்தைச் சுழலவிடு வதைக் கண்ட திருமால் அவனிடம் வந்து மீண்டும் பிறவாத வரத் தைக் கேள் என்றார். அதற்கு அவன், துக்கமில்லாத மேலான ஆநந்தத்தை அருளும்படி கேட்டான். மனத்திலுள்ள மயக்கங் கள் அனைத்தும் நீங்கி பிரம்மாநந்தத்தை அடைந்து பிரம்மத்தில் இளைப்பாறும் படிக் கூறித்திருமால் மறைந்தார்.

திருமால், பிரகலாதனுக்கு இனிப் பிறவாத வரம் கொடுத்துள் ளமையால் அவன் யார் என்பதை அறிய விரும்பினான். இந்த உலகத்தை அவனே என்று சொல்லமுடியுமா எனச்சிந்தித்தமை யால் அவன், யார் என்பதை அறிந்து கொண்டான். அதனால் எங்கும் நிறைந்திருக்கின்ற தத்துவ ஞானத்தில் உலகத்திலுள்ள சூரியன் முதல் அருள்நெறிவரை விளங்கிய பிரகாசத்தினால் ஐம் பொறிகளும் அவனால் பிரகாசித்தன என்றும், பிரளயகாலத் திலும் அவனது வடிவமே திரும்பாமல் எப்போதும் பிரகாசிக்கும் என்றும் அவனே எல்லாம் என்று நினைக்கின்ற மனபாவனை கிடையாது என்றும் சிந்தித்து சமாதி நிலையை அடைந்தான்.

திருமால், பிரகலாதன் அப்படி இருந்தால் பிரமதேவனது படைப்பு நடக்காது என்றும், அசுரர்கள் இல்லாவிட்டால் தேவர் கள் போர் இல்லாமல் முத்தி அடைவார்கள் என்றும் எண்ணி னார். அதனால் யாகமும் தவசும் நடக்காது அவை இருந்தால் தான் படைப்பு உண்டாகும். எனவே பிரகலாதனை அந்தஉடலுட னே வாழவைக்க வேண்டும். என்று அவனது சமாதி நிலையை மாற்ற பாதாள உலகம் அடைந்தார். தன்னுடைய பாஞ்ச சன்னியத் தொனியை எழுப்பினார். பிரகலாதன் மெல்ல அறி வுற்று திருமாலைப் பார்த்தான். அவனைப் பார்த்து வீணாக மரணமடைய வேண்டாம், உபசாந்த நிலையை அடைந்துள்ள மையால் அதுவே முத்தி நிலையாகும். எனவே அந்த நிலையுடன் அரசாட்சி செய்வாயாக என்று கூறித் திருமாலே பிரகலாதனுக்கு முறைப்படி, முடி சூட்டுதல் (பட்டாபிசேகம்) செய்து வைத்து எப்பொழுதும் சீவன் முத்தனாய் வாழ்வாயாக என்று அருளி மறைந்தார்.

2.4.18.5.4.1. கதையால் அறியப்படுபவை:

1) சுத்தவாசனையானது குடும்பச் சுமை இல்லாத சீவன் முத்தர்களுக்குப் பிறப்பு என்பது திரும்ப இல்லாமல் இருக்கச் செய்யும்.
2) சுத்தவாசனை சுழுத்தி வாசனைப் போல எப்போதும் இருக்கும்.
3) அனுபவம் இறைவன் அருளால் கிடைக்கும்.
4) அசுத்தவாசனையினால் சீவன் முத்தர்களுக்கு மனம் அறிதலைக் கொடுக்கும்.

5) இறைவனை உள்ளன்போடு வேண்டுபவர்களுக்கு அருள் கிடைக்கும்.
6) நன்மை தீமை எப்போதும் நாட்டில் இருக்கும்.
7) பற்றில்லாமல் இருந்தால் ஞானத்திற்குச் சமமானது வேறு ஒன்றும் இல்லை.
8) ஞானத்தில் மூழ்கியவர்களுக்கு ஆத்மா தானாகவே பிரகாசிக்கும்.
9) ஞானத்தினால் எல்லாம் பெறலாம்.

**2.4.19.5.5. காதி கதை:**

2.4.19.5.5.0 கோசலை நாட்டில் காதி என்னும் அந்தணன் வாழ்ந்து வந்தான். அவன் மாயையை அறிய வேண்டி உறவினர்களை விட்டு, காட்டில் வந்து ஒரு தடாகத்தில் தலைமட்டும் மூழ்காமல் இருந்து எட்டுமாதம் தவம் செய்தான். திருமால் காட்சி கொடுத்து அவன் வேண்டிய வரத்தைக் கொடுத்து மறைந்தார். திருமால் அருளிய வார்த்தையைச் சிந்தித்துக் கொண்டு ஒரு தடாகத்தில் மூழ்கினான். வேதமந்திரங்களை மறந்தான். அவன் வீட்டில் நோயினால் இறந்ததாகவும், சுற்றத்தார் அழுவதையும் அவனை மயானத்தில் கொண்டு சுட்டுச் சாம்பலாக்குவதையும் கண்டான். பின் ஊண தேசத்தில் சண்டாளர் குலத்தில் பிறந்து, அக்குலத்தில் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து சில மக்களைப் பெற்றான். குடும்பத்தில் அவனைத் தவிர எல்லோரும் இறக்க, கவலையினால் பல நாடுகளைச் சுற்றிவந்தான். கீரநாட்டில் வர, அங்கு ஒரு யானை வந்து அவனைத் தூக்கிச் சென்றது. அந்த யானை அந்த நாட்டு அமைச்சர்களால் புதிய அரசனைத் தேர்ந்து எடுக்கும்படி அனுப்பப்பட்டதாகும். அங்கு அரசனாகப் பதவி ஏற்று எட்டு ஆண்டுகள் ஆட்சி செய்துவந்தான். ஒரு நாள் தனியாக அரண்மனையினுள் நடக்குகையில் அவன் குலத்தில் உள்ள ஒருவன் வந்து அவனைக் கட்டிப்பிடித்துப் பழைய கதை எல்லாம் கூறினான். அங்குள்ள யாராவது பார்த்தால் அவனுக்குத் தீங்கு ஏற்படும் என்று நினைத்து அந்தச் சண்டாளனை அதட்டி விரட்டி விட்டான்.

அதைச் சன்னல் வழியாகப் பார்த்தும் கேட்டும் இருந்த அரசவைப் பெண்கள் அமைச்சர்களிடம் தெரியப்படுத்தினர்.

எதையும் தெரியாதவன் போலச்சென்று அரசவையில் இருந்தான். ஒருவரும் அவனிடம் செல்லவில்லை. அமைச்சர்கள் அனைவரும் அந்தப் பாவம் தீரவேண்டுமானால் தீயில் வீழ்ந்து உயிர்துறக்க வேண்டும் என நினைத்துத் தீயில் வீழ்ந்து மடிந்தார்கள். அதைக் கண்ட அரசனும் அவ்வாறே தீயில் வீழ்ந்தபோது, நீரில் மூழ்கி யிருந்த காதியின் உடல் பதைத்தது. உடனே நீரைவிட்டு எழுந்தான். மாயையினின்று நீங்கி இறைவனைப் புகழ்ந்து மனம் மகிழ்ந்து இருந்தான்.

ஒருநாள் ஒரு (அதிதி) விருந்தினன் காதியின் இருப்பிடம் வந்தான். இருவரும் ஆத்ம ஞான நூல்களைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர். அவ்வாறு இருக்கையில் காதி அவனைப் பார்த்து உடல் தளர்ந்து இருப்பதன் காரணத்தைக் கேட்டான். அதற்கு அதிதி தான் கீரநாட்டில் இருக்கும் போது ஒருவன்வந்து இந்த நாட்டை ஆட்சி செய்வாயாக என்றும், இதற்கு முன்பு ஓர் சண்டாளன் எட்டு ஆண்டுகள் ஆட்சிசெய்து வந்ததை அறிந்த அரசவை மக்கள் தீயில்வீழ்ந்து இறந்தனர் என்றும் கூறினான். அதைக் கேட்டதினால் அந்தப் பாவத்தை நீக்கும் பொருட்டு பிரயாகை நதியில் வேதமுறைப்படி மூழ்கி உபவாசம் இருந்த தினால் அவ்வாறு ஆகிவிட்டது என்றான். பின் காதி, முன்னால் தான் அனுபவித்த இடங்களைப் பார்க்க ஆசைப்பட்டு கீர நாட்டை அடைந்து எல்லாம் பார்த்தான். திருமால் கூறிய மாயை இதுதானா என்று ஆச்சரியப்பட்டு, அதை நன்றாக அறிந்ததாக எண்ணி மகிழ்ந்து ஒரு மலையில் சென்று திருமாலை நோக்கித் தவம் செய்தான்.

திருமால் காட்சி கொடுத்து மாயையின் மகிமையை இயல் பாக்கண்டவனுக்கு இனிமேல் வேண்டுவது என்ன என்று கேட்டார். காதி மாயையின் அந்தரங்கத்தை அறியவில்லை என்றும் மயக்கமானது என்னவென்றும் கேட்டான். திருமால் அவனைப் பார்த்து, இந்த பூமி எல்லாம் மனத்தினிடத்தி லிருப்பதே அல்லாமல் புறத்தில் இல்லை. காரணமில்லாத கனவும், பிரமையும், மதமும் முதலான மார்க்கங்களினால் எல்லாரும் அனுபவிக்கிறார்கள். சித்தையுள் உலகம் இருப்பதே அதற்குக் காரணமாகும். மனத்தை விவேகத்தினால் கெடுத்தால் அந்த மாயை வருத்தாது. எனவே மேலும் பத்து ஆண்டுகள் தவம்

செய்தால் மாயை நீங்கி ஞானம் அடைவாய் என்று கூறி திருமால் மறைந்தார். காதி அவ்வாறே தவம் செய்து மன அடைந்து சீவன் முத்தனாய் வாழ்ந்தான்.

**2.4.19.5.5.1. கதையால் அறியப்படுபவை:**

1) மாயைக்குக் காரணமான பிரம்மத்தை அறிந்தால் உலகம் என்பது இல்லை.
2) மனத்தை வென்றால் அன்றிமாயை கெடாது.
3) சிந்திக்க அறிவில்லாதவர்கள் துன்பத்தில் அழுந்து வார்கள்.
4) மயக்கம் என்னும் மோக சக்கரத்துக்கு மனமே அச்சாகும்.
5) மனத்தை விவேகத்தால் தடுத்தால் மாயை வருத்தாது.
6) அரசாட்சி செய்வதற்கு அரசபரம்பரையினரே தகுதி யுடையவர்கள்.
7) ஒரு கனவை அளவற்ற மனிதர்கள் தனித்தனியே பார்ப்பார்கள்.
8) மாயையே எல்லாவற்றிற்கும் காரணம்.

2.4 19.5 5.2. காதிகதை போன்று, நாரதருக்கு மாயையின் வல்லமையைத் திருமால் அறிவுறுத்தியதாக, விவேகாநந்த சுவாமிகள் இயற்றிய ஞானயோக விளக்க நூலில் காணப் படுகிறது[4].

**2.4.20.5.6. உத்தாகலன் கதை:**

2.4.20.5.6.0. உத்தாலகன் என்பவன் காட்டில் வாழ்கின்ற முனிவன். அவன் மனத்தினால் பலவாறாக எண்ணிக்கொண்டிருந் தமையால் சமாதி நிலையை அடைய முடியவில்லை. ஒருநாள் புத்தனைப் போலச் சமாதியில் இருந்து பலவாறாகச் சிந்திக்கத் தொடங்கினான். ஐம்பொறிகளுக்கெல்லாம் தலைவனான மனத் தைக் கெடுக்க நினைத்தான். இறுதியில் பஞ்ச பூதங்களையும் அடக்கிப் பிரம்மபதத்தை அடைந்தான். அவன் எல்லாவற்றையும் நீக்கி ஞான ஆகாய வடிவமானான். அவன் நிலையான பிரம்ம பதத்தை அடைந்துள்ளானா என்று சோதிக்கும் பொருட்டு, இந்திரன் முதலான தேவர்கள் வந்து தேவ உலகத்தை எடுத்துக் கொள்ளும்படி அவனிடம் கூறினார்கள். அவனுக்கு அதில் இன்பம் இல்லை என்றும், இந்த நிலையே சிறந்த இன்பம்

உடையது என்றும் கூறி சமாதியில் இருந்தான். மீண்டும் சோதிக்கும் பொருட்டு அவன் கண் விழிக்கும் நேரத்தில் சித்தர் கூட்டங்கள் கூடி அவனைத் தேவ உலகத்திற்கு வரும்படி அழைத்தனர். அப்பொழுதும் அவன் மறுத்துவிட்டான். இவ்வாறு அவன் மறுத்தமையால், உபசாந்த மனம் உடையவனாய் பிறவி ஐயம் நீங்கி நிருவாண வடிவமானான்.

## 2.4.20.5.6.1 கதையால் அறியப்படுபவை:

1) பிரம்மத்தை அடையாதவர்களை மாயை துன்பப் படுத்தும்.
2) மனத்தைக் கெடுத்தால் பிறப்பு அற்றுப்போகும்.
3) எண்ணம், ஆசை, கழிந்ததை நினைத்தல் இந்த மூன்றையும் ஒழித்தால் அதுவே மனத்தின் வெற்றியாகும்.
4) வேதங்களினாலும், குருக்களின் உபதேசத்தினாலும் மனத்தினுடைய பந்தமானது நீங்கும்.
5) குடும்ப நினைப்பாலும், அகங்காரத்தாலும் மனமானது விருத்தி அடையும்.
6) ஐம்பூதங்களை அடக்க வேண்டும்.
7) பஞ்சபூதங்களை ஆத்ம விசாரணையினால் அடக்கலாம். அவ்வாறு அடக்கினால் அத்வைதநிலை கிடைக்கும்.
8) போகங்களைக் கெடுக்க வேண்டும்.
9) தேவ உலகத்தில் வாழ்வதைவிட பத்மாசனத்திலிருந்து ஓம் என்ற பிரணவத்தை உச்சரித்துக் கொண்டிருப்பதே மேலான பிரம்மபதம்
10) சமாதியில் இருக்கும் போது எந்த இன்னல்கள் வந்தாலும் தம்மைப் பாதிக்காது.
11) தன்னுடைய முயற்சியினால் பிரம்மபதத்தை அடையலாம்.
12) சமாதி மூலம் உண்டான ஆனந்தத்தால் மனம் அமைதி அடையும்.

## 2.4.21.5.7. சுரகு கதை!

2.4.21.5.7.0. சுரகு என்பவன் வேடர்களுக்குத் தலைவன். அவன் உலகத்தைத் துன்பப்படுத்தினால் அந்த துன்பம் தமக்கே என்று எண்ணினான். அதைப்பற்றித் தன் குருவான மாண்டவிய முனிவரைப் பார்த்துக் கேட்டான். ஆத்ம விசாரணையினால்

மனத்தின் காங்கமானது ஒரு நொடிப் பொழுதில் மாறும். தான்யார், இந்த உலகம் எப்படிப்பட்டது, பிறப்பும், இறப்பும் எப்படி வந்தது என்று உள்ளத்தில் ஆராய்ந்திருந்தால் உயர்ந்த பதவியை அடையலாம். தான் என்கின்ற எண்ணம் இல்லாதவனாய் இருந்தால் துன்பம் நீங்கும். உலகத்திலிருந்து எவ்வளவுக் கெவ்வளவு நீங்குகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு ஆத்மாவானது உண்டாகும். எல்லாப்பற்றுக்களையும் நீக்கினால் வீடுபேறு. கிடைக்கும் என்று முனி கூறிச் சென்றார்.

மாண்டவியமுனி சென்ற பிறகு சுரகு அரசன் தனி இடத்தில் இருந்து முனி கூறியவற்றை நினைத்து சிந்தித்துக் கொண்டிருந்தான். அதனால் பிரம்மபதத்தை அடைந்தான். இல்வாழ்க்கையில் ஈடுபட்டுக் கொண்டே முத்தி அடைந்தான். காட்டில் சென்று ஞானம் பெற்று வந்த பார்த்திபன் என்ற அரசன் சுரகுவைக் கண்டான். அவனது ஞானத்தினால் சுரகுபெற்ற முத்திப் பதத்தைச் சோதிக்கும் பொருட்டு சுரகுவைப்பார்த்து நாட்டைச் சமபார்வையால் ஆட்சி நடத்துகின்றாயா போன்ற பலகேள்விகளைக் கேட்டான். அதற்கு சுரகு, பிரம்மபதத்தை அடைந்தமையால் எல்லாவற்றையும் சமமாகப் பார்த்து ஆட்சி செய்ய முடிகிறது என்றான்.

### 2.4.21.5.7.1 கதையால் அறியப்படுபவை:

1) குடும்ப வாழ்க்கையில் ஈடுபட்டும், காட்டில் சென்றும் தவம் செய்தால் முத்தி அடையலாம்.
2) இல்லற ஞானிக்கும் துறவற ஞானிக்கும் உயர்வு தாழ்வு இல்லை.
3) குரு அறிவுரையால் முத்தி அடையலாம்.
4) ஆசை நீங்கின ஆத்மஞானமே மேன்மையான சமாதியாகும்.
5) மனஅமைதி ஆத்ம விசாரணையில் கிடைக்கும்.
6) தான் என்கின்ற பாவானையை மனத்தினால் கெடுத்தால் வீட்டில் இருந்தாலும், காட்டில் வாழ்ந்தாலும் பலன் ஒன்றே.
7) நாட்டை நன்முறையில் ஆட்சிசெய்ய பின்வரும் கருத்துகளைக் கூறுவர்.
   (i) நாட்டைச் சமபார்வையால் பார்க்க வேண்டும்.

(ii) உடலானது மனவியாதியால் தொடரக் கூடாது.
(iii) செல்வத்தில் அழுந்தாமல் நேர்மையாக இருக்க வேண்டும்.
(iv) சிற்றின்பத்தில் மூழ்கிவிடக் கூடாது.
(v) எண்ணங்களை விட்டு மன அமைதி அடைந்து சாந்தமாகியும் சஞ்சலம் அற்றும் இருக்க வேண்டும்.

## 2.4.22.5.8.1. பாசவிபாசன் கதை:

**2.4.22.5.8.0.** சையம் என்கின்ற மலையில் அத்திரிமுனிவரின் ஆச்சிரமத்தில் விபாசன், பாசன் என்ற இருமுனிநண்பர்கள் வாழ்ந்து வந்தார்கள். தங்களுடைய தாய் தந்தையர்கள் மரணம் அடைய அவர்களுக்குரிய கிரியைகளைக் செய்து அழுது கொண்டு இருவரும் இருதிசைகளில் பிரிந்து சென்றார்கள். ஒரு நாள் இருவரும் சந்தித்தனர். விபாசன், பாசனைப் பார்த்து எந்த இடத்தில் வாழ்ந்தாய்; மனதுக்கம் தீர்ந்ததா; சமத்துவமாக ஆத்மவடிவத்தை உணர்ந்தாயா; பூரணஞானம் கிடைத்ததா என்று கேட்டான். அதற்குப்பாசன், எதுவும் கிடைக்கவில்லை. பிறப்பில் சுழல்கின்றதினூல் எப்படி சுகம் உண்டாகும் என்றான். பிறப்பானது நீங்காமல் நன்மை உண்டாகும் விதம் எப்படி; ஆசை நீங்காதவனுக்கு ஞானம் எப்படி கிடைக்கும், பிறப்பு இறப்புக்கு முடிவு எப்பொழுது என்றும் கேட்டான். விபாசன் அஞ்ஞானத்தை நீக்கினவர்களுக்குக் கொடிய பிறப்பு ஏற்படாது. அடையவேண்டிய விதிப்படி ஆத்ம சுகத்தை அடையாதவர்கள் பிறப்பு இறப்பிலிருந்து நீங்கமாட்டார்கள் என்றான்.

## 2.4.22.5.8.1. கதையால் அறியப்படுபவை:

1) அஞ்ஞானத்தை விட்டவர்களுக்கே பிறப்பு இறப்பு நீங்கும்.
2) ஆனந்தம் உண்டானால் சமாதி, அல்லாவிட்டால் துன்பமே ஏறபடும்.

**2.4 22.5.8.2** யோகவாசிட்டத்தில் பாசன் விபாசன் என்ற இரண்டு முனிவர்களும் அத்திரமுனி என்பவர்க்கும் அனுசுயா என்பவளுக்கும் பிறந்த குழந்தைகள் என்று கூறப்பட்டுள்ளது. ஞானவாசிட்டத்தில் அத்திரி முனிவர் வாழ்ந்த ஆச்சிரமத்தில் வாழ்ந்து வந்த நண்பர்கள் எனக் கதை ஆரம்பித்துள்ளது. இஃது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

**2.4.22.5.8.3.** ஸ்ரீ சின்மயாநந்த சுவாமிகளின் பதிப்பில் இந்தக் கதையைப் பொருளடக்கத்தில் பாசவிபாசன் எனக்குறிப் பிட்டுவிட்டு நூலின் உள்ளே பாசவிபாசர் எனக் கொடுத்திருப்பது ஆய்வுக்குரியது. இது பதிப்பித்தவரின் கவனக்குறைவா அல்லது ஏட்டிலிருந்து. பகர்த்து எழுதும் போது ஏற்பட்ட பிழையா என்ப தற்குக் விளக்கமில்லை. பதிப்பாசிரியர்களும் ஆசிரியரும் இதைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

## 2.4.23,5.9, வீதகவ்வியன் கதை:

**2.4 23 5.9.0.** வீதகவ்வியன் விந்தமலையில் வாழ்ந்து வந்த முனிவன். அவன் ஆசையினால் சிக்குண்டு கரணநோயையும் உடல் நோயையும் குடும்பத்துன்பத்தையும் கொடுக்கின்ற செயல் களினால் வருந்தினான். பின் சமாதியில் இருந்து குரங்கு போல தாவுகின்ற மனத்தை மெல்லமெல்லத் திருப்பி விசாரணை செய் தான். அலைந்து திரிகின்ற இந்திரியங்களில் சேரக்கூடாது என்று அவற்றை அறிவினால் நீக்கி முந்நூறு ஆண்டு சமாதியில் இருந் தான். அவ்வாறு பல நாள் இருந்தமையால் பூமியினுள் உடல் மூழ்கிவிட்டது. தன்ஞானப் பார்வையினால் கனவைப் போலத் தான் முன் வாழ்ந்த கைலாச மலையின் பக்கத்தில் நூறு ஆண்டு முனியாகவும், நூறு ஆண்டு வித்தியாதரனாகவும், ஐந்து யுகம் தேவேந்திரனாகவும், கற்பகாலம் பரமசிவனுக்கு அன்பாகிய கணேசனாய் இருந்ததையும் பார்த்தான்.

அவ்வாறு பூமியில் மறைந்திருக்கின்ற தன்னுடைய உடலை எடுக்கச் சூரியனை வேண்டினான். சூரியன் பிங்கலனை அனுப்பி னான். பிங்கலன் உதவியினால் சூக்கும உடல் தூல உடலில் சென்றது. அவன் சூரியனை வணங்கி சமாதி நிலையை அடைந்து சீவன் முத்தனாய் இருந்தான்.

மேலும் அவன் பத்மாசனத்திலிருந்து வீடு அடைய வேண்டிச் சிந்தித்தான். ஆசையை நிராசையாகச் செய்தும், கோபத்தைச் சாந்தமடையச் செய்தும், போகங்களைத் தடுத்தும், வீடுபேற்றை மறைத்து விடய சுகத்தை மாற்றியும், ஆத்ம தத்துவத்தை அறிந்தும் வெறுத்தும், உபசாந்தனாகியும் இருந்து அத்வைத மானான்.

### 2.4.24.5.9.1. கதையால் அயப்படுபவை:-

1) அறிவுத் தடைக்குக் காரணம் சங்கமும் பிராணனும் ஆகும்.
2) சலனம் நீங்கும் வழிக்குரிய கருவிகள் யோகமும் ஞானமுமே.
3) மறுபிறவி உண்டு.

### 2.4.24 6.1. புசுண்டன் கதை:

2.4.24.6 1.0. மகாமேருமலையில் கற்பக மரத்தின் தென்புறக் கொம்பில் ஒரு கூட்டில் புசுண்டன் என்னும் காகம் வாழ்ந்து வந்தது. ஒரு சமயம் வசிட்டர் அதைக் காணச் சென்றார். வசிட்டரை அஃது அன்போடு வரவேற்றது. அவர் அதனுடைய வாழ்க்கை வரலாற்றை வினாவினார்.

அட்ட சத்திகளுக்குள் ஒன்றாகிய அலம்புசை என்னும் சத்திக்குச் சண்டன் என்கின்ற காகம் வாகனமாகும். அச்சத்திகள் அனைவரும் சிவனின் ஏவலினால் ஆகாயத்தில் திருவிழாவை ஆரம்பித்து மதுவைக் குடித்து ஆரவாரம் செய்து கொண்டிருந்தாகள். அவர்களுடைய வாகனங்களும் மதுவைக் குடித்து ஒன்றோடு ஒன்று கலந்து விளையாடின. சண்டன் என்ற காகம் அன்னங்களோடு விளையாடியது. அதனால் அன்னங்கள் கருப்பம் அடைந்தன அட்ட சத்திகள் விழாவை முடித்து வாகனங்களுடன் தங்கள் தங்கள் இடத்திற்குச் சென்றனர். பிரம்மசத்தியின் வாகனமான அன்னம் தன் நிலையைக் கூறப் பிரம்மசத்தி, ஊழின் படி கருப்பம் அடைந்ததாகக் கூறித்தங்கள் விருப்பம் போல வாழும் படி அனுப்பியது. அன்னம் மாநதத் தடாகத்தின் கரையில் வந்து வாழ்நதது. கால நியமப்படி சண்டன் என்ற காகத்தின் ஆண் மக்களாக இருபத்தொரு பேர் பிறந்தனர். அவர்களில் ஒருவனே புசுண்டன் பிரம்ம சத்தியின் அருளால் அனைவரும் தேவ உலகத்தை அடைந்தனர். அவர்கள் திருவான சுகத்தில் இருக்க வேண்டித் தனி இடம் வேட்டனர். பிரம்ம சத்தி மகாமேரு மலையில் வாழும் படி கூறி அனுப்பினாள். புசுண்டனைத் தவிர மற்றத் தம்பியர் மோட்சத்தை அடைந்தனர்.

வசிட்டர் புசுண்டனிடம் அவ்வளவு காலம் இறவாமல் இருந்தற்குக் காரணம் கேட்டார். புசுண்டன் உலகத்தின் தொழிலானது எந்தக் காலத்தில் இல்லாமல் போகுமோ அந்தக் காலத்தில் தான் இந்தக் கூட்டை விடுவதாகக் கூறியது. வசிட்டர். மேலும் இயமனை வெற்றி கொண்டது எவ்வாறு எனக் கேட்டார் வாசனை முதலிய பற்றுக்கள் யாவையும் கெடுத்துத் தனது ஆத்ம ஞானத்தைத் தரிசித்தால் இயமன் பக்கத்தில் வர மாட்டான் என்பவற்றைப் புசுண்டன் கூறியது.

## 2.4.24.6.7.1. கதையால் அறியப்படுவை:

1) மறுபிறப்பு இல்லாத வீட்டை அடைய எட்டு விதப் பிராணாயாம சாதானம் தேவை.
2) அத்வைத வடிவமானால் ஆநந்தம் அடையலாம்.
8) தான் என்கின்ற எண்ணம் இருக்கும் வரை சித்தம், மாயை, மனம், சீவன் முதலிய மயக்கங்கள் இருக்கும்.
4) ஆசையைத் தத்துவ நூற்களால் கெடுக்க முடியும்.
5) மூடர்களுக்கு அறிவுரை செய்யக் கூடாது.
6) குருவின் மொழியால் ஞானம் உண்டாகி மனச்சஞ்சலம் நீங்கும்.
7) சத்துவம், இராசதம், தாமசம் என்ற மூன்று அவித்தைகளை நீக்கினால் பிரம்ம பதம் அடையலாம்.
8) காலாதீதமான ஞானத்தையும், அது காரணமாகச் செய்யும் யோகத்தையும் அதனால் அடையும் ஆத்ம பலனையும் இந்தக் கதை விளக்கியுள்ளது.
9) வாசனை நிறைந்த மனத்தை உடையவர்களையும், மனத்துயரத்தை அடையாதவர்களையும், ஆசை இல்லாதவர்களையும், கோபம் என்ற வேரைக் கெடுத்த ஞானவான்களையும், மன்மதனால் அழிவு படாத அறிவையுடையவர்களையும், பற்றுக்களை நீக்கித் தனது ஆத்ம ஞானத்தைத் தரிசித்தவர்களையும், வேற்றுமை கெட தீமை யில்லாத ஏகமாகிய மனத்தை உடையவர் களையும், திருவாணப பதததை அடையப் பெற்றவர் களையும் கூற்றுவன் அணுகமாட்டான்.

2.4.24.6.1.2. இந்தக்கதையில் இராமாயண, மகாபாரத செய்திகள், திருமால், இராமன், வசிட்டர் போன்றவர்களின் அவதாரச் சிறப்புக்கள், அமுதம் கடைந்த செய்தி போன்ற புராணச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. பழமையை எடுத்துக் காட்டும் முகமாகவும் இந்தக்கதை அமைகின்றது. வசிட்டரே ஒரு பாத்திரமாக இக்கதையில் அமைவது நோக்குதற்குரியது.

2.4.24.6.1.3. காக புசுண்டர் என்ற சித்தர் பாடலிலும் வசிட்டர் பல பிறவிகள் எடுத்துள்ளார் என்ற செய்தி கணக்கிடக் கிறது.

'பெற்றோரே யென்றுரைத்தீர் வசிட்டரே! நீர்
பிறந்திறந்தே எட்டாங்காற் பிறந்து வந்தீர்'
(காக புசுண்டர்; காகபுசுண்டர் உபநிடதம்,
பாடல் III: 12, 1,2)

## 2.4.25.6.2. தேவபூசை கதை:

2.4 25.6 2.0. கயிலைமலையில் வசிட்டர் பரமசிவனை ஆராதித்துத் தவம் செய்து இருந்தார். ஒரு நாள் இருள் பரவி இருந்தபோது ஒரு வெளிச்சம் (ஒளி) தன்னை நோக்கி வருவதைப் பார்த்தார். அது நந்தி முன்வர உமை பரமசிவன் வந்த ஒளியாகும். அவர்கள் வருவதைக் கண்டு வசிட்டர் சீடர்களுடன் சென்று வணங்கினார். அருள்புரியும் நோக்கில் பரமசிவன் வசிட்டரைப் பார்த்துத் துன்பம் நீங்கி, உபசாந்த மாய் மனதிம்மதியடைந்து அறிவு பிரம்ம பதத்தில் நிலைத் திருக்கிறதா என்றும், தவம் தடையில்லாமல் நடக்கிறதா என்றும், அடைய வேண்டியவற்றை அடைந்து ஆசைகள் அற்று விட்டதா என்றும் கேட்டார். அதற்கு வசிட்டர் தங்களுடைய அருளைப் பெற்றவர்களுக்குப் பெறுதற்கரியது ஒன்றுமில்லை, தங்களை வணங்கியவர்கள் எந்த இடத்தில் வாழ்ந்தார்களோ அதுவே நாடும் அதுவேஎல்லாம் ஆகும் என்றும் கூறினார்.

வசிட்டர் பரமசிவனிடம் துன்பங்கள் அனைத்தையும் கெடுத்துச் சுகங்கள் யாவையும் கொடுக்கின்ற தேவாராதனை என்ன என்று கேட்டார். பரமசிவன், தெய்வம் தனியான

திருமாலுமல்ல, சிவனுமல்ல, பூதஉடலால் கிடைத்ததுமல்ல, ஒழிகின்ற மனதுமல்ல, ஆதிஅந்தமும் இல்லாததாகியும் சுகமாகியும் இருக்கின்ற ஞானமே தெய்வமாகும் என விளக்கினார். ஆத்மஞானத்தை ஆராதனை செய்வதே மகா பூசையாகும். குறித்த உருவங்களில் ஆராதிப்பது ஆராதனையல்ல. ஞானமானது எந்தக்கலைக்கும் எட்டாதது. எல்லாக் கருத்துக்களிலும் இருக்கும். எப்போதும் ஆத்மாவை நெருங்கி இருக்க வேண்டும். எல்லா உருவங்களிலும், எல்லா இடங்களிலும் எல்லாம் பிரம்மமே என்று பூசைசெய்ய வேண்டும். ஆசிரியரின் அறிவுரையால் மாயையை நீக்கும் வழிகளைப் பெறலாம் என்றும், ஞானவான்கள் நாள்தோறும் தேவாராதனை செய்கையினால் பிரம்மத்தை அடைவார்கள் என்றும், பிரம்மம் முதலான மொழிகளுக்கெல்லாம் தெரியாமல் இருக்கின்ற பொருள் எதுவோ அதுவே ஞானம் என்றும், மனத்துக்கு மேலான ஆத்மாவினால் உருவமாகிய சத்திகள் இன்ன அளவு என்பதற்கு அறியதாகும் என்றும், பிரம்மத்தை அறியும் விவேகத்தை உடையவர்களுக்கு அறிவுரை செய்ய வேண்டும் என்றும், தேவ ஆராதனையினால் ஏற்படும் பலனையும் கூறி உமையுடன் ஆகாயத்தில் மறைந்தார்.

## 2.4.25.6.2.1. கதையால் அறியப்படுபவை:

1) உடல் முதலிய எல்லாம் அசத்து.
2) ஞானமே தெய்வம்.
3) சங்கற்பம் இருக்கும் வரைதுக்கம் கெடாது.
4) சங்கற்பம் நீங்கினால் பிரம்மானந்தம்.
5) தேவாராதனையினால் ஏற்படும் பலன்:

அ. ஆத்மதேவதையை நூறுநொடி நேரம் ஆராதனை செய்தால் ஆயிரம் அசுவமேதத்தின்பலன் அடைவர்.

ஆ. அரைநாழிகை நேரம் ஆராதனை செய்தால் இலட்ச அசுவமேதத்தின் பலன் அடைவர்.

இ. ஒருநாழிகைநேரம் ஆராதனை செய்தால் இராசசூய யாகத்துக்கு ஒப்பாகும்.

ஈ. ஒரு நாள் ஆராதனை செய்தால் பிரம்மப்பிரகாசத்தில் பொருந்துவர். இதுவே குற்றமற்ற யோகமும் கிரியையுமாகும்.

2.4.25.6.2.2. இக்கதை, பக்தனுக்கு இறைவன் நேரில் வந்து சந்தேகங்களைத் தீர்க்கும் முறையை விளக்குகிறது. மற்றகதைகளில் இருந்து இக்கதை மாறுபட்டுக் காணப்படுகிறது. இராமனுக்கு, வசிட்டர் பிறருடைய கதைகளைக் கூறிவந்தவர் இங்கு தன்னுடைய கதையையே கூறுகிறார். அவர் கூற்றாகவே கதையைத் தொடங்கியுள்ளார் ஆசிரியர். இஃது இராமனின் எண்ணங்களுக்கு வலுவூட்டும் உத்திகளில் ஒன்றாக ஆசிரியர் அமைத்திருக்கலாம்.

## 2.4.26.6.3. வில்வ பலக்கதை:

2.4.26.6.3.0. கற்ப காலத்தில் அடிக்கின்ற காற்றினாலும் கலக்க முடியாததாகியும், அண்டங்கள் உண்டாவதற்குக் காரண மாயும் இருக்கின்ற ஒரு வில்வப் பெருங்காய் உண்டு. அதனிடத்தில் நசிக்கின்ற பிரம்ம அண்டங்கள் பல உண்டுt எப்பொழுதும் பருவமாய் இருக்கும். மூப்பு வருத்தாது. அநேக பழங்களினது சாரங்களைப் பெற்றிருக்கும். அதிலுள்ள சதைக்கு அளவில்லை. சதை என்றது ஞான வடிவத்தின் சுபாவமாகும். சிற்சத்தி, ஆகாயத்தை மிஞ்சியது: காலத்தில் கலைகள் அழிவில்லா நியதி அசைகின்ற தொழில் என்று கூறப்படும். வில்வக்கனியின் சதை சிற்சத்தியின் சமத்காரமாகும்.

## 2.4.26.6.3.0.1. விளக்கம்:

வில்வப்பழம் என்று குறிப்பிட்டது ஞானத்தின் மிகுந்த அறிவே. அகம்பாவம் முதலிய பொருட்கள் யாவும் ஞானத்தினது சதையே ஆகும். வில்வப் பழத்தினுள் நிறைந்திருக்கின்ற சதை யானது பிரம்மாண்டம் முதலிய உலகங்கள் ஆகும். துவிதமாயும் ஏகமாயும் தோன்றுகின்ற ஞானவடிவத்துக்கு எப்போதும் வேற்றுமையில்லை. பிரம்மாண்டமென்கின்றது பூசணிபழத்தினுள்ள மச்சையானது மகாமேரு முதலிய எல்லாம் ஆனது போல ஞான மாகிய வில்வப்பழத்தினுள்ள பச்சையானது பிரம்மாண்டம் முதலிய உலகம் அனைத்துமாய் வேற்றுமை அற்றதாய் இருக்கிறது.

## 2.4.26.6.3.1. கதைமால் அறியப்படுபவை:

1) வில்வப் பழத்தின் தோட்டை உலகமாகவும் உள்சதைப் பகுதியை ஞானமாகவும் குறிப்பிட்டுள்ளார்.

2) உலகப்பந்தங்களை நீக்கினால் ஞானத்தை அடையலாம்.
3) பிரம்மசத்தியே எல்லாமாய் விளங்கும்.
4) ஞானமே எங்கும் நிறைந்திருக்கும்.

### 2.4.27.6.4. சிலைக்கதை:

2.4 27 6 4.0. வசிட்டர் இராமனிடம், சிக்கெனப்பிடித்துக் கொள்வது போன்று நெருக்கமுற்றுப் பரவி முடிவு இல்லாமல் இருக்கும் ஒரு சிலை உண்டு என்றும், அந்தச்சிலையினிடத்தில் விரிந்த தாமரைப் பூக்கள் அளவில்லாமல் மலர்ந்து இருக்கும் என்றும் கூறினார். அதைக்கேட்ட இராமன் தான் திருமால் வசிக்கின்ற சாளிக்கிராமம் என்கின்ற மலையில் இப்படிப்பட்ட வடிவில் ஒரு சிலையைக் கண்டதாகக் கூறினார். வசிட்டர் அவனிடம் அந்தச் சிலை அல்ல இது என்று கூறி விளக்கினார்.

### 2.4.27.6.4.0.1. விளக்கம்:

அண்டத்தின் நிலைமைகளான அகத்தில் வாழ்கின்ற சித்தே சிலை ஆகும். பலவும் ஒன்றும் ஆகிய உலகங்கள் அகத்தில் தங்கிய ஞானமானது மேலான சிலையாகும். சிக்கென நெருங்கியது என்று குறிப்பிட்டது ஞானச்சிலையினிடத்தில் உலகக் கூட்டங்கள் ஆகாயத்தில் வசிக்கின்ற வாயுவைப் போலத் தங்கும். கல்லில் தாமரையும் சங்கும், சக்கரமும் பொருந்தி இருப்பதுபோல ஞானத்தின் கண் உலகங்கள் வேறுபாடில்லாமல் இருக்கும். பலவிதமான அடையாளங்கள் உள்ளத்தில் பொருந்தி னாலும் ஒற்றுமையே பொருந்துகின்ற சிலையைப்போல நீங்காது. உலகங்களை அகத்தில் அடக்கி இருந்தாலும் வேற்றுமை இல்லாமல் அறிவு ஒன்றே பொருந்தும். பரந்தகல்லில் பொறித்த தாமரைப் போன்றவை பிறந்து இறந்தது இல்லை, அதுபோலச் சித்தில் மூன்று உலகங்களும் நிலையானது. கல்லில் தோன்று கின்ற சித்திரங்கள் அதற்கு வேறுபடாமல் அதுவாக விளங்குதல் போலப் பிரம்மத்தில் தோன்றுகின்ற உலகம் அதற்கு வேறு படாமல் பிரம்மமாகவே விளங்கும்.

### 2.4.27.6.4.1 கதையால் அறியப்படுபவை:

1) ஞானம் அசையாது
2) எல்லாம் பிரம்மமயம்.

3) உலகத்திலுள்ள எந்தப் பகுதியிலும் பிரம்மத்தின் கூறு நிறைந்திருக்கும்.
4) எல்லாம் இரண்டுபோலத் தோன்றினாலும் அவை ஒன்றே.

## 2.4.28.6. அருச்சுணன் கதை:

2.4.28.6.5.0. சதுர்யுக முடிவுகள் தோறும் இயமன் சீவர்களைக் கொன்றதற்காகத் தவம் செய்து வந்தான். அந்தச்சமயம் பூமியில் சீவர்கள் (உயிர்கள்) அளவுக்கு அதிகமாயினர். பூமா தேவியின் வேண்டுகோளுக்கு இணங்க, கண்ணன். பூமியின் பாரத்தை நீக்க வேண்டி, வாசுதேவருக்குப் புத்திரனாகவும் பாண்டுவுக்குப் புத்திரனாகவும் வடிவம் எடுத்தார். அந்தக் காலத்தில் திரிதராட்டிரனுடைய புத்திரர்களான துரியோதனாதியர்கள் சுற்றத்தாரோடு அருச்சுனன் மீதும்போர் செய்யத் தொடங்கினர். அருச்சுனன் உறவினர்களுடைய இறப்புக்கு இரக்கமுற்று வில்லை வளையாத வனாய் இருந்தான். அதைக் கண்ட கண்ணன் அருச்சுனனுக்கு அறிவுரை செய்தான்.

ஆதி அந்தமில்லாததாய் அறிதற்கரியதாய் இருக்கின்ற ஆத்ம வடிவத்தைச் சலனமில்லாமல் பார்த்தால் குற்றமற்ற ஞான வடிவமாய் இருக்கின்ற மானுட உடலில் பிறப்பு இறப்பு இல்லாத சத்தாமாத்திரம் தோன்றும். அதற்கு உருவம் இருக்காது. கிரியைகளை நீக்க வேண்டும். பிரம்ம அற்பணமான ஒழுங்கை அடைந்த கணத்தில் பிரம்மம் ஆகலாம். பிரம்ம வடிவம் அடைந்து சமத்துவனாகவும், சாந்த மனத்தை உடையவனாகவும், தவத்தையும், சந்நியாசத்தையும் கொண்டு யோகியாகி, ஞானத்தைப்பெற்று முத்தி அடைய வேண்டும் என்று கூறினார்.

அருச்சுனன், சங்கத்தைக் கெடுத்தல், பிரம்ம அற்பணம், இறைவன் அற்பணம், சந்நியாசம், ஞானம், யோகம் பகுப்பு யாது என்று கேட்டான். சங்கற்பம் கெடவும், வாதனைமாறவும், ஓர் எண்ணமும் இல்லாத இடமே பிரம்மப் பொருள் என்றும், பிரம்மத்தை அடைவதற்குரிய முயற்சியே ஞானம் என்றும், அந்த முயற்சியே யோகம் என்றும், சங்கற்பத்தைக் கொடுத்தலே சங்கத்தைக் கொடுத்தல் என்றும் கண்ணன் பதிலுரைத்தான். இறைவன் ஒருவனே என்றும் துவிதம் என்ற நினைவு நீங்குதலே

இறைவ அற்பணம் என்றும் கூறுவர். கண்ணனையே நாடி, பூசித்து. அவனையே அடைந்து அவனையே வணங்கினால், தான் என்கின்ற சொரூப வெளிச்சமானது உள்ளே நிறையும். பிரம்மமும், சாமானியமும் என்று சொல்லப்பட்ட இரண்டு வடிவம் கண்ணனுக்கு உண்டு. சங்குசக்கரங்கள் உள்ள உடல் சாமானிய வடிவம். ஆதியந்தமில்லாத ஏகமான வடிவம் பிரம்ம வடிவம். அந்தப் பிரம்மவடிவத்தையே வணங்கவேண்டும். பிரம்ம வடிவமாகிய உருவத்தை அடைந்தால் பிறவி நோய் வராது. அஞ்ஞானம் நீங்கிப் பற்றுவிட்டு இன்ப துன்பங்களில் தொடர்பு நீங்கி ஆசை விடுபட்டவர்களே ஞானம் அடைந்தவர்கள். ஆசை பொருந்தி, சங்கற்பமில்லாமல் முயற்சிகள் செய்து ஞானத் தீயால் கருமங்களை எரித்தவர்களே அறிஞர்கள். ஊழிக்காற்று அதிகரித்தாலும், விந்தமலை வெடித்த காலத்திலும் குரு அறிவுரைக்கு ஞானவான்கள் மாறுபடார்கள். இந்த அறிவுரை களுக்குப் பிறகு அருச்சுனன் தானும் பிரம்மப் பொருளில் கலந்த தாகக் கூறினான்.

### 2.4.28.6.5.1. கதையால் அறியப்படுபவை:

1) சர்வம் பிரம்மமயம்.
2) நினைவுகளில் எல்லாம் இறைவன் ஒருவனே என்று நினைத்தால் உள்ளத்திலுள்ள பற்று பாசம் எல்லாம் அற்றுவிடும்.
3) உலகம் அழிந்தாலும் குருவின் அறிவுரைப் பொருட்களில் ஞானவான்கள் மாறுபடமாட்டார்கள்.
4) அத்வைதாநந்த முடையவர்களுக்கு யுத்தம் முதலிய செய்கைகளிலும் வேறுபடாது.
5) சங்கற்பமும் வாதனையும் கெட்டு ஓர் நினைவற்று நின்ற இடமே பிரம்மப் பொருள்.
6) பிரதிபலன் எதிர்பாராமல் கருமங்களைச் செய்ய வேண்டும்.
7) இறைவனும் காணும் பொருட்களும் இரண்டு போலத் தோன்றினாலும் அது ஒன்றேயாகும்.

### 2.4.29.6.6. சதவுருத்திரர் கதை:

2.4.29.6.6.0 சந்நியாசி ஒருவன் சமாதியின் பலனால் தின்மத மனத்தின் ஒரு பொருளைப்பற்றி நினைத்தால் அப்போதே

அவ்வுருவமாகும் தன்மையைப் பெற்றிருந்தான். அவன் ஒருநாள் ஒரு புருடனாக மாறினான். பின் சீவடன் முதல் உருத்திரன் ஈறாக நூறுபிறவிகள் எடுத்தான். முன்நடந்த செயல்கள் அனைத்தையும் தன் அறிவினால் அறிந்தான். பின்கனவினது நூறு அதிசயங்களையும் பார்த்து அவ்வுலகத்தை மயக்கம் செய்கின்ற மாயையானது பொய் என நினைத்தான். ஆனால் அது கானல் நீரைப் போல உண்மையாகும் எனப்பின் அறிந்தான். அந்தப் பிரம்மையினால் அவன் மாயாவனத்தில் பல இடங்களில் சுழன்றான். உருத்திரன் தன் வடிவங்களுக்கு ஞானம் கொடுக்க நினைத்துத் தன்பழைய வடிவமான சந்நியாசியிடத்தில் சென்று அவனை எழுப்பி ஞானத்துடன் ஒன்று படச்செய்தான், சந்நியாசியும் தன் மயக்கங்களை நீக்கினான். இருவரும் சீவடன் வாழ்கின்ற நாட்டிற்குச் சென்று அவனுக்கு ஞானம் கொடுக்கக் கூடிய மனத்தைக் கொடுத்தனர். அதன்பின் மூவரும் சேர்ந்து வேதியின் முதலாக உள்ளவர்களிடம் சென்று உருத்திரரைப் போல ஞானம் அடையும்படி ஞானத்தைக் கொடுத்தனர். எல்லோரும் ஞானம் பெற்றபின் உருத்திரனானவன் அவரவர் இடங்களுக்குச் செல்லும்படிக் கூறினான். அவர்கள் தங்கள் தங்கள் இடம் சென்று குடும்பத்தோடு கூடி வாழ்ந்து சிவத்தை (நிர்க்குணப் பிரமத்தை) அடைந்தார்கள்.

## 2.4.29 6.6.1. கதையால் அறியப்படுபவை:

1) பிறப்பின் பரம்பரையை, ஞானத்தினால் பார்த்தால் அது ஆத்மாவில் உள்ளது போலத் தோன்றும் என்பர்.
2) கனவில் தோன்றின பிறப்புக்கள் எதார்த்தமாகவும் சத்தியமாகவும் தோன்றும்.
3) மாயையானது கானல் நீர்போல உண்மையாகும்.
4) நூறுபிறவிகள் குறிப்பிடப்படுகிறது (மறுபிறப்பு வலியுறுத்தப்படுகிறது).
5) யோகமும் ஞானமும் உடையவர்கள் சத்தியவானாவார்கள்.
6) அறிவினிடத்தில் எல்லாம் உண்டு.
7) சமாதி நிலையை அடைந்தவர்கள் நினைத்ததைப் பெறலாம்.

8) எது கனவில் பார்க்கப் படுகின்றதோ, எது எண்ணத்தில் சேர்ந்ததோ அந்தப்பொருள் எக்காலமும் அந்த இடத்தில் அந்த வண்ணமாகவே இருக்கும்.
9) ஞானமே பிரம்மத்தை அடையவழி.

## 2.4.30.6.7. வேதாள கதை:

2.4.30.6 7 0. விந்தவனத்தில் வேதாளம் ஒன்று வாழ்ந்து வந்தது. அது தனக்குப் பசிமிகுந்தாலும் எதிர்வந்தவர்கள் தம்மை வருத்த வில்லையானால் கொலை செய்யாது. அது மனிதரை உணவாகக் கொள்ள ஓர் அரசனிடம் வந்து அவன் உயிரை எடுப்பதாகக் கூறியது. அரசன், அதனிடம் நெறியின்றி செய்தால் தலை சிதறிவிடும் என்று கூறினான். அதற்கு வேதாளம் தான் நீதியை உடையவனாய் இருந்தால் தன் குறையைப் போக்க வேண்டும் என்றும், தான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூற வேண்டும் என்றும், அல்லாவிட்டால் அவன் அதற்கு உணவாக வேண்டும் என்றும் கூறியது.

## 2.4.30.6.7.0.1. கேள்விகள்!

1) எந்தச் சூரியனது கதிர்களுக்கு இந்தப்பிரம்ம அண்டங்கள் சிந்துகின்ற அற்பமான அணுக் கூட்டங்களாய் விளங்கும்?
2) எந்தக் காற்றினால் முடிவற்ற ஆகாசம் என்கின்ற அணுக்கள் விளங்கும்?
3) கனவுமேல் கனவுவந்தாலும் திரிவின்றித் தெளிவான ஒளிவடிவம் யாது?
4) உள்ளுள்ளே போனாலும் வேறொன்றாகாத அணு எது?
5) சூரியனும் மகாமேருவுமாகிய எல்லாமும் விரிந்த பரம அணுக்களைப் போலக் கூடிப்பிரியாத அணு எது?
6) அவயவங்கள் இல்லாத பரம அணுவாகிய எந்த மலைக்குத் தங்கா நின்ற கல்லைப்போல நெருங்கி ஒன்றாய் இருக்கின்ற உலகங்கள் மச்சையாகும்? (உயிர் நிலை).

## 2.4.30.6.7.0.2. விடைகள்:

1) பிரம்ம சூரியனது வெளிச்சமான கிரணத்துக்கு உலகங்கள் யாவும் அணுக்களாகும்.

2) சலசத்தையும், விசும்பு உண்மையும், சலனசத்தையும், அறிவுண்மையும், சேதனசத்தையும் நல்லறிவான பிரம்மம் என்னும் காற்றினால் பொடிப்பொடியாக நீக்கலாம்.
3) உலகமெனும் பெருங்கனவின் மேல் கனவு அனேகம் பிடித்தும் தனது வடிவத்தைப் பிரியாமல் பொருந்திய சாந்தியினால் பிரம்மம் வெளிப்படும்.
4) உலகத்தின் உள்ளுள்ளே பிரம்மமே விளங்கும்.
5) பிரம்மமே பரம அணுவாகும்.
6) அறிய முடியாத பிரம்ம ஞானம் மச்சையாக உயிர்நிலையாக விளங்கும். விஞ்ஞான மாத்திரத்தினது மத்தியில் உலகமானது இருக்கும்.

இவ்வாறு அரசன் கூறியப் பதிலைக் கேட்டு உபசாந்த மனத்தை வேதாளம் அடைந்து பசியை மறைந்து சமாதியிலிருந்தது.

**2.4.30.6.7.1. கதையால் அறியப்படுபவை:**

1) சுழுத்திமவுனத்தால் சர்வம் பிரம்மமயம் ஆகும்.
2) பிரம்மத்தை அறிந்தால் எந்த அச்சமும் கிடையாது.
3) எங்கும் எதிலும் அமைந்திருப்பது பிரம்மமே.

2.4 30 6.7.2. விக்கிரமாதித்தன் கதையில் வரும் வேதாளக் கதை போன்று இந்தக்கதையும் கேள்வி பதில் முறையில் அமைந்துள்ளது.

2.4 30.6.7.3. இந்தக் கதையை நூலாசிரியரே பேய்க்கதை என்றும் குறிப்பிட்டுள்ளார் (வைரா. 11.2).

**2.4.31.6.8. பகீரதன் கதை;**

2.4.31 6.8.0. பகீரதன் என்னும் அரசன் உலகத்தை ஆளுகின்ற சக்கரவர்த்தி. அவன் ஒரு சமயம், ஒன்றும் புதிது இல்லை, போனதே திரும்ப வருகிறது என்று எண்ணினான். அதனால் திரிதலன் என்னும் குருவிடம் சென்று மூப்பு, மரணம், மோகம் எல்லாம் உலகத்தில் அச்சம் செய்கின்றன. இந்த துன்பத்துக்கு முடிவுயாது என்று கேட்டான். அவர் ஞானாத்மாவைப் பூரணமாகப் பார்த்தால் துக்கங்கள் அனைத்தும் நீங்கும் என்றும், பந்தங்களும், சந்தேகங்களும், கருமங்களும் கெடும் என்றும், ஞானமே பரமாத்ம வடிவமாகும் என்றும் கூறினார். மேலும் பகீரதன்

தனக்குவேறாகி நின்ற உடல் முதலான ஒன்றையும் காணாதவனாய் இழிந்துள்ள தொழில்கள் எல்லாம் நிலையில்லாமல் இருப்பது எப்படி என்று கேட்டான். முனிவர், மனமானது இதயாம்பரத்தில் விரிந்து ஞானத்தினால் நேய நிட்டையை அடையும் என்றும், அனைத்து வடிவங்களுமான சிவனானது உலகத்தில் திரும்பவும் பிறப்பு அடையாது என்றும் கூறி முத்தி அடையும் வழியையும் வெளிப்படுத்தினார். இந்த உடலில் உள்ள தான் என்னும் எண்ணத்தைத் தள்ளுவது எப்படி என்று கேட்டான். தன்னிடம் இருப்பதைப் பகைவர்களுக்குக் கொடுத்து. அகம்பாவத்தை நீக்கி, அச்சம் நீங்கி, எதிலும் திணையளவும் பற்றில்லாமல், செய்கை அனைத்தையும் துறந்து, பகைவர்களிடம் பிச்சைவாங்கி தன்னையும் விட்டு, பாரம் இல்லாமல் இருந்தால் பிரம்மம் ஆகலாம் என்று விளக்கினார்.

முனிவரின் சொல்படி பகீரதன் நாட்டைப்பகை அரசனிடம் கொடுத்து காட்டில் சென்று தவம் செய்து மனத்தினால் ஆறுதல் அடைந்தான். பின் நாட்டில் வந்து பிச்சை எடுத்து வாழ்ந்து வந்தான். அதைக் கண்டவர்கள் வருந்தினார்கள். பகையரசன் ஒருவன் வந்து அவனுடைய நாட்டை ஆட்சி செய்யும்படி கூறியும் மறுத்து வேறுநாடு சென்று பிச்சை எடுத்து வாழ்ந்து வந்தான். அவ்வாறு இருக்கும்போது பகீரதன் சமாதி நிலையை அடைந்தான். சாந்தமே வடிவாய் மனத்தளர்ச்சி இல்லாமல் அலைந்து திரிந்தான். ஒரு நாள் அவன் குருவைச் சந்தித்தான். பின் இருவருமாகக் காடுகளிலும் நாடுகளிலும் அலைந்து திரிந்தார்கள். ஓர் இடத்தில் பிச்சை எடுத்துக் கொண்டிருக்கும் போது அந்தநாட்டு அமைச்சர்கள் அந்த நாட்டில் அரசர் இல்லாமையால் பகிரதனை அரசனாக்கினார்கள். அவன் நன்கு ஆட்சிசெய்வதை அறிந்த அவன் நாட்டு அமைச்சர்கள் வந்து வேண்ட, அந்நாட்டையும் சேர்த்து அரசாட்சி செய்தான்.

பகீரதன் சிவன் முத்தி நிலையை அடைந்தமையால் நாட்டைச் சமபார்வையில் ஆட்சி செய்தும், தவம் செய்தும் வந்தான். பின் சிவனிடம் வேண்டிக் கங்கை நதியைப் பூமிக்குக் கொண்டு வந்து தன்னுடைய மூதாதையர்களின் எலும்புக்குள் விட்டான். இந்த நல்வினையால் அவர்கள் நற்கதியை அடைந்தனர்.

### 2.4.31.6.8.1. கதையால் அறியப்படுபவை:

1) விடயசுகம் நீங்கிப் பிரம்மசுகம் சேர்ந்தால் அகம்பாவம் நீங்கி அத்வைதப் பிரம்மம் அடையலாம்.
2) சங்கத்தியாகத்தாலும் தன் முயற்சியாலும் அனுபவம் அடையலாம்.
3) புறப்பற்றை நீக்கி அகப்பற்றை நீக்கினால் சாட்சாத்காரம் வந்தடையும்.
4) தான் என்று எண்ணுகின்ற நினைப்பை கீழ்வரும் உத்திகளால் அழிக்கலாம்.
   அ. தனது மன வருத்தத்தினால் நீங்காத போகத்தில் எண்ணம் தொடராமல் நீக்கிப் பரந்திருக்கின்ற உண்மையில் பொருந்தினால் வினையான அகங்காரம் கெடும்.
   ஆ. ஆசைகெட அனைத்தையும் அறிவினால் கெடுத்து சலனமில்லாமல் இருக்கவேண்டும்.
5) பற்று நீங்குதலும், சுகதுக்கங்களால் ஞானபாவனை அடைதலும், ஏகாந்தமடைதலும், மனிதக் கூட்டங்களை நீக்குதலும், ஆத்மதத்துவத்தில் நீங்காத ஞான உறுதியும், தத்துவஞானத்தில் உண்டான அனுபவமும் முத்தி அடைய வழியாகும்.

2.4.31.6.8.2. இராமயாணம்[5] ஸ்ரீவேத வியாசர் அருளிச்செய்த ஸ்ரீமஹாபாகவதம்[6] ஸ்ரீவிஷ்ணு புராணம்[7] போன்ற பல நூற்களில் பகீரதன் கங்கை கொண்டுவந்த செய்தி உள்ளது. ஆனால் இந்தக் கதையைப் பற்றிய குறிப்பு இல்லை.

### 2.4.32.6.9. சிகித்துவசன் கதை:

2.4.32.6.9 0. மாளவதேசத்தை ஆண்டு வந்த அரசன் சிகித்துவசன். அவன் மனைவி சூடாலை. இளமையிலே அரசனும் சூடாலையும் யோகம் முதலியன பயின்று வந்தனர். பின் அறிவு நூற்பயிற்சியும் செய்தனர். சூடாலைக்கு மட்டும் ஞானம் உண்டாயிற்று. ஞானம் பெறாத அரசன், மனைவி தடுத்தும் கேளாமல் காட்டில் சென்று தவம் செய்தான். பதினெட்டு ஆண்டுகள் காட்டில் தவம் புரிந்து இளைத்திருந்த கணவனைச்

சூடாலை. கும்பமுனி வேடத்தில் சென்று சந்தித்தாள். ஆகாயத் திலிருந்து தன்னெதிர் இறங்கிய அம்முனிவரை அரசன் வியப் போடு வணங்கித் தனக்கு அறிவுரை செய்யுமாறு வேண்டினான். கும்பமுனி வடிவிலுள்ள சூடாலை அறிவுரைசெய்தாள்.

ஆத்மஞானம் இல்லாத ஒருவன் சிந்தாமணியைத் தேடத் தொடங்கினான். உண்மையான சிந்தாமணி கிடைத்தும் எடுக் காமல் சிந்தித்தான். தான் காண்பது சிந்தாமணி அல்ல என்றும் துன்பப்பட்டாலும் பாவிகளுக்கு உடனே கிடைக்காது என்றும் நல்லவர்களில் சிலபேர்களுக்கே கிடைக்கும் என்றும் எண்ணிச் சிந்தாமணியை எடுக்காமல் திரும்பவும் தேடினான். சிலநாட்கள் கழித்து சில சித்தர் கணங்கள் அவனைச் சோதனை செய்யும் பொருட்டு உடைந்த வளையலின் துண்டை எதிரே இட்டனர். அவன் உண்மையான சிந்தாமணி இதுவென்று மகிழ்ந்து எடுத் தான். செல்வங்கள் அனைத்தையும் நீக்கி, காச்சுக்கல் எல்லாச் செல்வத்தையும் கொடுக்கும் என்றும் காட்டில் சுகம் அடைய லாம் என்றும் சென்றான். அதனால் துன்புற்றுத் தாழ்வடைந் தான். அவன் நிலை போன்றே அரசன் நிலையும் காணப்படு கிறது என்று கும்பமுனி கூறினான்.

அறியாமைக்கு இரங்கக் கூடாது என்பதை உறுதிபடுத்தும் நிமித்தம் யானையின் கதையை அடுத்துக் கூறினான். அந்தக் காட்டில் ஓர் மாவுத்தன் யானையுடன் பழகி விலங்குகளினால் அதனைப் பூட்டினான். அது கட்டுகள் அனைத்தையும் அறுத் தது. அதைக்கண்ட மாவுத்தன் திரும்பக் கட்ட நினைத்துப் பனை மரத்தில் இருந்து யானையின் மத்தகத்தில் குதித்தான். தவறி தரையில் விழுந்தான். யானை அன்பினால் அவனைக் கொல்லாமல் நீங்கிற்று. சில நாட்கள் சென்றபின் மாவுத்தன் ஒரு குழி தோண்டி அதை விழச்செய்து கட்டிப் போட்டான். இந்தக் கதையும்அரசனைப் போன்றதே என்று கும்பமுனி விளக்கினான்.

கும்பமுனி கூற்றைக்கேட்ட அரசன் தான் என்ன செய்ய வேண்டும் என்று கேட்க, எல்லாவற்றையும் விடுக என்றான். அரசன் நாட்டையும், மனைவியையும விட்டதாகக் கூறி இன்னும் விடவேண்டியதைக் கூறுமாறு கேட்டான். முனி மீண்டும எல்லாம் விடுக எனக் கூற, அரசன் கமண்டலததை உடைத்தும்

ஜோவணத்தைக் கிளித்தும் எறிந்தான். முனி மீண்டும் எல்லாம் விடவில்லை என்று கூற அரசன், தான் உடலை மட்டும் விட வில்லை எனக் கருதி மலை மேலிருந்து உயிரைவிட முயல்கை யில் முனி தடுத்து உயிர் போனபின்பு ஒரு பயனுமில்லை என் றான். விடுவது என்பது பொருள்களை உடைத்தும் கிழித்தும் அழிப்பதன்று. எந்தப் பொருளையும் மனத்தால் நினையாது இருப்பதாகும் எல்லாவற்றையும் விடுதலையாகியதே சர்வ தியாகமாகும் என்றும் விளக்கினான். மேலும் பல அறிவுரை களைக் கூற அரசன் சமாதிநிலையை அடைந்தான்.

அரசனைச் சோதிக்கும் பொருட்டு இரவில் கும்பமுனி, மதனி கை என்ற பெண் வேடம் தரித்தான். அவ்வடிவம் கண்டு அரசன் எந்த மாற்றமும் அடையவில்லை திரும்பவும் மதனிகையின் வற் புறுத்தலின் காரணமாகத் திருமணம் செய்தான். அதிலும் எந்த மாறுதலும் அடையவில்லை. அரசனுடைய ஆசையைச் சோதனை செய்யும் பொருட்டு சூடாலை அணிமா முதலிய வித்தைகளினால் தேவேந்திரனைப் போல அமைத்து அரசனைத் தேவ உலகுக்கு அழைக்கும் படிச்செய்தாள். அரசன் தேவ உலகத்துச் சுகத்தைவிடக் காட்டில் வாழ்வதே சுகம் எனக்கூறி மறுத்துவிட்டான். கோபம், காமம் இரண்டையும் சோதிக்கும் பொருட்டு மாயா வித்தையினால் ஒரு புருடனை உருவாக்கி அரசன் காணும்படிக் கூடினாள். அதனாலும் அரசன் எந்த மாறுதலும் அடையவில்லை. அதனால் அரசன் முழுமையை அடைந்து விட்டான் என நினைத்து மீண்டும் சோதனை செய்ய மனம் இல்லாமையால் தன் நிலையை உணர்த்தினாள். அரசன் தான் யாரால் ஞானம் அடைந்தோம் என்ற விவரத்தை அறிந்து மகிழ்ந்தான். பிறகு இருவரும் நாட்டை அடைந்து நன்முறையில் ஆட்சி செய்து முத்தி அடைந்தனர்.

### 2.4.32 6.9.1. கதையால் அறியப்படுபவை:

1) அகம்பாவம் நீக்கலே சகல தியாகமாகும், அதனால் பிரம்ம அனுபவம் கைகூடும்.
2) பக்குவப்பட்டவர்களுக்கே அறிவுரைக்க வேண்டும்.
3) காட்டிலிருந்தாலும் வீட்டிலிருந்தாலும் மனப்பக்குவத் தால் தான் முத்தி நிலையை அடையமுடியும்.

4) சீவன் முத்தி நிலையை அடைந்தவர்களுக்கு அணிமா முதலிய சித்து வேலைகளைச் செய்யலாம்.

5) ஞானமே எல்லாவற்றிற்கும் கருவியாகும்.

2.4 32.6.9.2. இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் இந்தக் கதையில் அதிகமாக உள்ளன. மற்ற கதைகளில் இல்லாத கிளைக் கதைகள் (மூன்று)இதில் உள்ளன. ஒவ்வொரு கதையும் ஒரு தத்துவத்தைக் கூறுகிறது. இந்நூலில் முழுமையான கதை வடிவில் அமைந்த பகுதி இது ஒன்றே ஆகும். மற்ற கதைகளைவிட பாடல்களும் அதிகமாகக் காணப்படுகின்றன.

## 2.4.33.6.10. கசன் கதை:

2 4.3 3.6.10.0. பிரகசபதி என்ற தேவகுருவிடம் அவன் மகனாக கசன் பிறப்பெனும் கூட்டினின்று உயிர் வெளியில் செல்வதற்குத் தகுந்த வழியைக் கேட்டான். குரு சகலத் தியாகத்தினால் கடக்கலாம் என்று கூற கசன் எல்லாம் துறந்து காட்டில் எட்டு வருடங்கள் இருந்தான். எட்டு வருடங்கள் மனமற்றிருந்தும் துன்பம் நீங்காமையால் குருவிடம் கேட்க அவன், யாவற்றையும் நீக்குவாயாக என்றான். கசன் எல்லாவற்றையும் அற நீக்கியும் மன அமைதி அடையவில்லை. மேலும் மனத்தை நீக்குதலே எல்லாம் நீக்குதல் என்று குரு கூற, மனம் யாது என்று கேட்டான். குரு, அகம்பாவம் என்றும் தான் என்று நினைக்கின்ற பாவனையும் குற்றம் செய்கின்ற மனம் என்று கூறினான். அதை நீக்கும் வழியைக் கேட்டான். துன்பம் சிறிதளவும் கொள்ளாமல் இருந்தால் அகங்காரம் நீங்குதற்கு எளிதாகும். ஆத்மாவைச் சலனமில்லாமல் தியானித்துச் சாந்த முடையவனாய் இருந்தால் துன்பம் நீங்கும். உண்மையாக ஆத்மாவை நினைத்தால் ஞானத்தில் அகங்காரம் இருக்காது என்றான். அதன் பிறகு கசன் ஞானமடைந்து சிவன் முத்தன் ஆனான்.

## 2.4.33.6.10.1. கதையால் அறியப்படுபவை:

1) தியாகத்தால் ஞானம் வந்தடையும்.

2) குடும்ப மயக்கத்தைத் தியாகத்தால் கெடுக்கவேண்டும்.

3) அறிவின் முயற்சியே எல்லா முயற்சிக்கும் காரணமாகும்.

4) அறிவால் அகம்பாவம் தீரும்.

5) மனத்தை நீக்குதலே முத்தி.

## 2.4.34.6.11. மித்தையா புருடன் கதை

2.4.34.6.11.0. மித்தையா புருடன் உலகத்தில் நிறைந்திருக்கின்ற சூனியம் போல உள்ளவன். அவன் தனது எண்ணத்தினால் ஆகாயத்தை இடையூறு இல்லாமல் காவல் செய்ய வேண்டி, ஒரு வீடு, ஒரு கிணறு, ஒரு குடம், ஒரு குழி, ஒருகுதிர் என ஒவ்வொன்றாய் ஆகாயத்தில் கட்டிக்காவல் செய்துவந்தான். அவை ஒவ்வொன்றும் அழிந்து போக ஆகாயம் அழிந்ததாக எண்ணிவருந்தினான்.

## 2.4.34.6.11.0.1. விளக்கம்:

மித்தையா புருடன் என்பவன் சூனிய ஆகாயத்தில் உண்டான அகங்காரமாகும். அறிவு வெளியான ஆத்மாவைக் காப்பதற்காக அவன் முயற்சித்தான். கிணறும், குழியும், கடமும், நாற்சாரியும், குதிரும் என்று சொல்லப்பட்டனவாகிய உடல்களைப் பலவிதமாகப்படைத்துதுன்பம் அடைந்தான். ஆகாயத்தில் பெரியதாகியும் களங்கமில்லாததாகியும், நுண்ணியதாய் நினைவில் அடங்காது இருக்கின்ற அழிவற்ற சிவமே ஆத்ம தத்துவமாகும். உள்ளதான அறிவுலகில் இல்லாததாய் உதித்த அகம்பாவமே மித்தையா புருடன். உடல் இறந்தால் இதய ஆகாயத்தில் தான் இறந்ததாகப் பகுத்தறிவு இல்லாதவர்கள் தளருபவர்கள். உடல் அழிந்தாலும் உயிர் அழியாது. தான் என்று கூறிய அகங்காரம் குடம் போன்ற பொருட்கள் அழியும். இந்த உலகமானது நிலையானது என்று எண்ணித்துன்பம் நீங்கும்படி ஆகம்பாவத்தை ஆத்ம ஞானத்தால் கெடுத்தால் சீவன்முத்தியை அடையலாம்.

## 2.4.34.6.11.1. கதையால் அறிப்படுபவை:

1) அகங்காரம் நீங்காத இடத்தில் துன்பங்கள் நேரிடும்.
2) அகங்காரம் நீங்கினால் ஞானம் ஏற்படும்.
3) அகங்காரம நீங்கிவர்கள் சீவன்முத்தி நிலையை அடைவர்.

2.4.34.6 11.2. ஆணவம், கன்பம், மாயை, குரோதம், ஆசை, மனம் ஆகிய ஆறும் நீங்கினால வீடுபேறு கிடைக்கும். ஆசிரியா இந்த ஆறையுப வெளபபடுத்தும் முகமாக வீடு, கிணறு குடம, குழி, நாற்சாரகம, குதிர் எனக குறப்பிட்டிருக்கலாம்.

## 2.4.35.6.12. விரத சூயை கதை:

2.4.35.6.12.0. பிருங்கீசன் என்பவர் மகாமேருவுக்குச் சென்று பரமசிவனை வழிபட்டார். அவரிடம், பிறவிமயக்கத்தை ஞானத்தினால் மாற்ற முடியாமையினால் மயக்கமுற்று அலைந்த தாகவும், இந்தவுலகில் இளைப்பாறித்திரிய எப்போதும் அச்சம் இல்லாமலிருக்கின்ற வழியைக் கூறும்படிக் கேட்டார். பரமசிவன் சந்தேகங்களை எல்லாம் கெடுத்து முடிவான நிச்சயத்தைக் கடைபிடித்தால் மகாகர்த்தன், மகாபோகி, மகாதியாகி ஆகிய மூன்ற நிலைகளையுடையவர்களாகலாம் என்று கூறினார். அந்த மூவரின் குணங்களை விளக்கும்படிப் பிருங்கீசர் வேண்டினார். கொடியதாகிய விருப்பு வெறுப்பும், இன்ப துன்பமும் அறமும் பாவமுமாகிய இவற்றில் தவறாத் பலமும், அபலமுமாகிய இச்சை இல்லாதவனே மகாகர்த்தன். விருப்பு வெறுப்பின்றிச் சகல போகங் களுந்தனது ஆனந்த அனுபவமாகப் போக்கிப்பவனே மகாபோகி. தனக்கு எதிராயுள்ள யாவையும் பிரம்மமாக அறிந்து அது தன் மாத்திரமாய் விளங்கி அனைத்தையும் நீக்கினவனே மகாதியாகி என்று கூறினார். இந்த மேலான நோக்கைப் பழக்கம் செய்து கொள்ளும்படி இராமனுக்கு வசிட்டார் கூறினார்.

### 2.4 35.6 12.1. கதையால் அறியப்படுபவை:

1) எண்ணங்களை விட்டால் பிரம்மபதம் அடையலாம்.
2) ஞானம் விளங்கும் அனுபவம் உடையவர்களை மகா கர்த்தன், மகாயோகி, மகாதியாகி என மூன்று வகை யாகப் பிரித்துக் கூறியுள்ளார் ஆசிரியர்.
3) பழக்கத்தினால் (முயற்சியினால்) செயல்களை நன் முறையில் அமைக்கலாம்.
4) விரதத்தாலும், பக்தியாலும் இறைவனை அடையலாம்.

2.4.35.6.12.2. விரதசூயை எனக் கதைக்குப் பெயர் கொடுத் திருப்பதற்கும் கதைச் செய்திக்கும் எந்தத் தொடர்பும் காணப் படவில்லை. விரதம் = நோன்பு; சூயை = சிவபக்தியால் புருஷனைக் கடந்தவன். சிவபக்தியால் புருஷனைக் கடந்தவன் என்றும் தவத்தினால் ஞானநிலையை அடைந்தவன் என்று கொண்டாலும் பிருங்கீசனைப் பற்றிய செய்தி கதைத் தலைப்பில் அமையவில்லை.

## 2.4.36.6.13. இட்சுவாகு கதை:

2.4 36.6.13.0. இலட்சுவாகு என்னும் அரசன் ஒரு சமயம் தனித்திருந்து மூப்பும், இறப்பும், இன்பதுன்பங்களும், மோகங் களும், மயக்கங்களும் நிலையாகக் காணப்பட்டனவும், காணப் படாதனவும் ஆகிய இந்தவுலகத்துக்குரியக் காரணத்தைப்பற்றிச் சிந்தித்தான். சிந்தித்தும் அறியாமல் பிரமனை வேண்டி தவம் இருந்தான். பிரமன் காட்சி கொடுக்க அவரிடம் படைப்பானது எங்கிருந்து வந்தது என்றும், உலகத்தின் உருவம் எப்படிப்பட்டது என்றும், அதன் அளவு என்ன என்றும், அது முதலில் எவரை உடையது என்றும், எந்தக் காலத்தில் என்ன காரணத்தினால் உண்டானது என்றும், அதை அறிவித்துத்தனது மயக்கத்தை நீக்கும்படியும் கேட்டான்.

பிரமன், உலகம் கந்தர்வ நகரம் போலவும் கானல் நீர் போலவும் ஒன்றுமில்லை. சிறிதும் பொறிகளுக்கு எட்டாததாகியும். ஆகாயத்தில் சூட்சுமமாகியும், வேதாந்தத்தில் குறை இல்லாததா கியும், அழிவில்லாமல் எப்போதும் இருந்ததே ஆத்ம வடிவமாகும். பஞ்சபூத பௌதீகமாகத் தோன்றிய உண்மை அறிவின் அளவே உலகத்தின் அளவு என்று விளக்கினார். இந்த அறிவுரைக்குப் பிறகு இட்சுவாகு ஞானம் என்னும் மேலான வழியால் முத்தியை அடைந்தான்.

## 2.4.36.6.13.1. கதையால் அறியப்படுபவை:

1) சர்வம் பிரம்ம மயம் என்ற கருத்து அநுபவந்திரமாகும்.
2) தன் ஆத்மவிசாரத்தால் அடையமுடியாத ஞானத்தை குரு அறிவுரையால் அடையலாம்.
3) இறைவனே காட்சி கொடுத்துப் பக்தனுடைய சந்தேகங் களை நீக்கி அறிவுரை செய்கின்றதைக் காணமுடிகிறது.
4) பிரம்மமே நிலையானது.
5) தான் என்பதை நீக்கவேண்டும்.
6) ஆத்மாவை உணராதவர்களுக்கு மாயை அற்புதமாகத் தோன்றும்.

7) எல்லாம் தான் என்றும் அகங்காரம் அற்றும் நினைப்பு வரே பிரம்ம ஆநந்தத்தை அடைந்தவராவர்.

8) ஞானத்தினால் பிறப்பை நீக்கலாம்.

9) இறைவனை அடைவதற்குக் குலம் தடையாகாது.

## 2 4.37.6.14 மானுவேடன் கதை:

2.4.37.6.14 0. மௌனத்தோடு காட்டில் வாழ்ந்து வந்த ஒரு துறவியிடம் ஒரு வேடன் வந்து, அவரது பக்கமாக வந்த மான் பின் சென்ற திசையைக் கேட்டான். அதற்கு அந்த முனிவன் சமாதி நிலையை உடையவர்களாய் இருக்கின்றதால்தான் உலகத்தின் தொழிலைச் செய்கின்றோம். அன்றிக்குற்றமுள்ள அகங்காரமாகி விடமாட்டோம். பொறிகளானது தொழில்களைக் கொள்ளும் மனத்தைச் செய்வது மல்லாது வெறொன்றையும் செய்யாது. அதனால் அகங்காரவடிவமாகிய அந்தமனமானது மெய்யாகத் திரமாய் விடுபட்டு வெகுகாலமாயிற்று. அதற்கு நனவும் கனவும் சுழுத்திய அவத்தையுமாகிய அவற்றைப்பற்றி ஒன்றும் தெரியாது. தான்துரிய நிலையில் உள்ளதாகக் கூறினார். வேடன் அறிவு நிலையில் அல்லாதவன் என்பதால் அங்கிருந்து நீங்கினான். துரியபதத்துக்கு வேறாக ஒரு நிலையும் கிடையாது. ஞானமே துரிய பதமாகும்.

## 2.4.37.6.14.1. கதையால் அறியப்படுபவை:

1) ஒருவன் முத்தி நிலையை அடைந்த பிறகு எந்த நிலையிலும் எந்தச்செயலையும் சமமாகச் செய்வான்.

2) துரியநிலையை அடைந்தவனுக்கு எல்லாம் ஒன்றே.

3) கல்வி அறிவு இல்லாதவனுக்கு எதுவும் புரியாது.

2.4.37.6 14.2 இந்தக் கதையில் மானைத் தேடிவந்த வேடனுக்கு அறிவுரை செய்வதாக உள்ளது. ஆனால் அவனுக்கு அது எள்ளளவும் புரிந்ததாகக் காட்டப்படவில்லை. முத்திநிலை அடைந்தவனின் நிலையை இறுதிகதையாக இந்தக் கதையில் தான் ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். இது

இராமனுக்கு அறிவுறுத்தும் உச்சநிலை எனவும் கூறலாம். இராமன் எல்லா இடங்களுக்கும் சென்று அறிந்து வந்த பிறகு இந்த வைராக்கிய நிலை ஏற்பட்டதால் உன் அறிவால் எல்லாவற்றையும் சமமாகப் பார்க்க வேண்டும் என்ற கருத்தை உறுதிபடுத்த இந்தக் கதையை யஆசிரியர் அமைத்திருப்பார் எனலாம்.

## 2.5. உத்திகள்:

ஞானவாசிட்டம் ஓர் உபபுராண நூல் ஆகையால் கதைகள் எல்லாம் மரபுக்கதை அமைப்பில் உள்ளன. நூலின்கண் உள்ள ஒவ்வொரு கதையிலும் தனித்தனி உத்தி அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

1) பாத்திரங்களைக் கதை கூற விடுதல்.

சான்று: 1) பாலன்கதை (3.7) 2) சித்தன்கதை (3.8) 3) தாசூரன்கதை (4.4)

2) உரையாடல்போன்ற அமைப்பே நூல் முழுமையும் அமைந்துள்ளது. இராமன் வசிட்டர் இடையே உள்ள கேள்வி பதில் முறையே அதிகமான கதைகளில் காணமுடிகிறது.

சான்று: 1) மனத்தின்கதை (3.6) 2) புண்ணிய பாவனன் கதை (5.2) 3) சுரகுகதை (5.7) 4) புசுண்டன் கதை (6.1) 5) தேவபூசைகதை (6.2).

3) நூல் முழுமையும் வசிட்டர் இராமனுக்கு அறிவுரை கூறுவதாக அமைந்துள்ள பாங்கைக்காண முடிகிறது. வசிட்டரே தன் கதையைக் கூறுவது போலவும் கதைகள் அமைந்துள்ளன.

சான்று: 1) தாசூரன்கதை (4.4) 2) புசுண்டன்கதை (6.1).

4) தெய்வங்களே நேரடியாக வந்து அறிவுரை கொடுப்பதாகவும் உள்ளது.

சான்று: 1) லீலைகதையில் சரஸ்வதிதேவி (3.2)
2) காதிகதையில் திருமால் (5.5)
3) தேவ பூசை கதையில் சிவன் (6.2).

5) இயற்கைப் பொருளைக்கதையின் தலைமைப்பாத்திர மாகக் கொள்ளுதலும் காணப்படுகின்றன.

சான்று: 1) மனத்தின்கதை (3.6)
2) வில்வபலக்கதை (6.3)
3) சிலைக்கதை (6.4)

6) இராமனுக்கு அறிவுரை கூறுவதாக நூல் அமைந்திருப் பதால், பெரும் பான்மையான கதைகளில் அரசன், அந்தணன், முனிவன் போன்ற பாத்திரங்களைக் கையாண்டுள்ளார். இந்த உத்தி பழமையைப்பின்பற்றி எழுந்த நூல் என்பதற்குத்தக்க சான்றாகும். ஆனாலும் சில புறப்பாத்திரங்களையும் புகுத்தியுள் ளார். அவை மேற்குறிப்பிட்ட பாத்திரங்களோடு தொடர்புடையன வாகும். தேவதைகள், அசுரர்கள், இயமன், தெய்வம் போன்ற பாத்திரங்களையும் கதைக்குத் தலைமை பாத்திரங்களாகப்பயன் படுத்தியுள்ளார் (பார்க்க. பின்னிணைப்பு. 3.1).

7) சில கதைகளில் கதைகளைக் கூறிவிட்டு, அதற்குரிய விளக்கங்களையும் ஆசிரியரே உரையாடல் மூலம் கூறுவதைக் காணமுடிகிறது.

சான்றாக: 1) மனத்தின்கதை (3.6) 2) பாலன்கதை (3.7)
3) சிலைக்கதை (6.4) 4) வில்வபலக்கதை (6 3)
5) தாசூரன்கதை (4.4) 6) சிகித்துவசன்கதை (6 9).

8) கதையுள் கதையாக அமைந்துள்ள கிளைக்கதைகளும் காணப்படுகின்றன.

சான்றாக: 1) தாசூரன் கதையில் ஒன்று (4 4)
2) மாவலிகதையில் ஒன்று (5 3)
3) சிகித்துவசன் கதையில் மூன்று (6.9).

9) சில கதைகளில் கூற்று மட்டுமே உள்ளது. கதையின் பெயரைக் கொண்டுள்ள பாத்திரங்களின் வரலாறு எதுவும் கூறப் படவில்லை.

சான்று: திதிப்பிரகரணத்தில் காணப்படும் கசன்கதையில் (4.5) கசமுனி ஒரு சமயம் சமாதி நிலையிலிருந்து வெளிப்பட்டு, தானே எல்லா இடமும் நிறைந்திருக்கின்ற போது எதைச்செய்வேன், எங்குப்போவேன்; விடப்படுவது எது, உட்கொள்வது எது; உடலின் உள்ளும் புறமும், எல்லாத்திசைகளிலும், ஆகாயத்திலும், பூமியிலும் எல்லா இடத்திலும் அறிவின் வடிவமில்லாமல் வேறு ஒன்றும் இல்லை என்று கூறினான்.

இதே அமைப்பு, வில்வபலக்கதை (6.3), சிலைக்கதை (6.4), விரதசூலைகதை (6.12), இட்சுவாகுகதை (6.13) போன்ற கதைகளிலும் காணப்படுகிறது.

10) அறிவுரைகள் மட்டுமே சில கதைகளில் அமைந்துள்ளன.
சான்றாக: 1) தேவபூசை கதையில் சிவன் அறிவுரை (6 2)
2) இட்சுவாகு கதையில் பிரமன் அறிவுரை (6.13)
3) மானுவேடன் கதையில் முனிவர்அறிவுரை(6.14).

11) தத்துவங்களை விளக்கப்புராணச் செய்திகளை எடுத்தாண்டுள்ளார். இது ஆசிரியரின் பல்நூல் புலமையையும், புராணக் கதைகளைப் புகுத்த வேண்டும் என்ற நோக்கையும் வெளிப்படுத்துகின்றன.

சான்றாக: 1) மகாபாரத பகவத்கீதையில் காணப்படும் அருச்சுணன் கதை (6.5)
2) மகாபாரதம், இராமாயணம், புராணங்கள் போன்றவற்றில் இடம் பெற்றுள்ள பகீரதன்கதை (6.8)
3) வேதாளக்கதை (6.7)
4) மாவலிகதை (5 3)
5) பிரகலாதன்கதை (5.4).

12) ஒரே பெயரைக் கொண்ட கதை இரண்டு பிரகரணத்தில் அமைந்துள்ளது. ஆனால் அதில் உள்ள செய்திகள் வேறானவை.
சான்றாக: கசன் கதை. இது திதிப்பிரகரணத்திலும் (4 5) திருவாணப் பிரகரணத்திலும் (6.10) காணப்படுகிறது.

13) ஒரே பாத்திரம் இரண்டு கதைகளில் முதன்மை பாத்திரங்களாக அமைந்துள்ளன.

சான்றாக: 1) கசன் கதை (4.5); (6.10)
2) சம்பராசுரன் (4 2); (4.3)

சம்பராசுரன் என்பவன் தேவர்களைக் கொல்வதற்காகத் தாமன், வியாளன், கடன் (4.2); வீமன், பாசன், திடன் (4 3) என்னும் ஆறுபேர்களை மாயையினால் உருவாக்கிப் போர் செய்ய அனுப்பிய செய்தி இரண்டு கதைகளில் காணமுடிகிறது.

14) கதையை ஆரம்பிக்கும் போதே பல கேள்விகளைக் கேட்டுக் அதற்கு விடை கூறும் முகமாக அமைத்திருப்பது ஆசிரியரது உத்திகளில் சிறந்தது எனக் கொள்ளலாம்.

சான்றாக: 1) சுகர் கதை: (1.1)

[இடர் உறும் மாயை எங்ஙனம் வந்தது? எங்ஙனம் இறப்பது? தொடர்பில் யாருடையது? எவ்வாறு தோன்றிற்று? (சுகர்: 10)]

2) இட்சுவாகு கதை (6.13)

[படைப்பு எந்த இடத்திலிருந்து வந்தது? உலகத்தின் உருவம் எப்படிப்பட்டது? கெடாத உலகம் எவ்வளவு? அது யாரை உடையது? எந்தக் காரணத்தினால் என்ன காரணத்தினால் உண்டானது? (இட்சு.11)]

15) ஆசிரியர் செய்திகளை முன் கூட்டிக்கூறும் உத்தியையும் கையாண்டுள்ளார்.

சன்றாக: உபசாந்திப் பிரகரணத்தில் வரக்கூடிய காதி கதைச் (5.5) செய்தியை உற்பத்திப் பிரகரணத்தில் (உற்.64.4) குறிப்பிட்டுள்ளதைக் காண முடிகிறது.

16) கொண்டு கூட்டிப்பொருள் கொள்ளும் உத்தியும் காணப்படுகிறது.

சான்றாக: உற்பத்திப் பிரகரணத்தில் பலகதைகளின் சாரத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

## 2.6. கதைப் பகுப்புக்கள்:

ஒவ்வொரு கதையிலும் பல செய்திகள் காணப்படுகின்றமையால் அதன் தன்மைக்கு ஏற்றவாறு பாகுபாடு செய்யப்பட்டு அட்டவணைப் படுத்தப்பட்டுள்ளன (பார்க்க: பின்னிணைப்பு: 3.1–3.5)

சான்றாக: 1) மறுபிறப்பு, ஆணவம், கன்மம், மாயை பற்றிக் கூறும் கதைகள்.

2) இறைவன் காட்சி கொடுத்த கதைகள்.

3) யோகம் பற்றி குறிப்பிடும் கதைகள்.

## 2.7. சிறப்புக்கள்:

ஒரு கருத்தை விளக்க ஒரு கதை என அமைத்திருப்பது நூலின் சிறப்புத்தன்மையாகும். புராணக் கதைகளைக் கையாண்டுள்ளமையால் கருத்துக்களைப் பலரும் புரிந்து கொள்ளும்படி உள்ளன. மரபுக் கதை கூறுவது போல சில கதைகள் உள்ளமையால், படிப்பவர்களுக்குச் சலிப்புத்தன்மை குறைவது போல உள்ளது. அதனால் தத்துவக் கருத்துக்களை எளிதில் புரிந்து கொள்ள முடிகிறது.

2.8. கதைகளில் வரும் பெயருக்கும், அதில் காணப்படும் செய்திகளுக்கும் தொடர்பு இல்லாமல் அமைந்துள்ளன. இது ஆய்வுக்குரிய ஒன்றாகும்.

சான்றாக: 1) அயித்தவர் கதை (3.4)

2) விரதசூயை கதை (6.12)

2.9. பதிப்புக்குப் பதிப்பு கதைப் பெயர்கள் மாறுபட்டு காணப்படுகின்றன என்பதும் ஆய்வுக்குரியதாகும்.

பார்க்க: 2.4.3.3.2 2.4.5.3.4 2.4.9.3.8
2.4.16.5.2 2.4.22.5.8.

## 2.10. முடிவுகள்:

1) இராமனுடைய வைராக்கிய நிலையை மாற்றுவதற்கு வைராக்கிய நிலைகளில் இருந்த முனிவர்களையும், அரசர்களையும் கதைகள் மூலம் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

2) முனிவர்களும், அரசர்களும் பெற்ற பேறுகளையும் விளக்கியுள்ளார்.

3) எல்லா வகை யோகங்களும் வலியுறுத்தப்பட்டுள்ளன.

4) உருவ வழிபாடு மறுக்கப்படுகிறது.

5) ஞானமே தெய்வம் என்ற கருத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது.

6) இல்வாழ்க்கையின் தேவைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

7) காட்டிலிருந்தாலும் வீட்டிலிருந்தாலும் முத்தியடையலாம்.

8) மனத்தை விடுதலே முத்தியாகும்.

9) பல நூற்களில் காணப்படும் செய்திகளை ஞானவாசிட்டத்தில் கதைக் கூறுகளாக அமைத்துள்ளார் ஆசிரியர்.

10) தெய்வங்களைக் காட்சி கொடுக்கச் செய்து, அறிவுரை வழங்குவதாக அமைத்துள்ள பாங்கு புராணக் கூறுகளை நினைவுறுத்துகிறது. அதனால் தான் சில திறனாய்வாளர்கள் உபபுராணங்களில் இதுவும் ஒன்று எனக் குறிப்பிட்டிருக்கிறார்கள் எனலாம். மேலும் இதில் காணப்படும் கதை அமைப்புகள் உபபுராணம் என்பதை வலிவுறுத்துகின்றன என அமையலாம்.

அடிக்குறிப்புகள்:

1) அ. கழகத் தமிழ் அகராதி, ப. 274.
ஆ. Tamil Lexicon, Madras Universitiy, 1982, ப. 714.

2) வேத வியாசர், ஸ்ரீதேவி பாகவதம், 1970, பக்: 104-123.

3) ஞானயோக விளக்கம், 1976, ப. 118.

4) கம்பராமாயணம், 1964, பாலகாண்டம், அகலிகைப்படலம் பாடல்: 43-59.

5) ஸ்ரீ தேவ வியாசர், ஸ்ரீமஹாபாகவதம், முதல்பாகம், 1966, ப. 604.

6) ஸ்ரீவிஷ்ணு புராணம், 1968, பக்: 214-247.

# 3. ஞானவாசிட்டக் கதைச்செய்திகள்

3.0. ஞானவாசிட்டக் கதைகளால் அறியப்படும் பொதுச் செய்திகள் இந்தப் பகுதியில் சுட்டப்பட்டுள்ளன. ஒரு செய்தி பல கதைகள் வாயிலாக விளக்கப்படுள்ளது. அவ்வாறு காணப்படும் செய்திகள் எல்லாம் தொகுத்து பகுத்து யோகம், பிறப்புக்கள் அரசு செய்திகள், இல்வாழ்க்கை, தெய்வம், நிலையாமை, அறிவுரை போன்ற முறையில் விளக்கப்பட்டுள்ளது.

## 3.1. பொதுநிலை:

3.1.0. 'தானே எல்லாம்', 'பிரம்மமே எல்லாம்' என்னும் இரு நோக்குகளையும் ஆசிரியர் ஞானவாசிட்டக் கதைகளில் விளக்கு கிறார். இந்த இரண்டு நோக்கில் ஒன்றைத்தான் சில கதைகளில் பயன்படுத்துகிறார். இந்த இரு நோக்கும் சேர்ந்து கதைகளில், அரிதாகவே காணப்படுகின்றன. இராமனிடம், 'தானே எல்லாம்' என்று நினைத்து வாழ்ந்தாலும், 'பிரம்மமே எல்லாம்' என நினைத்து வாழ்ந்தாலும் பிரம்மத்தை அடையலாம் என்று வசிட்டர் அறிவுறுத்துகிறார். 'தானே எல்லாம்' என்ற கருத்தை வலியுறுத்த அயிந்தவர் கதை (3.4), கசன் கதை (4.5), சனக ராசன் கதை (5.1) சதவுருத்திரர் கதை (6.6), மித்தையாபுருடன் கதை (6.11) போன்ற கதைகளைக் கூறுகிறார். இதில் தானே எல்லாம் என நினைத்து எந்தச் செயலில் ஈடுபட்டாலும் தனக்கு எந்த வருத்தமும் இருக்காது என்று விளக்குகிறார். எல்லாம் பிரம்மமே என்ற கருத்தைப் பெரும்பாலான கதைகளில் சுட்டிக் காட்டுகிறார். அந்தப் பிரம்ம நிலையை அடைவதற்கு ஞான வாசிட்டம் பல வழிகளைக் குறிப்பிடுகின்றது. யோகம், தவம், ஆசிரியர் அறிவுரை, வழிபாடு, தன்னைத்தானே சிந்தித்தல் போன்ற கருவிகளைக் கதைகள் மூலம் விளக்குகிறார். எனவே, ஞானவாசிட்டம் பிரம்ம நிலையை அடைவதற்குரிய கொள்கை களுக்கு வழி வகுக்கிறது எனலாம்.

3.1.1. தான் நினைப்பது தனக்குக் கிடைக்கும் என்ற கருத்தை வலியுறுத்த தவநிலை, இறைவன் காட்சி (பின்னிணைப்பு: 3.1) போன்றவற்றைக் கதைகள் மூலம் ஞானவாசிட்டம் காட்டு கிறது.

3.1.2. வாழ்க்கையை எப்படி சந்திப்பது என்ற கேள்வி ஞானவாசிட்டத்தில் முதல் பிரகரணத்திலே எழுப்பப்படுகிறது. இதனை வலியுறுத்தப் பல கதைகள் (பார்க்க: 3.6; 3.7) விளக்கப்படுகின்றன.

3.1.3. மாயை என்றால் என்ன என்பதை; வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை மாற்ற வரும் தெய்வங்கள் மூலமாகவே விளக்குகிறார். அவ்வாறு பிரம்பதம் அடையும் நிலையையும் காட்டுகிறார். வாழ்க்கையின் எல்லா நோக்குகளும் செயல்களும் வழிகளும் இந்த நூலில் அமைந்துள்ளன.

3.1 4. இந்தக் கருத்துக்களை வலியுறுத்தும் தத்துவங்களே திரும்பத் திரும்பப் பல கதைகளில் இடம் பெறுகின்றன. இது ஒரு கூறியது கூறல் குற்றமாகக் காணப்பட்டாலும் தத்துவ நூற்களில் அவை கருத்து வலியுறுத்துவதற்காக அமைந்துள்ளன என்பதினால் குற்றமாகாது. உருக்கிய பொன்னைத் திரும்பவும் உருக்கினால் அதன் மாசு நீங்கி ஒளி வீசும். அது போலத்தான் வசிட்டர் இராமனிடம் உள்ள மாசை நீக்க வேண்டிச் சொன்ன தத்துவச் செய்திகளையே திரும்ப திரும்ப கதைகளின் மூலமாக வலியுறுத்துகிறார் எனலாம். மீண்டும் மீண்டும் அறிவுறுத்துவது தானே அறிவுரைப் பயிற்சியின் இயல்பு.

3.1 5. மேற்கூறியவை நூல் முழுவதும் பரந்து காணப்படும் பொதுச் செய்திகளாகும். மேலும் இந்தக் கட்டுரையில் ஆசிரியர் வீடு பேற்றிற்குக் கருவியாகப் பயன்படும் யோகங்களைக் கதை வாயிலாக வெளிப்படுத்தும் முறை, பிறப்புக்கள் எவ்வாறு தோன்றுகின்றன. அரசாட்சியைப் பற்றியச் செய்திகள், இல்வாழ்க்கையின் சிறப்பு, அதனால் அடையும் வீடுபேறு, தெய்வங்கள், அறிவுரைச் செய்திகள் போன்ற தனித்தனிச் செய்திகளைக் கதைகளுள் கதையாக அமைத்துள்ளார். அவற்றை விளக்குவதே இந்தக் கட்டுரையின் நோக்கமாகும்.

### 3.2. யோகம்:

3.2.0. பத்தி இலக்கியங்களில் வீடு பேற்றை அடையும் வழிகளைப்புகட்டும் நூற்களே மேலான நூற்கள் ஆகும். முத்தி அடைவதற்கு நிகரான பேறு மனிதனுக்கு வேறுஇல்லை,

ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கைக் குறிக்கோள் முக்தியே என்பதை கீதை நன்கு தெளிவுறுத்துகிறது. முத்தி நிலையை அடைவதற்குரிய வழிகள் கர்மம், பத்தி, யோகம், ஞானம் என்ற நான்காகும். இவற்றின் ஒவ்வொரு பிரிவிலும் பல இணைப் பிரிவுகள் காணப்படுகின்றன. இந்த நான்கு நிலைகளுக்கும் நான்கு நூற்களைக் குறிப்பிடலாம். கர்மயோகத்துக்குப் பகவத் கீதையையும், பத்தியோகத்துக்குப் பாகவதத்தையும், யோகத் துக்கு பதஞ்சலியின் யோகசூத்திரத்தையும், ஞானயோகத் துக்கு ஞானவாசிட்டத்தையும் கொள்ளலாம்.

3.2.0.1. தமிழ் இலக்கியத்தில் நீதி நெறியைப் புகட்டி ஞான மார்க்கத்தைக் கூறும் சிறந்த நூற்களுள் ஒன்று ஞானவாசிட்டம் ஆகும்.

..........................................................

ஆகவே யிரண் டாயிரத்தைம்பது
மாக விக்கைந் ததிகமிவ்வாசிட்டம்
யோக ஞானத்தி னுண்மையுரைக்குமால்''(வைரா:14)

என ஞானத்தின் பெருமையைக் கூறும் இந்த நூலில் வீடுபேற்றை அடைவதற்குரிய வழிகளை வகுத்துள்ள பாங்கு இந்தப்பகுதியின் கண் விரித்துரைக்கப்படுகிறது.

### 3.2.1. கர்மயோகம்:

பகவத்கீதை எல்லாவகையான யோகங்களையும் விளக்கிக் கர்மயோகத்தைச் சிறப்புற வலியுறுத்துகிறது. பகவத்கீதையின் சாரத்தை ஞானவாசிட்ட ஆசிரியர் அருச்சுனன் கதையில் (6.5) தெளிவுபடுத்தியுள்ளார். ஆசிரியர் கர்மயோகத்தை விளக்குவதற் காகவே இந்தக் கதையை எடுத்தாண்டுள்ளார் எனலாம். மேலும் கர்மம் செய்ய வேண்டும் என்பதையும், அந்தச்செய்கையால் 'தான்' என்ற அகங்காரம் மாறும் என்பதையும் தாமவியாளகடர் கதை (4 2), பாச விபாசன் கதை (5.8), பகீரதன் கதை (6.8) முதலிய கதைகள் மூலம் விளக்கியுள்ளார்.

### 3.2 2. பத்தியோகம்:

பத்தியின் மூலம் இறைவனை அடையலாம் என்பதைப் பல நிலைகளில் பல கதைகள் வாயிலாக ஆசிரியர் வலியுறுத்தி யுள்ளார்.

3.2.2.1. லீலையின் (3.2) பூசையால் சரஸ்வதி தேவியின் காட்சி, வரம் கிடைத்தமையையும் லீலைகதையால் அறியமுடிகிறது. இந்தக் கருத்தை,

'மன்னற் குறைபாது நன் மந்திரங் கற்பம் வல்லோர்
சொன்னத்தி னின்று சுரர் பூசுரர் பூசைபண்ணி
அன்னத்தை நானான்கினுக்கோர்பகல் அற்பமாயுண்டு
இன்னிட்டை யாலேமதி பத்துநடந்த வெல்லை'(லீலை:5)
'வானார்மதி போனிற்வாணி மகிழ்ந்து தோன்றி
நீநாடிய தென்னென' (லீலை;6.1.2)

என்னும் பாடல் அடிகளால் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

3.2.2.2. பிரகலாதன் திருமாலை ஆராதனை செய்வதையும் அதன் காரணத்தையும் அதனால் கிடைத்த பலனையும் பிரகலாதன் கதை(5.4) வழி காட்டியுள்ளார். பிரகலாதன், 'நாராயணாயநம' என்ற சொல்லை ஓயாமல் ஒலித்துக் கொண்டிருந்தால் முத்தி கிடைக்கும் என்று கூறி வழிபடுகிறான்.

'நயந்த தெல்லாமெளிதருளு நாராயணாயநம வென்னும்
உயர்ந்த திருமந்திரமென்றன் உளத்தில் விண்ணின் மாருதம்போற்
பெயர்ந்து நீங்காதுள்ளுறைக பேணியரியைப் பூசிப்பேர்
இயைந்த வரிதாமப்பூசை இயற்றிற் பலனாமலதில்லை'
(பிரக.5)

இவ்வாறாகத் திருமாலை எப்பொழுதும் ஆராதனை செய்வதாகக் கூறி,

மணிப்பூண்களும் பீதாம்பரமும் வாடாமலரு நல்லமுதுங்
கணிப்பிலாத பொருளெல்லாங் கருத்தாற் பாவிதஞ்சித்துத்
தணிப்பிலாதவன் பான்முன் றந்தப்புறத்தின் பொருட்டினாற்
பணிப்பாயவனையுட் போலப் பரிந்து புறத்தும் பூசித்தான். (பிரக;8)

என ஆராதனை செய்த முறையினை விளக்கியுள்ளார். இந்த ஆராதனையை ஏற்றுக் கொண்ட திருமாலும் பிரகலாதனுக்குக் காட்சி கொடுத்து மீண்டும் பிறவாத வரத்தைக் கொடுத்துச் சென்றார்.

3.2.2.3. விரத சூயை கதையில் (6.12) பிருங்கீசனன், இந்த உலகமாகிய பழங்குடிவில் இளைப்பாறித் திரிவது எப்படி என்பதை அருளவும் எப்பொழுதும் அச்சமில்லாமலிருக்கின்ற மார்க்கத்தை அருளவும் அன்பினால் சிவனை வேண்டினான்.

'மூன்றுவகை விரதமெனும் இதுதன்னைப் பிருங்கீசன் மோகம்போக
வின்றுபரம் பொருளறியும் விருப்பினாலே மகிரி வடகோ டெய்தி
வான்றுணையாஞ் சங்கரனைத் தொழுதிறைஞ்சி இப்பிற விமயக்கை நோக்கித்
தோன்றுணர் விலாறுதலில் லாமையினான் மோகித்துத் துவண்டேன் (விரத:8)

என அன்பினால் தொழுது போற்றி வணங்கினால் சிவன் காட்சி, அருள் இரண்டையும் கொடுப்பார் என்பதை இந்தக் கதையால் அறிய முடிகிறது.

3.2.2.4. இட்சுவாகு மன்னன் பிரம்மனை வணங்கித்துதித்து ஞானமென்னும் மேலான மோட்சத்தை அடைந்த விதத்தை இட்சுவாகு கதையில் (6.13) காணமுடிகிறது.

இந்த உலகத்தில், மூப்பு, இறப்பு, சுகதுக்கங்கள், வாடுகின்ற பிரமைகள், மயக்கங்கள் எனும் அளவிடாத நிலைகளாகக் காணப்படுகின்றவை எவை எனபதையும், அளவில்லாத உலகத்துக்குக் குற்றமற்ற காரணம் எது என்பதையும் பற்றி இட்சுவாகு மன்னன் சிந்தித்தான். உலகின் மூலத்தைச் சிந்தித்தும் அறிந்திலன்; அதனால் அதை அறியவேண்டி பிரம்மனை வணங்கித் துதித்தான்.

'அயனாட்டினும் வந்தடைவுற்ற வாதிமனுவாம் பகவானைக் கண்டு
இயலாற் பூசித்தரும் செல்வாய் இன்றுநீ இங்கெளிதெய்தி
முயல்வாலளித்த நின்னருளான் மோகந் தீர்ந்து நிலைநிற்கும்
பயனாலென்னையருளென்று பாவியரசன் உரைசெய்வான்
(இட்சு:10)

என்று கூறி வழிபட்டமையால் பிரம்மன் காட்சி கொடுத்தான். பிரம்மன் இட்சுவாகுவுக்கு அறிவுரை செய்ததினால் அரசன் வீடுபேற்றை அடைந்தான்.

3.2.2.5. தேவபூசை கதையில் (6.2) பத்தியின் நிலை பல வகையில் படம் பிடித்துக் காட்டப்படுகிறது. சிவனுக்கும் வசிட்டருக்கும் நடக்கும் உரையாடலினால் அகப்பூசை, புறப்பூசை போல்வன விளக்கப்படுகின்றன.

எல்லாம் இறைவனே என்று ஆராதனை செய்தால் முத்தி அடையலாம் என்பதனை ஆசிரியர்,

'நயனமூக்கு செவிதொக்கு நாக்குமனமாஞ் சத்திகளால்
இயல்பிலெங்கும் விடயங்களருந்தி எண்ணங்களுக்கெல்லாம்
அயலதாகும் எவ்விடத்தும் பரமசிவமென்று அகத்தெண்ணி
உயர்தெய்வத்தை விதிநெறியே போங்கு பூசை செயவேண்டும்' (தேவ:35)

என அமைத்துள்ளார். சிவனை வழிபட வேண்டும் என்றும் அவனது நினைவான இலிங்கத்தை ஆராதனை செய்தால் இந்த உலகில் கிடைக்கப்பெறாதது எதுவும் இல்லை என்னும் கருத்தை கீழ்வரும் பாடலால் அறியலாம்.

'வெகுவாயடைந்த பொருள்களிலே மேவித்தனது மெய்யுணர்வாந்
தகுநீர் முழுக்கான் மலமற்றுத் தப்பில்போத பூசனையான்
மிகுநற்போத விலிங்கத்தை மேவுபூசை செயல் வேண்டும்
பகுதியில்லா இப்போதம் பயிலாதிருக்கும் இடமுண்டோ'
(தேவ:42)

இவ்வாறு ஆசிரியர் பத்தியின் இயல்பை பல நிலைகளாகப் பலகதைகள் மூலம் விளக்குவதைக் காணமுடிகிறது.

### 3.2.3. யோகம்:

யோகம் என்ற தனிநிலை இந்நூலில் குறிப்பிடவில்லை. தவம் செய்கின்ற போது எந்த வகையான நிலைகளில் இருந்தார் கள் என்றே இங்கு குறிப்பிடப்படுகிறது. யோகத்துக்குத் தியானம் என்று பொருள் உண்டு. மேலும் இதற்கு இந்திரியங்களைத் தன்வழிப் படுத்திக் கொண்டு உள்ளத்தைப் பிரம்மத்தில் நிறுத்து தல் என்னும் பொருளும் கொள்வர் (பார்க்க:4.16.4). இந்த இரு நிலைகளே ஞானவாசிட்டத்தில் காணப்படுகின்றன. பத்திவழி பாட்டைக் கூறிய ஆசிரியர் தவத்தின் பெருமையையும் அதனால் இறைவன் காட்சி கிடைத்ததையும் முத்திநிலை பேற்றையும் கதைகள் மூலம் விளக்கியுள்ளார்.

3.2.3.1 கற்கடி கதையில் (3.3) கற்கடி என்ற அரக்கி தான் இந்த உலகில் வாழும் உயிர்களைக் கொல்வதால் தனக்கு நிம்மதி இல்லாததனால் சிறிய ஊசி அளவில் உயிர்போதும் (சிஙூசியாக வேண்டும்) என்று நினைத்து அதைப்பெற ஆயிரம் ஆண்டு பிரம்மனை நோக்கித் தவம் இருந்தாள். அவள் தவம் இருந்த விதத்தை ஆசிரியர்,

'மழைபால வியுங்கானலென வயிற்றில் எரியுஞ்சிறிதவியும்
பிழையாதி தனைத்தவம்புரிந்து பிரமனருளாற் பெறுதுமெனா
முழையாரி மயகிரிமேவி மூழ்கி யொருகாலுற நின்று
புழையார் விழியானடுவானிற் பொலியுங்கதிரை யெதிர்
நோக்கி' (கற்:9)

எனக் காட்டியுள்ளார். இந்தத் தவத்தினால்பிரம்மன் காட்சிகொடுத் துக் கற்கடியின் வேண்டுதலையும் நிறைவு செய்தான்(கற்:17).

3.2.3 2. அயிந்தவர் கதையில் (3 4) இந்து என்ற அந்தணன் தனக்குக் குழந்தைகள் இல்லாமையால் மைந்தன் வேண்டி மனைவியுடன் கைலாய மலைக்குச் சென்று சிவனை நோக்கித் தவம் செய்தான்.

'தவ மேற்கொண்டு பாதவம்போற் சலமே யருந்தி
விருத்திடு நாள்' (அயிந்: 6:1)

அதனால் சிவனின் காட்சியைப் பெற்றான். பலனால் பத்து மைந்தர்களைப் பெற்றான்.

3.2 3.3 'உதிதமனத்துப் பதின்மரு மொத்து யரும் பது மாதனத்திலிருந்து' (அயிந்: 8:1) என அயிந்தவர் கதையில் (3.4), இந்து என்ற அந்தணனின் மக்கள் பத்து பேரும் பத்மாசனத்திலிருந்து 'தானே பிரம்மன்' என்ற எண்ணத்தை வலியுறுத்த தவம் செய்தார்கள் என்றும் அந்தத் தவவலிமையால் பத்து உலகங்களைப் படைத்தார்கள் என்றும் அறிய முடிகிறது.

3 2.3 4 தாசூரன் என்ற முனிவன் தான் தவம் செய்வதற்குப் பூமியில் புனிதமான இடமில்லை என்று நினைத்தான். எனவே கடம்ப மரத்தின் நுனி இலையில் தவம் செய்ய அருள வேண்டும் என நெருப்பு வளர்த்து அதில் தன் உடலையே அரிந்து இட்டுத் தவம் செய்தான். தவ முடிவில் (அக்கினி தேவன்) தீக்கடவுள் வெளிப்பட்டு, அந்த முனி கேட்டவாறே வரங்கொடுத்துச் சென்றான் (தாசூ: 64). அதன் பிறகு தாசூரன் கடம்ப மரத்தின் உச்சித் தளிர் இலையில் பத்மாசனத்திலிருந்து பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்தான். நிட்காமமாகச் செய்த இந்தக் கர்மயோகப் பலத்தினால் பூரண ஞான நிலையை அடைந்தான் எனத் தாசூரன் கதை (4.4) விளக்குகிறது.

3.2.3.5. காதி என்ற அந்தணன் மாயையைப் பற்றி அறிய ஆசை கொண்டு திருமாலை நோக்கித் தவம் செய்தான் என்பதை காதி கதையால் (5.5) அறியலாம். காதி தவம் செய்த முறையை ஆசிரியர் கீழ்வரும் பாடலால் விளக்கியுள்ளார்.

'நண்ணியணி கழுத்தளவாய் அமிழநின்று நற்றவஞ்செய்
தெண்டிங் களடைந்த வெல்லை
கண்ணருளான் மாயவன் வந்தவன் முன்றோன்றிக்
கருத்தென்கொல் அளித்தும் எனக் கழறலோடும்
(காதி: 2:3,4)

என தண்ணீரில் நின்று எட்டு மாதம் தவம் செய்தார். அதனால் திருமால் காட்சி கொடுத்து, மாயையின் தன்மையைக் காணும் படிக் கூறி மறைந்தார்.

3 3.3 6. வசிட்டர், தான் சிவனை நோக்கித் தவம் செய்ததைப் பற்றி இராமனுக்குக் கூறுவதாகத் தேவ பூசை கதையில் (6.2) ஆசிரியர் சுட்டியுள்ளார்.

வசிட்டர் மகாமோகத்துக்குக் காரணமான இந்த உலகத்தை நீக்கிப் பிரத்தியே காத்மாவைக் (தனிமை) காண்பதற்காக சிவனை நோக்கித் தவம் செய்தார். மேலான கயிலையில் சிவனை ஆராதித்து கங்காநதியின் பக்கத்திலிருக்கின்ற பன்னக சாலையில் தவம் செய்து சித்தர் குழாங்களோடும் பல சாத்திரார்த் தங்களைப் பார்த்து அதன் பலனை அடைய வெகு காலம் தவம் செய்தார் என இந்தக் கதையில் விளக்கியுள்ளார்.

3.2 3.7. சுக்கிரன் கதையில் (4 1) பிரகு முனி நிலை பெற்ற தவத்தைச் செய்தான் என்றும் அதனால் பிரிவில்லாத சமாதி நிலையை அடைந்தான் என்றும் ஆசிரியர் கூறியுள்ளார்.

'வரிசடை பலவுங்கட்டி வாசுதேவப் பேர் மேவி
புரிதவத்து எண்ணூறாண்டு பொருந்திலன் தினது மைந்தன்'
(சுக்: 10:1,2)

என்னும் அடிகள் பிரகு முனியின் மகனான சுக்கிரன் எண்ணூறு ஆண்டு தவமிருந்து சீவன் முத்தி அடைந்த நிலையை விளக்குகின்றன.

3.2 3.8. உத்தாலக முனி,

'கருதுநினை வொழித்தொடுங்கிக் கார்வரையின்
முழைமுயிட்த்திற் கருங்கற் போல
நிருவிகற்ப சமாதியினால் எக்கால மசைவற்ற
நிலையினிற்பன்
ஒருமைபெறு தியானத்தால் இளைப்பாறும் என்னுடைய
வுச்சி மீதே
குருவியினங் கூடமைத்துக் குடியிருப்ப தெக்காலங்
குஞ்சியாலே' (உத்: 17)

என மலைக்குகையில் கருங்கல்லைப் போல நிருவிகற்ப சமாதியில் இருந்தான் என்றும், புத்தனைப் போலத் தியானித்தான் என்றும் (உத்: 20),

'புண்டரீக வாதனத்திற் புத்தன் போலுத் தரமுகனாய்
அண்டமிரண்டு மிருகுதிமே லாக்கிப் பிரமாஞ்சலி
பண்ணி' (உத்: 21: 1,2)

தவம் செய்தான் என்றும் உத்தாலகன் கதையால் (5.6) தெரிய முடிகிறது. இவ்வாறு தவம் இருந்தமையால் உத்தாலகமுனி சீவன் முத்தி நிலையை அடைந்து பின் விதேக முத்தி நிலையை அடைந்தான்.

3.2.3.9. வீதகவ்வியன் என்ற முனி சமாதி நிலையை அடைந்த முறையைக் கீழ்வரும் பாடல் விளங்குகிறது.

'நிருவிகற்பமாஞ் சமாதியின் பொருட்டு முன்னிகழ் கிரிகைகளெல்லாம்
ஒருவி விட்டனன் பன்னசாலையினிடை யுற்றான் கலைத்தோன்மேன்
மருவுமெத்தபங் கேருகாசனத்தனன் வருகுதி மிசைவைத்த
விருகரத்திரள் விரலினனிவ்வகை இருந்தனன் ஒருப்பட்டு'
(வீத:46)

இவ்வாறு இருந்ததினால் அத்வைதமானான் என்பதை வீதகவ்வியன் கதையால் (5.9) அறியமுடிகிறது.

3.2.3.10. சிகித்துவசன் கதையில் (6.9) சிகித்துவ அரசன் மனைவி சூடாலையின் சொல்லை மறுத்துக் காட்டில் சென்று தவம் செய்தான். பின் சூடாலையின் அறிவுறுத்தலின் காரணமாகச் சமாதி நிலையை அடைந்தான். அந்த நிலையை ஆசிரியர்,

ஆனவா தனைகளின்றி அசைவற்றுப் பேரானாகி
மோனமாய் நிருவிகற்ப மாய்ப்பற்று முற்றுமற்று
தானமே யமுந்திக் கற்போற் றருவைப் போற்சுவர்போனின்
றான்' (சிகித்:166.1-3)

என விளக்கிக்காட்டியுள்ளார்.

3.2.3.11. வசிட்டரின் அறிவுறுத்தல் வாயிலாக பலவகைப் பட்ட யோகநிலைகளை அறியமுடிகிறது.

### 3.2.4. ஞானம்:

3.2.4.0. ஞானமே எல்லாவகை யோகங்களுக்கும் மூலமாகும். தவத்தினால் முத்தி அடைந்தவர்களில் பலரும் ஞானத்தையே கருவியாகக் கொண்டிருந்தனர். ஞானத்தினாலும் முத்தி அடைந்தவர்கள் பலர் என ஞானவாசிட்டத்தில் விளக்கப்பட்டுள்ளது (பார்க்க:4.2).

3.2 4.1 சுகர்கதையில் (1.1) ஞானத்தினால் எல்லாம் அறிந்த சனகர் சீவன் முத்திநிலையை அடைந்தவர் என வியாசரால் கூறப்பட்டுள்ளது.

3.2.4.2. ஞானவிண்மகன் கதையில் (3.1), ஞானவிண்மகன் பிறந்தது ஞானத்தினால் ஆகும். எனவே அவனுக்கு இறப்பு கிடையாது என எமன் வாயிலாகத் தெளிவு படுத்துகிறார். ஞானத்தினால் விதேகமுத்தி அடையலாம் என்பது இந்தக் கதையின் உட்பொருளாகும்.

3.2.4.3. புண்ணியபாவனன் கதையில் (5.2) புண்ணியன் நிட்காமியமாகச் செய்த (பொதுவறச்செய்த) தவப்பலத்தினால் ஞானமடைந்தான் என்கிறார். இதனால் விதேக முத்தியை அடைந்தான். புண்ணியன் தம்பியாகிய பாவனன் கவலையுற்று இருப்பதைக் கண்டு அவனுக்கு ஞானத்தை அறிவுறுத்தியுள்ளான்.

3.2.4.4. மாவலிகதையில் (5.3), மாவலி தன்குரு சுக்கிராச்சாரியரின் ஞான அறிவுரையால் முத்தி அடைந்தான் என்பது விளக்கப்பட்டுள்ளது. மாவலி, சுக்கிராச்சாரியாரிடம்,

என்னிங்குள்ளது அப்பாலென்னஎல்லை சொல்லப்பட்டுளதென்
றுன்னுமெல்லை யில்லாதென் சொல்லுநானார் நீயாரிம்

மன்னுமுலக மேதென்று மயக்கந்தீர வருள்' (மாவலி:44.1-3) என்று கேட்டான். அதற்கு அவர்,

'சுருங்கச் சொல்லும் பயன்கேளாய் தோன்றவிங்குள்ளது வுஞ்சித்து
ஒருங்கப் புறத்துஞ்சித்து எல்லையுள்ளதுஞ்சித்து எல்லையற
நெருங்குற்றதுஞ் சித்து யான்சித்து நீசித்து உலகநிறைசித்தே'
(மாவலி:45:2-4)

என எங்கும் எதிலும் ஞானமே (சித்தே) என்று கூறித் தெளிவித்துள்ளார்.

3.2.4.5. தேவபூசை கதையில் (6.2) ஞானத்தினைப் பெறும் வழிகளை ஆசிரியர் வகைப்படுத்தியுள்ளார். ஞானமானது

அறிபவர்களுக்குத் தனது ஆத்மவடிவத்தைத் தவறாமல் கொடுக்கும். ஞானத்தை, ஆசிரியர் அறிவுரையாலும் தனது ஞானத்தினால் தானே உணர்ந்தும் அடைய வேண்டும் என்றும் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

'ஆசான் மொழியான் நூற்பொருளால் அன்றிப் பெறவும் அரிதாகுந்
தேசார் குருநூன் மாணாக்கன் சிறக்க இந்த மூவருங் கூடிற்
பாசாதீதப் பரமெய்தும் பன்னாணீங்கா விக்கூட்டம்
ஏசாவுணவைத் தரும்பகற்போ தொல்லாத் தொழிலுந் தருவதுபோல்'(தேவ:58)

எனவும் ஞானத்தை (உணர்வை)த் தெளிவுறுத்தியுள்ளார்.

3.2.46. சிகித்துவசன் கதையில் (6.9) சூடாலை என்பவள் மறுமைக்காகிய நன்மையான பதக்கிரமத்தினால் மூதறிஞானவர்கள் அனுக்கிரகித்த செவ்வையான நூற்களை எல்லாம் தெரிந்து, கேட்டு, விசாரணை செய்தாள். அதனால், ஞானமடைந்தாள் என்று சூடலையே சிகித்துவ அரசனுக்குக் கூறுகிறாள் (சிகித்:21). ஞானமடைந்ததினால் அவளுக்கு ஆகாயத்தில் பறப்பதற்கும், கும்பமுனியாக உருமாற்றம் செய்வதற்கும், அணிமா முதலிய சித்திகளைக் கையாளுவதற்கும், அரசனுக்கு அறிவுரை செய்வதற்கும் ஏற்றநிலை ஏற்பட்டது.

3 4 2.7. திதிப் பிரகரணத்திலுள்ள கசன் கதையில் (4.5). கசமுனி ஒருசமயம் சமாதிநிலையிலிருந்து மீண்டபிறகு எல்லா இடமும் தானே நிறைந்திருப்பதாகக் கூறினான். 'அறிவே எல்லாம்' என்பது இந்தக் கதையால் அறியலாகும் செய்தியாகும்.

3.2 4 8 இட்சுவாகு கதையில் (6.13), இலட்சுவாகு மன்னன் பிரம்மாவிடம்,

'எங்கு நின்று வந்துளது இச்சிருட்டி இதற்கெப்படியுருவ
மங்கு மூலகமெம்மட்டு மற்றாருடையது எதுகாலம்
இங்கிதெதனாலென உணர்த்தி ஏறிக்குறைந்த இப்பிறவிப்
பொங்குமயக்கை வலையு கலும்புட்போனீங்கும் வகைபுகலாய்'
(இட்சு: 11).

எனக்கேட்டான். அதற்குப் பிரம்மா ஞானபூமி ஏழின் விளக்கம் கூறி மேலும் எல்லா ஞானமே என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

'அந்த வயிக்கமில்லை இரண்டில்லை அறிவே வளர்ந்தெழுந்த
சிந்து தரங்கப் பங்கத்தால் திகழுகின்ற நீர்போல
அந்தமில்லா வறிவுருவே விளங்கும் அயலொன்றிலதாகும்'
(இட்சு: 15:2-4)

என்று அறிவுருவைத் தவிர ஒன்றுமில்லை என்று விளக்கியுள்ளார்.

3.2.4.9. ஞானத்தை அடைவதற்கும், ஞானத்தினால் முத்தி அடைவதற்கும் இடம், காலம், வயது எதுவும் தடை இல்லை என்ற கருத்துக்களைச் சுகர் கதை (1.1), ஞானவிண்மகன் கதை (3.1), கசன் கதை (4.5), புண்ணியபாவனன் கதை (5.2), சுரகு கதை (5.7), பிரகலாதன் கதை (5.4), பகீரதன் கதை (6 8); சிகித்துவசன் கதை (6 9), மானுவேடன் கதை (6.14) முதலிய கதைகளினால் அறியலாம்.

3.2.4.10. ஞானவாசிட்டத்தில் எல்லாக் கதைகளுமே ஞானம் பற்றிப் பேசுகின்றன. (பார்க்க: 4.2)

## 3.3. பிறப்புக்கள்:

3.3.0. மறுபிறப்புகள் உண்டு என்பது பல மதத்தவர்களும் ஒத்த கருத்தாகும். பிறவி அவரவர் இறுதிகால எண்ணங்களால் தோன்றுபவை.

3.3.1. 'எழுபிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப்
பண்புடை மக்கட்பெறின்' (குறள்: 62)

எனத் திருவள்ளுவர் எழு வகைப் பிறப்பைக் குறிப்பிடுகிறார். இங்கு எழும் பிறப்பு என்று கருத்துக் கொண்டாலும் மறுபிறப்பை வலியுறுத்துகிறது குறள் எனலாம். ஆனால் ஞானவாசிட்டத்தில் நூறுபிறப்புக்களைச் சதவுருத்திரன் கதையால் (6.6) எடுத்துரைத்துள்ளார். மேலும் லீலை கதையில் (8.2), வசிட்டன் (அந்தணன்), பதுமன், சயந்தன், விடூரதன் என்ற நான்கு பிறப்புகளை எடுத்துள்ளதாகக் காணமுடிகிறது. பிறவிகள், ஒவ்வொருவருக்கும் அவரவர் எண்ணங்களைப் போலத்தோன்றும் என்பதை வலியுறுத்துகின்றன.

சான்றாக: 1. லீலை கதையில் (3.2) வசிட்டன் என்ற அந்தணன் தனது முதுமைக் காலத்தில் அடுத்தப் பிறவியில் அரசனாகப் பிறக்கவேண்டும் என்று எண்ணிக்கொண்டே இறந்த மையால் மறுபிறவியில் பதும அரசனாகத் தோன்றினான். (லீலை: 22-24)

2) சதவுருத்திரன் கதையில் (6.6) முனிவன் உறங்கும் போது நினைத்த நினைப்பின் படி நூறுபிறவிகள் எடுத்தான்.

அரசனோர் இரவுதுஞ்சி அடைந்தவோர் கனவிற் றன்னைச்
சுரமகளாகக் கண்டான் சுரமகள் சுரதப் போரிற்
பரவச மாகத்துஞ்சப் பியல்வுறு கனவிற் றன்பாற்
குரமட மாளாய்க் கண்டாள் கூறுமான் துயின்ற தோர்கால்
(சதவு: 7)

எனக்கூறி மேலும் பல பிறப்புகளை ஆசிரியர் குறிப்பிட்டிருப் பதைக் காணமுடிகிறது.

3) புண்ணிய பாவனன் கதையில் (5.2), 'அளவிறந்தபிறவி' (புண்: 48) உண்டு என்ற குறிப்பு உள்ளது.

4) சனகராசன் கதையில் (4.1.) சத்தென்ற வழியிரண்டு ஏழ்வத்தீர்ப்பவர்க்கு' (சனக 6 4) என ஏழு பிறப்புகள் உண்டு என்பதை குறிப்பிட்டிருப்பதை காணலாம். ஏழ்பவம் என்பதற்கு ஏழு பிறவி என்பது உரையாசிரியர் கூற்று. பவம் என்றால் பிறப்பு என்றும் பொருள் உண்டு.

5) புசுண்டன் கதையில் பல வகையான பிறப்புகளைப் பற்றிய கருத்துகளைக் காணமுடிகிறது. வசிட்டரது எட்டாவது பிறப்பு சுட்டப்பட்டுள்ளது.

"மெய்வாய் முனியே யுன்பிறவி விளம்பிலெட்டா குமெதி
துவாம்" (புசு: 62.2)

இது மட்டுமல்லாமல் பிறப்புகளின் அளவு கிடையாது என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளதை நூல் முழுக்கக் காணமுடிகிறது.

'உக்கோர் புரமூன் றினுமுள்ளோ ரொருக்காற்போல் முப்பதின்
கால' (புசு: 67.4)

என திரிபுரத்திலுள்ளோர் முப்பது தடவை கனமானார்கள் என்றும்

'அரக்கார்மாளப் பதினொன்றா மவதாரத்து விராமனென'
(புசு: 71.1)

என அரக்கர்களை அழிப்பதற்கு அவதாரம் எடுத்த நிகழ்ச்சிகளையும் இவை போன்ற பல செய்திகள் புசுண்டன் கதை வாயிலாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளதைக் காணமுடிகிறது.

8.3.2. பலவகைப் பிறவிகளைச் சுட்டிய ஆசிரியர் அவற்றை நீக்கி வழி வகைகளையும் தெரிவித்துள்ளார்.

1) பிறவிக்குக் காரணங்களான ஆசை, கோபம், லோபம், விவேகம், காமம், அசுத்தவாசனை, மனத்துன்பம் போன்றவற்றை நீக்கினால் பிறவி என்ற ஒன்று ஏற்படாது (புசு.75-77).

2) சங்கராசன் கதையில் ஏழு பிறப்பை நீக்க இரண்டு வழிகளை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அ. ஆசிரியரின் அறிவுரைகளைத் தவறாமல் பயிற்சி செய்து வந்தால் மெல்லமெல்ல மயக்கம் நீங்கி, அவர் கருணை செய்த பிறவிக்காலத்திலாவது அதற்கடுத்த சில பிறவிகளிலாவது வீடானது ஏற்படும்.

ஆ. மாசறுவிற்பத்திசிறி துண்டாருமணத் தாற்றன்
மனனத்தாலே

பேசறுமாகாசபலம் விழ்வது போன் மெய்ஞ்ஞான
மெனிதிலுண்டாம்

என்பது தெளிவு. (சனக: 7 3.4)

3) நிலையில்லாத பிறப்பை அறுக்க நல்லோர் கூட்டத்தினாலும், நன்னூற்களாலும் மாதவத்தாலும் அறிவை முதன்மையாக வளர்க்க வேண்டும் (முமூட்சு:12).

4) மறுபிறப்பை அடையாதபடி பரமபதத்தை அடைய வேண்டும் எனச்சிகித்துவசன் கதையில், 'மறுபவமுறாத வண்ண மாசறு பதத்தைச் சேர்து' (சகித்: 170.1) என்றும்,

புண்ணிய பாவனன் கதையில்; எழுபவமிலா வீடெய்தி' (புண். 12.4) என்றும் விளக்கியுள்ளதைக் காணமுடிகிறது.

3 8.3. ஞானவாசிட்டத்தில் பிறப்புகள் பல உள்ளன எனக் சுட்டி யருளிய ஆசிரியர் அதை அடையாமல் இருக்கும் வழிகளைக் குறிப்பிட்டிருப்பது சிறப்பான ஒன்றாகும்.

### 3.4. உயிர்கள்:

ஆன்மாவின் ஒற்றுமைப்பட்டு கால முடிவரையினின்று காலத்திறுயில் பூத தேகம் நீங்கிச் சூட்சும உடலுடன் ஆன்மாவைப் பின்பற்றிச் செல்லும் அருவுருவப் பொருள் உயிராகும். அது உருவமாய் பௌதிக தேகத்தால் காணப்படுதலின் உருவம், இன்னவுருவென அறியப் படாதிருத்தலின் அருவுமாம். இது மக்களிடத்து ஆறறிவுடனும் விலங்குகளிடத்து ஐயறிவுடனும். வண்டு, ஞெண்டு முதலியவற்றில் நான்கறிவுடனும் சிதல் எறும்பாதியில் மூன்றறிவுடனும் நந்து அட்டை முதலியவற்றில் ஈரறிவுடனும், புல்மரம் முதலியவற்றில் ஓரறிவுடன் காணப்படும்.[1]

அபிதான சிந்தாமணியில் குறிப்பிடப்படும் எல்லா உயிர்களைப் பற்றியும் நூலில் காணப்படுகிறது.

*சிதறுமிதற்சத் துவக்கூறு திரண்டவிருடி முனிசித்த*
*ரதிக நாகர் விஞ்சையர்க ளண்டர் முதலா நல்லுயிர்கள்*
(புசு: 12.3,4)

என ஆறறிவுயிர்களையும்,

'தாபரமாதி யாக்கை மேவி' (புசு: 15.1) என மரங்கள் முதலாகிய உடல்கள் பொருந்தியதைப் பற்றி குறிப்பிடும் போது ஓரறிவுயிர்களைப் பற்றியும்,

'தாவரங்க ளிவையெல்லாஞ் சடமாந்திறமாஞ் சுழுத்தியினை
மேவலுற்று மேன்மேலும் பிறத்தற்குரித்தாம் விதைகளிலே
(புசு: 20.1,2)

எனவும், 'பார்க்கு நிகரா மேனை முகம் படைத்த கணங்கள் பலவுண்டால் (புசு: 42.4) எனவும் மாதர்கணம், பூதகணம் போன்றவற்றையும், பறவைகள், அன்னங்கள், குயில்கள் போன்ற பலபுட்கள் பற்றிய செய்திகளையும் புசுண்டர்கதை வாயிலாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். சதவுருத் திரன் கதையில் நூறு பிறப்பு எடுத்ததைக் கூறும் போது முனிவர், சந்நியாசி, சிவடன்,

பிராமணன், வன்னியன், அரசன், தெய்வப் பெண், பெண்மான், கொடி, வண்டு, தாமரைத்தண்டு, யானை, அன்னம், உருத்திரன் போன்றவற்றைக் கூறு?,

'விசிய கனவு நூற்றின் வியப்பெலாம் விளங்க நோக்கி' (சத:45.1) என பல பிறப்பு எடுத்ததை விளக்கியுள்ளார் ஆசிரியர். உயிர்களின் குணங்களாகிய அறிவு, அருள், ஆசை, அச்சம், மரணம், நிறை பொறை, ஒர்ப்பு, கடைப்பிடி, மையல், நினைவு, வெறுப்பு, உவப்பு, இரக்கம், காண், வெருளி, துணிவு, அழுக்காறு, அன்பு, எளிமை, எய்த்தல், இன்பதுன்பம், இளமை, மூப்பு, இகல், வெற்றி, பொச்சாப்பு, ஊக்கம், மறம், மதம், மறவி முதலியவற்றை ஆளவந்தார் கதைகளில் பாத்திரங்கள் வாயிலாக விளக்கியுள்ளதைக் காணமுடிகிறது.

### 3.5. அரசு செய்திகள்:

3.5.0. இராமனுக்கு மீண்டும் அரசு பொறுப்பு ஏற்று நடத்தும் மனம் ஏற்பட வேண்டும் என்னும் நோக்கில் ஞானவாசிட்டக் கருத்துகள் அமைந்துள்ளதால் அதில் பல அரசு, அரசன் செய்திகள் நிறைந்திருப்பதைக் காணமுடிகிறது.

3.5.1. வைராக்கியப் பிரகரணத்தில் இராமன் தன் நிலையைக் கூறினான். அந்த நிலையை மாற்றாவிட்டால் நித்திய கன்மங்கள் எதையும் செய்ய முடியாததாகக் கூறுகின்றான். அந்த நிலையை அறிந்த முனிவர்கள், இராமன் இருப்பது,

'கைப்படுமிம் மாமோகங் காதலினா லாபத்தாற் கலந்த தன்றாற்
செப்பரிய நிராசையினால் விவேகத்தால் வருமுணர்வின் செல்வமாகுக' (வைரா: 55.2,3)

எனக்கூறி, அதை,

'தப்பில பல பூதத்தான் மோகம் பொய்த் தளர்வுறுத்தற் பதத்திலெம் போல்' (வரா. 66.4)

மாற்றுவோம் என கூறினர். இராமன் ஓர் இளவரசன் என்பதால் அரசர்களைப் பற்றியும், அரசனுடைய மகன், மந்திரியின் பங்கு, மக்கள் நிலை, அரசனின் குணநலன்களையும் இராமனுக்குப்

புரியும் படி கதைகள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார்கள். அந்தக் கதைகளில் அரசாட்சி செய்து கொண்டே அவர்கள் மேற்கொண்ட தவ நிலையையும், இல்வாழ்க்கையின் முக்கியத்துவத்தையும் வலியுறுத்திக் கூறுவதைக் காணலாம்.

3.5.2. முதல் கதையாகிய சுகர் கதையில் (1.1) சனக அரசனை வியாச முனிவர், 'மன்னவன் சனகனென்பான் வழுவறு முணர்வின் மிக்கோன்' (சுக: 11.4) என ஞானத்தில் மிக்கவன் என்றும், அவன் ஞானத்தினால் நாட்டை நல்ல முறையில் ஆட்சிசெய்பவன் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

3.5.3. 'மன்னவனெப்படி யுலகின் மன்னுயிரும் அப்படியா
மகிமை தானும்' (கற்: 32.1)

என மன்னவனின் எண்ணம்போல மக்கள் இருப்பார்கள் என்றும்,

'தீயவனா மந்திரியாற் நல்வேந்துந் தீவேந்தாந் தீமை
யில்லாத்
தூயவனா மந்திரியாற் றீவேந்தும் நல்வேந்தாந் தொடர்ச்சி
போல
வாயநெறி மன்னவரால் அமைச்சருமப் படியாகும் ஆதலாலே
நேயவிவே கத்தமைச்சன் உண்டாகில் எப்பயனும் நிருபற்
குண்டாம்' (கற்: 81)

என அமைச்சன் அரசனுக்கு உறுதுணையாக இருக்கும் முறையையும் அதனால் அரசனும் மக்களும் அடையும் பயனையும் கற்கடி கதையால் அறியமுடிகிறது.

3.5.4 சித்தன் கதையின் (3.8) மன உறுதியில்லாததினால் லவண அரசன்பட்ட செயல்களை விவரித்துள்ளார்

3.5.5 வஞ்சவிந்திரன் கதையில் (3.5), மகதநாட்டு அரசன் இந்திரத்துய்மன் தனது குருவாகிய பரத முனிவரின் ஆலோசனைப்படி மனைவி அகலிகையையும், தூர்த்தன் இந்திரனையும் அந்த நாட்டை விட்டுத் துரத்தி விடுகிறான்.

3.5.6. சனகராசன் மனநிம்மதியற்று பூங்காவனத்தில் அலைந்து கொண்டிருந்தான். அப்போது சித்தர் கூட்டத்தாரின் மொழிகளைக் கேட்டு மன நிம்மதி அடைந்து சமாதி நிலையை

அடைந்தான். இந்தச் செய்தி சனகராசன் கதையில் (5.1) விளக்கப்பட்டுள்ளது. அரசனாக இருந்தாலும் பிறருடைய அறிவுரைகளும் தேவை என்பது மேற்குறிப்பிட்ட கதைகளினால் அறியமுடிகிறது.

3.57. மாவலிகதை (5.3), பிரகலாதன் கதை (5 4) இரண்டிலும் மனவலிமை இருந்தால் தெய்வ சிந்தனையும், அரசாட்சியும் நன்முறையில் அமையும் என்ற கருத்துகள் விளக்கப்படுகின்றன.

பிரகலாதன் கதை மூலம் அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

'மாயனடிகள் அருச்சித்தான் அவனைப் போல வானசுரர்
தீபகுணம் விட்டெல்லோருந் திருமாற் கருமைத்திறம்
பூண்டார்
மேய மன்னன் குணமன்றோ விரிந்தவுயிரின் குணந்தானே'
(பிரக: 9, 2-4)

3 5.8. காதிகதையில் (5 5) சண்டாளர் குலத்தவர் ஆட்சி செய்தால் பாவம் என்று கூறுகிறார் (காதி: 14-17). கீரநாட்டிலுள்ள அரசன் இறக்க ஒரு சண்டாளனை அரசனாகத் தேர்ந்தெடுத்தது. எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு நாட்டை ஆண்ட அரசன் சண்டாளன் என அமைச்சர்கள் அறிந்தனர். அதனால் அமைச்சர்களும், அரசவையினரும் தீயில் விழ்ந்து இறந்தனர். இவ்வாறு அரசகுலமே அரசாட்சி செய்ய வேண்டும் என்று இந்தக் கதையில் உணர்த்துகிறார்.

3.5 9 சுரகு கதையில் (5 7), சுரகு அரசன் மாண்டவிய முனிவரின் அறிவுரையால் ஆட்சி செய்து கொண்டிருக்கும்போதே சமாதி நிலையை அடைந்தான். இந்தக் கதையில் நாட்டைச் சமபார்வையில் ஆட்சி செய்யவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

'மிகத் தெளிந்து கெம்பீரமாய்ச் சமமதாம் விழியால்
இகத்துறந்தொழின் மன்னவ வியற்றுதி கொல்லோ'
(சுரகு: 38. 1,2)

எனப் பார்த்திப அரசன் கேட்க, சுரகு அவ்வாறே செய்வ தாகக் கூறுகிறான்.

3.5.10. அருச்சுனன் கதையில் (6.5) கருமத்தைத் தவறாது செய்யவேண்டும் என்கிறார். அது போராக இருந்தாலும், கடமை யைச் செய் என்பது இந்தக்கதையின் உயிர்ப்பொருளாகும்.

3.5.11. வேதாள கதையில் (6 7) வேதாளம் எதிர்வந்த அரசனைப் பார்த்து, தான் ஒரு நீதியுடையவனாக இருந்தால் தன் கேள்விகளுக்குப் பதில் கூறவேண்டும் என்றும் தான் நீதி தவறியவனாக இருந்தால் தலை சிதறிவிடும் என்றும் கூறுகிறது. பின் அரசனே வேதாளத்தின் கேள்விகளுக்குப் பதில் கூறி வெற்றி பெறுகிறான். இந்தக் கதையில் நீதியுடைய அரசனாக இருந்தால் எதிலும் வெற்றிபெறலாம் என்ற கருத்து நிலைநாட்டப் படுகிறது. அமைச்சனின் பெருமையும் கடமையும் இந்தக் கதை யால் வெளிப்படுகிறது எனலாம்.

3.5.12. பகீரதன் கதையில் (6.8) பகை நாட்டரசன் என்ற வேற்றுமை கொள்ளக்கூடாது என்று உணர்த்துகிறார். தவ நிலையும் ஆட்சியின் பெருமையும் ஒருங்கிணைந்த ஒன்று எனக் காட்டியுள்ளார். பகீரதனுடைய ஆட்சியின் பெருமை காரணமாகக் கங்கை நீரைக் கொண்டு வந்தான் என்பதையும் மக்கள் கடைமைகளையும் விளக்கியுள்ளார்.

3.5.13. சிகித்துவன் கதையில் (6.9) சூடாலையும் சிகித்து வசனும் சீவன்முத்தி நிலையை அடைந்த பின்பும் அரசாட்சி செய்தார்கள் என்ற நிலை விளக்கப்பட்டுள்ளது.

3.5.14. இராமனுடைய முன்னோர் பெருமையைக் கூறு முக மாக இட்சுவாகு கதையைக் கூறியுள்ளார் (6 13).

3.5.15. மன்னன் எவ்வழி அவ்வழி குடிகள் என்று காட்டிய ஆசிரியர் மேலும் அரசனை இறைவனுக்குச் சமமாககாட்டுகிறார் (காதி: 10). திருவள்ளுவரும் 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறையென்று வைக்கப்படும்' (குறள். 388) என்கிறார்.

அவ்வாறே நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே'

(நாலா. தி.மி: 2454.1)

என்று குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

3.5.16 ஞானவாசிட்டத்தில் இராமனுக்குக் கூறுமுகமாக அரச நீதிகளும், அரசனுக்குரியகடமைகளும், அமைச்சருடைய நிலைகளும் விளக்கப்பட்டுள்ளன.

## 3.6. இல்வாழ்க்கை:

3.6.0. ஞானவாசிட்டத்தில் ஞானத்தை அடையும் வழிகளைப் பற்றிக் கூறினாலும் இராமன் திரும்பவும் இல்வாழ்க்கையில் ஈடுபட்டு அரசாட்சி செய்யவேண்டும் என்பதற்காக இல்வாழ்க்கையின் பெருமைகளையும் அதன் சிறப்புகளையும் கதைகளின் வாயிலாக ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார்.

3.6.1. வைராக்கியப் பிரகரணத்தில் இராமன் குடும்ப வாழ்க்கை துன்பம் என்றும் அதற்குக் காரணமாக இருப்பவை தனம், ஆயுள், அகங்காரம், மனம், ஆசை, தேகம், காலம் போன்றவை என்றும் கூறுவதை காணமுடிகிறது. மேலும் எல்லாம் பொய் என்றும் சுட்டிக்காட்டுகிறான். இதைக்கேட்ட விசுவாமித்திர் எல்லாம் தெரிந்திருந்தும் இராமனைப் பார்த்து, 'சூரா கலக்குறு பேதையர்க் குரித்தா மடஞ்செறி மோகக் கடலிற் கவிழேல்' (வைரா: 59.2) என்று கூறுகிறார். பின் இராமனின் நிலையை மாற்ற பல கதைகளைக் கூறி அவற்றுள் இல்வாழ்க்கையின் சிறப்பைக் கதைகளுள் கதையாகக் கூறியுள்ளார்.

3.6.1.1. சுகர் கதையில் (1.1), சனக அரசன் ஒரு சிறந்த ஞானி என்றும் அவன் இல்வாழ்க்கையில் ஈடுபட்டே ஆட்சி செய்தான் என்றும் காட்டியுள்ளார்.

3.6.1.2. லீலை கதையில் (3.2) இல்வாழ்வின் சிறப்புக்களைப் பின் வருமாறு கூறுகிறார்.

3.6.1.2.1. அந்தணனாகிய வசிட்டனும் அருந்ததியும் இல்வாழ்க்கையில் தன்முறையில் ஈடுபட்டதினால் மறு பிறப்பில் அரசகுலத்தில் பிறந்தார்கள்.

5.6 1.2.2. குலப்பெண்கள் தெய்வ வழிபாட்டினால் வேண்டிய செயல்களைச் செய்வார்கள். அதன் பயனையும் அடைவார்கள்.

3.6.1.2.3. கணவன் இறப்பதற்கு முன்னால் மனைவி இறந்தால் மனைவிக்குத் தற்பத வாழ்வு (நிர்வாண சுகமானது) கிடைக்கும் (லீலை: 3) என்பது விளக்கப்பட்டுள்ளது.

3.6.1.3. சிகித்துவசன் கதையில் (6.9) இல்வாழ்க்கையின் முக்கியத்துவம் விளக்கப்படுகிறது.

3.6.1.3.1. 'பதியொழிந்து கதியில்லை குலமகளிர்க்கு (சிகித்: 76.1) எனக் கணவனின் சிறப்பும், இல்வாழ்க்கையின் தேவையும் சூடாலை வாயிலாகக் வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

3.6.1.3.2. 'கணவர் நயந்தது விலக்கார் குலத்தின் மாதர்' (சிகித்: 69.2) எனக் கணவன் சொற்படி நடப்பது குலமகளின் கடமை என்று உணர்த்தப்படுகிறது.

3.6.1 3.3. 'நன்மனையிற் கணவரகன்றால் குடும்ப மெலி
வுறாமல் கெடாதளித்தல் குலமகளிர் விரதம்'
(சிகித்: 71.3.4)

எனக்கணவன் இல்லாத நேரங்களில் குடும்பத்தைக் காக்க வேண்டிய பொறுப்பு குலமகளுடையதாகும்.

3.6.1.3.4. 'சரையாலே யாக்கை நைந்தால் பசைந்த மாலற
வனமே போகலாம் இளமை நாட பான்மையன்றாம்'
(சிகித்: 70 2,3)

என இளமையில் இல்வாழ்க்கையில் எல்லா நலன்களையும் அனுபவிக்க வேண்டும் என்றும், இல்வாழ்க்கையில் சடுபட்டே சிவன் முத்தி நிலையை அடைய வேண்டும் என்றும் விளக்கியுள்ளார்.

3.6.1 3.5. முனிவர்களும் திருமணம் செய்து இல்லற நியமங்களைச் செய்யவேண்டும் என்று சூடாலை மூலம் அறிவுறுத்தியுள்ளார். இதனை, 'மனைவியாக விவாகத்தால் வரிப்பாய் நிசிக்கெப்போதும் எனை

இனைய தியற்றிற்றீங்கு நலம் இரண்டு மில்லையெனலோடும்
அனையவிருப்பே நன்றென்றான் அரசன்'

(சிகித்: 205. 1-3)

என்னும் அடிகள் தெளிவுறுத்துகின்றன.

3.6.2. மேலும் இந்தக்கருத்தை வலியுறுத்த முனிவர்களுக்குக் குழந்தைகள் உண்டு என்று பலகதைகள் மூலம் காட்டியுள்ளார்.

3.6.2.1. தாசூரன் கதையில் (4 4), தாசூரன் முதலில் தந்தைமறைவுக்கு வருத்தப்பட்டான் என்றும், பின்ஒரு வன தேவதையின் வேண்டுகோளுக்கிணங்க அவளுக்கு ஒரு குழந்தை கொடுத்தான் என்றும், அந்தமகனுக்கே அறிவுரை செய்தான் என்றும் கூறப்பட்டுள்ளது.

3.6.2 2 புண்ணியபாவனன் கதையில் (5.2), தீர்க்கத்துவன் என்ற முனிவனின் மக்களாகப் புண்ணியன் பாவனன் என்னும் இருவரையும் காட்டியுள்ளார்.

3.6 2.3. பாசவிபாசன் கதையில் (5.8), விபாசன் என்றும் பாசன் என்றும் இரு முனிவர்கள் சையம் என்கின்ற மலையில் வாழ்ந்தனர்; அவர்கள் தாய்தந்தையர் மறைவுக்கு வருந்தினார்கள் எனக்குறிப்பிட்டுள்ளார்.

3.6.3. ஞானவாசிட்டத்தில் இல்வாழ்க்கையின் தேவைகளையும், பயன்களையும் வலியுறுத்துவதைக் காணமுடிகிறது.

## 3.7. இல்வாழ்க்கையில் ஈடுபட்டேமுத்தி அடையும் நிலை;

சமய நூற்கள் பல நாட்டை விட்டுக்காட்டிற்குச் சென்று, எல்லாம் துறந்து தவவாழ்க்கை நடத்தினால்தான் முத்தி அடைய முடியும் என்று வலியுறுத்துகின்றன காட்டிலும் இல்லற வாழ்வு வாழ்ந்த முனிவர்கள் வரலாறும் காணப்படுகின்றன ஞானவாசிட்டத்தில் நாட்டிலிருந்தே கருமம் செய்து குடும்ப வாழ்க்கையில ஈடுபட்டு, அதில் மூழ்காமல் முத்தி அடையலாம் என்று சுகாகதை, பகீரதன்கதை, சகித்துவசன் கதை, தேவபூசை கதை, சுரகுகதை போன்றவற்றல் வலியுறுத்தப்பட்டுள்ளது.

3.7.1. சுகர்கதையில் (1.1), சனகர் நாட்டை ஆட்சிசெய்து கொண்டே எல்லாவற்றையும் தவநிலையினால் அறிந்து செய்த தாகச் சுகர்வாயிலாக அறிய முடிகிறது.

3.7.2. பகீரதன் கதையில் (6.8), பகீரதன் தன்னுடைய குரு திரிகூலன் அறிவுரையால் நாட்டைத்துறந்து காட்டில் சென்று தவம் மேற்கொள்கிறான். திரும்பவும் நாட்டில் வந்து பிச்சை எடுத்து வரும்போது அந்தநாட்டு அமைச்சர்கள் பலரின் வேண்டு கோட்கிணங்கி ஆட்சிசெய்கிறான். ஆட்சி செய்து கொண்டே தவநிலையிலிருந்து சமாதி அடைந்தான். தவநிலையினால் கங்கை நீரைக் கொணர்ந்தான் என ஆசிரியர் விளக்கியுள்ளார்.

3.7.3. சிகித்துவசன் கதையில் (6.9), சிகித்துவ அரசனும், சூடாலையும் சேர்ந்து ஆத்ம நூற்களைப் படிக்கின்றனர். மனம் ஒன்றுபட்டமையால் சூடாலை ஞான நிலையை (சீவன் முத்தி) அடைந்தாள். சிகித்துவசன் ஞான நிலையை அடையாததினால் காட்டிற்குச் சென்று தவவாழ்க்கை மேற்கொள்கிறான். அங்கு சூடாலை கும்பமுனி வேடத்தில் சென்று அறிவுறுத்திய பிறகு தான் அவன் முத்தி அடைகிறான். இந்தக்கதையாலும் வீட்டி லிருந்தாலும் முத்தி அடையலாம் என நிறுவியுள்ளார்.

3.7.4. தேவபூசை கதையில் (6.2), தன்னைத்தானே வணங்கினால் முத்தி அடையலாம் என்று விளக்கப்பட்டுள்ளது.

3.7.5. சுரகு கதையில் (5.7), மாண்டவியமுனியின் அறிவுரை யாலே சுரகு நாட்டிலிருந்தே பிரம்மபத நிலையை அடைந்தான். இல்லற வாழ்க்கையில் எந்தவித வெறுப்பும் இல்லாமலே, இந்த நிலையை அவன் அடைந்தான். என்கிறார் ஆசிரியர். சுரகுவைச் சோதிக்கும் பொருட்டு, சுரகுவின் நட்பு அரசன் பார்த்தீபனைச் சுட்டியுள்ளார். பார்த்தீபன் நாட்டிலிருந்து தவம் செய்ய முடியாமல் காட்டில் சென்று ஞானநிலை பெற்றவன். அவன் சுரகுவிடம் வந்து இப்பொழுது இந்தநாட்டைச் சம பார்வையில் ஆட்சி செய்கிறாயா? போன்ற பல கேள்விகளைக் கேட்டான். சுரகு அதற்குத்தான் பரம்பதத்தை அடைந்தமையால் எல்லாவற்றை யும் சமமாகப் பார்க்க முடிகிறது என்று கூறினான்.

3.7.6. இல்வாழ்க்கையில் ஈடுபட்டு அதில் மூழ்காமல் வாழ்ந் தால் முத்தி நிலையை அடையலாம் என்பதை மேற்குறிப்பிட்ட கருத்துகளால் அறியமுடிகிறது.

## 3.8. தெய்வம்

3.8.0. இந்துமதத்தில் கடவுளர் பலர் உளர். அவர்களுள் நான்முகன், திருமால், சிவன் முக்கிய மாணவர்கள். இவர்களை ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் நிலைகளில் கூறுவர். சக்தி வழிபாடும் இவர்களைப்போலச் சமநிலை பெறும் ஒன்றாகும். ஞான வாசிட்டத்தில் இந்தத் தெய்வங்களும் பிறதெய்வங்களும் காட்சி கொடுத்தது பற்றிய கதைகள் காணப்படுகின்றன.

3.8.1. தெய்வமும் காட்சி பெற்றவர்களும்:

| எண். | கதை எண் | தெய்வம் | காட்சியும் அருளும் பெற்றவர்கள் |
|---|---|---|---|
| 1 | 5(3.4) | சிவன் | இந்து என்ற அந்தணன் |
| 2 | 25(6.2) | ,, | வசிட்டர் |
| 3 | 31(6.8) | ,, | பகீரதன் |
| 4 | 35(6.12) | ,, | பிருங்கீசர் |
| 5 | 4 (3.3) | பிரம்மன் | கற்கடி என்ற அரக்கி |
| 6 | 36(6.13) | ,, | இட்சுவாகு மன்னன் |
| 7 | 11(4.2) | திருமால் | தேவர்கள் |
| 8 | 18(5.4) | ,, | பிரகலாதன் |
| 9 | 19(5.5) | ,, | காதிமுனி |
| 10 | 3(3.2) | சரஸ்வதி தேவி | லீலை; விடூரதன், அவன் பகையரசன் சிந்து |
| 11 | 13(4.4) | அக்கினி தேவன் | தாசூரன் |

3.8.2. பதினோர் இடங்களில் தெய்வங்கள் காட்சி கொடுத்தாகக் கதைகளில் காணப்படுகின்றன. அவை எல்லாம் முத்தி அடைவதற்குக் கருவிப் பொருட்களாகவே உள்ளன என்பதை ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார். தாங்கள் நினைத்த செயலை முடிப்பதற்கு இந்தத் தெய்வங்களைத் துணைக்கு அழைத்துள்ளனர் என்பதைக் கதைகளால் அறிய முடிகிறது. இதனால் தான் தேவபூசை கதையில் (6.2) இவர்கள் எல்லாம் தெய்வங்கள் அல்லர் 'உணர்வே தெய்வம்' (தேவ: 20.4) என வரையறுத்துக் கூறியுள்ளார் ஆசிரியர். பல தெய்வங்களை இந்நூலில் சுட்டிக் காட்டி இருப்பது, எந்த ஒரு தெய்வத்திற்கும் தனியான இடங்

கொடுக்காமல் அத்வைத கோட்பாட்டின் மூலமாகிய ஒரு பொருளே நிலையானது என்பதைக் காட்டவே எனலாம். எந்த ஒரு தெய்வத்தையும் தனித்த நிலையில் கூறாமையால் இதை ஒரு பொது நூல் என்றுகூடக் கூறலாம்.

### 3.9. மரணமின்மை (இயமன் அணுகாமை):

வாசனை முதலிய பற்றுகள் யாவையும் கெடுத்து ஆத்ம ஞானத்தைத் தரிசித்தவர்களை இயமன் அணுக மாட்டான் என்று ஞானவிண்மகன் கதை, புசுண்டன்கதை (74-77) போன்ற கதைகளில் விளக்கியுள்ளார்.

'கடினமான வெந்திரத்திற் கலந்ததிலம் பொன்றுவதென்னக்
கொடியமதனாற் றேய்தலுறாக் கொள்கையோரை
யமனணுகான்
முடிவிலா நின்மலமா முத்திப்பதத்தே சித்தத்தின்
நெடியதுயர் தீர்ந்திளைப்பாறு நிலைபெற்றோரை
யமனணுகான்' (புசு: 77)

மேலும் அசுத்தவாசனை, மனத்துன்பம், ஆசை, கோபம், லோபம், விவேகம், காமப்பற்று, பந்தம் முதலியவற்றை நீக்கின வர்களையும் மன அமைதி அடைந்த வரையும் மரணம் தொடராது என பல கதைகளின் மூலம் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

### 3.10. நிலையாமை:

3.10.1 நிலையாமை என்ற சொல் ஞானவாசிட்டத்தில் இடம் பெறவில்லை. ஆனால் அந்தப் பொருளைக் கொடுக்கக் கூடிய அசத்து (புண்:2), அநித்தம் (வைரா: 67), பொய் (வைரா 62, 125), மாயை (வைரா: 124) போன்ற சொற்களும் செய்தி களும் இடம் பெற்றுள்ளன. நிலையாமை பற்றிய செய்திகள் வைராக்கியப் பிரகரணத்தில் தெளிவாகக் காணப்படுகின்றன. அவை இராமனுடைய கூற்றாகவே அமைந்துள்ளன. மேலும் நூல் முழுவதும் இந்தக்கருத்து பரந்து காணப்படுகிறது. ஒவ்வொரு கதையிலும் பிரம்மத்தைத் தவிர மற்ற எல்லாம் நிலை யற்றவை என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது.

3.10.2. உலகம் நிலையற்றது என்பதையே அதிகமான கதை களில் குறிப்பிட்டுள்ளார். எனவே மற்ற எல்லாப் பொருளும் நிலையற்றவை என்பதை மறைமுகமாக ஆசிரியர் சுட்டிக் காட்டி

யுள்ளார் எனலாம். தெரிபொருளாகிய இந்த உலகமானது எப்போதும் உள்ளதுமன்று, பொய்யுமன்று, கனவின் கூட்டத்தைப்போல் தோன்றும் (விரத: 4) என்று குறிப்பிடுவதிலிருந்து உலகம் நிலையற்றது என்றால் மற்றவை எல்லாம் நிலையற்றது என்பதும் தெளிவாகிறது. மேலும், 'இவ்வுலகம் காந்தர்வநகரம் போலவும், கானற்சலம் போலவும் எள்ளளவும் இல்லை' (இட்சு: 12) என்றும் குறிப்பிட்டுயுள்ளார். மித்தையாபுருடன் கதையிலும் (6 11), இட்சு வாகு கதையிலும் (6, 13) இந்தச் செய்தி விளக்கமாகக் காணப்படுகிறது.

3.10.3. மேலும் ஆசிரியர்,

'அனித்தம் இச்சகம்' (புண்: 2.1)
'சகமெல்லாம நீள் கனவாம்' (லீலை: 68.1)

'உலகமெல்லாம் கண்ணாடியில் தெரிகின்ற நிழலைப் போலாகும்' (சுக்: 22.3) என உலகைப் பற்றிக் கூறியுள்ளார்.

3.10.4. யாக்கை நிலையாமைப் பற்றிக் கூறவந்த ஆசிரியர், இராமன் வாயிலாக உடல் பருவத்தைப் பல நிலைகளாகப் பிரித்துக்கூறி அவையும் நிலையற்றவை எனத்தெளிவு படுத்தியுள்ளார். வைராக்கியப் பிரகரணத்தில் தேகம், பாலியம், எவ்வனம், வார்த்தீகம், ஆயுள், மகளிர் போன்ற நிலைகளாகப் பிரித்துக் கூறி அவையாவும் நிலையற்றவை எனக் காட்டியுள்ளார்.

3.10.5. செல்வமும் நிலையில்லாதது என்று ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

'திருவெனுஞ் சூறைக்காற்றாற் பனிபோலச் சிதறாதோர்' (வைரா: 65.2)
'நாகஞ்சூழ் குழிவல்லி நன்போற் செல்வம்' (வைரா: 66.2)

3.10.6. நிலையாமையைப் பற்றி இவ்வாறு பல கதைகள் மூலம் வலியுறுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது. பிரம்மம் ஒன்றே நிலையானது, மற்ற எல்லாம் நிலையற்றவை என்பதை வலியுறுத்துவதற்காக வேண்டி ஆசிரியர் நிலையாமைக் கருத்தை நூலில் கையாண்டிருக்கலாம் என்பது தெளிவாகிறது.

### 3.11. அறிவுரை:

3.11.0. அறிவுரை என்பதற்கு போதனை, கடவுளின் தன்மையைக் கூறுதல், நல்லறிவு கூறுதல், போதித்தல் எனப்பல

பொருள்கள் கொள்வர். ஞானவாசிட்டத்தில் மேற்குறிப்பிட்ட பொருள்களை அடியொற்றியே அறிவுறுத்தல் அமைந்துள்ளது. ஆனாலும் நூலினுள் யாருக்கு அறிவுறுத்த வேண்டும் என்றும், யாருக்கு அறிவுறுத்தக் கூடாது என்றும் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

3.11.1. பக்குவம் இல்லாத (குன்றிய) காலத்தில் எவ்வித உண்மையைப் போதித்தாலும் அவர்களுக்குப் புரியாது. பக்குவம் அடைந்தபிறகு தான் அறிவுறுத்தல்வேண்டும் என்பதையும், அறிவுரை செய்வதற்குத்தக்க உயர்வு தாழ்வு நிலை வேண்டும் என்பதையும் சிகித்துவசன் கதையால் ஆசிரியர் விளக்கியுள்ளார். பக்குவம் இல்லாத காரணத்தால் சிகித்துவ அரசனுக்குச் சூடாலை எவ்வளவு கூறியும் கேட்காமல் காட்டிற்குச் சென்றான். அதனால் சூடாலை, அவன் இன்னும் பக்குவம் அடையவில்லை என நினைத்தாள். பதினான்கு ஆண்டுகள் சென்றபின்பு அவன் இருந்த காட்டிற்குச் சென்று அறிவுரைசெய்தாள் (சிகித்:79). அப்பொழுது தான் சூடாலை என்ற கும்பமுனி கூறிய எல்லாவற்றையும் அரசன் கேட்டான். அறிவுறுத்தும் காலம் எது என ஆசிரியர் சூடாலையின் மூலம் சிகித்துவசனுக்கு,

'பிதாமகனொப் பாயென்ற மன்னனுக்குக் கும்பன்றான் பேசுகிற்பான்
கதாவியெழு மனமொருப்பட் டுணர்தியேல் உனக்குண்மை கழறுகிற்பேன்'
(சகித்: 100:3.4)

என குறிப்பிட்டுள்ளார்.

3.11.2. அறிவுறுத்துவதற்குரிய உயர்வு தாழ்வு நிலை வேண்டும் என்பதை வைராக்கியப் பிரகரணத்தில் ஆசிரியர் சுட்டிக்காட்டியுள்ளார். இராமனை அழைத்து வரும்படி விசுவாமித்திரர் பணியாளர்களிடம் கூறியவுடன், இராமனை அவர்கள் அழைத்து வந்தனர். இராமன் அரசவைக்குவந்து தசரதன், வசிட்டர், விசுவாமித்திரர், அந்தணர்கள், குருக்கள் போன்றோர்கள் பாதங்களை வணங்கினான். உடனே தசரதன் இராமனைப் பார்த்து, 'மடியிசை வந்திருத்தியென' (வைரா: 57.1) அழைத்தான். ஆனால் இராமன் அரசன் கூற்றுக்கு எதுவும் கூறாமல்,

'மன்னுரைப்ப வாராது மடித்த தூசைப் படிமிசை இட்டிருந்தான்' (வைரா: 57.2). இந்தநிலை அவன் பின்னால் கேட்கப் போகும் அறிவுரைக்கும், அதைக் கேட்பதற்கும் உரிய பக்குவம் அடைந்து விட்டதாக அமைந்துள்ளது.

அறிவுரை கேட்பதற்கு உயர்வு தாழ்வு வேண்டும் என்று ஆசிரியர் சுட்டிக் காட்டியுள்ளார் எனலாம்.

3.11.3. அறிவுரை கேட்பதற்கு வயது, காலம், இடம் எதுவும் வரையறுக்கப்பட்ட ஒன்று அல்ல என்பதை ஞானவாசிட்ட கதைகளால் அறியமுடிகிறது.

### 3.11.4. பக்குவிக்கு அறிவுரை செயல்வேண்டும் எனல்:

பக்குவம் அடைந்தவர்களுக்கே அறிவுறுத்த வேண்டும் என்று சிகித்துவசன் கதை (6.9) தேவபூசை கதை (6.2) போன்ற கதைகளின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

'பரமணர்ந்த விவேகியர்க்குப் பரமவுபதேசம் பகர்வர்'
(தேவ: 65.1.)

பிரம்மத்தை அறிய விவேகத்தை உடையவர்களுக்கு மட்டுமே பிரம்ம அறிவுரை செய்வார்கள். திறமின்றிப் பிரமை யிறங்கினவர்களுக்குக் அறிவுரை செய்ய எண்ண மாட்டார்கள். கூறினால் அது கனவில் கண்ட மனிதனை நனவிலுள்ள கன்னிகைக்குக் கணவனாகச் செய்கின்ற ஏற்பாடாக அமையும் என்பர்.

............ "காதறீர் மாணாக்கன் கருத்திற் சொல்லுஞ்
செல்வவுபதேசமே ததுவேஞானச் செழுநூலின் பொருளுமிது
சிறப்புமீதே" (சுகர்: 28.3,4)

என ஆசை நீங்கியவர்களுக்கும், இராமனைப் போல வைராக்கிய நிலையில் இருப்பவர்களுக்கும் தான் அறிவுரை செய்ய வேண்டும் என்று நூல் எடுத்துரைத்துள்ளது.

### 3.11.5. அபக்குவிக்கு அறிவுறுத்தக் கூடாது எனல்:

உலக நாமத்தைப் பெற்றிருக்கின்ற வாதனையானது கெடுமானால் மன அமைதி உண்டாகும். அகம்பாவத்திலும், இவ்வுலகத்திலும் கானல் நீரிலும் உயர்வான நிச்சயம் உடையவர்கள் அறிவுரை கேட்கத்தகாதவர்களாவார். அவர்களை உண்மையை அறிந்த அறிஞர்கள் மிகப்பாவிகளாகப் பார்ப்பார்கள். சைசைசயென்று இதழ்வார்கள் (தேவ: 64).

'சூத்திரர்க்கு யாகநெறி நவில் வாருண்டோ' (சிகித்: 62.2)
'காதல்செறி பொல்லாமாணாக்கனுக்குக் கற்பித்த வுபதேசங் கருநாய்த் தோலுண்ட
மேதகுபாலெனவசுத்த மேவுமென்று' (சுகர்: 24.1,2) என ஆசைமிகுந்த பொல்லாத மாணாக்கனுக்கு அறிவுரைக் கூறக் கூடாது என்பது மரபு முறைக் கருத்து என அறிய முடிகின்றது. இதை நன்னூலிலும் காணலாம்.

### 3./2. பொதுச் செய்திகள்;

3.12 0 புசுண்டன் கதையில் (6.1) வசிட்டர் புசுண்ட யோகி இருவரும் உரையாடும் போது பல செய்திகள் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. அவற்றுள் புராணச் செய்திகளே அதிகமாக உள்ளன. மற்றகதைப் பகுதிகளில் உவமைகள் வாயிலாகப் பல செய்திகளைக் குறிப்பிட்டுச் செல்வதையும் காணமுடிகிறது.

3.12 1. திருமாலைப் பற்றியப் பல செய்திகள் புசுண்டன் வாயிலாக அறியமுடிகிறது.

3 12.1.1 இரணியாட்சிசனால் திருடிக்கொண்டு போன பூமியை திருமால் வராக அவதாரம் எடுத்துதிருப்பிக் கொண்டுவந்தார் (புசுண்: 63).

8.12 1 2. மேகவண்ணத்தை யொத்த திருமாலானவர் இரேணுகையிடத்தில் ஆறுதரம் பரசுராமனாகப் பிறந்தார் (புசுன்: 67).

3.12.1.3. திருமால் திரும்பவும் நூறுகலியுகத்தில் புத்தாவதாரம் செய்தார் (தேவ:67).

3.12.1.4. அரக்கர்கள் கெடும்படியாகப் பதினோராரமவதாரத்தில் இராமன் என்று காக்கின்ற திருமாலானவர் இந்தப் படைப்புக் காலத்தில் பூமியிலுண்டானார்.

3.12.1.5. கூர்ம அவதாரம் பன்னிரண்டு தடவை எடுத்தார் (புசுண்:66).

3.12.2. பல பிறப்புகளைக் கூறி வசிட்டருடைய பிறப்பைக் கூறுகிறார். வசிட்டர் இப்பொழுது எடுத்திருப்பது எட்டாவது பிறப்பு ஆகும் (புசுண்:66).

3.12.3. யுகங்கள் தோறும் அமலராமாயணம் என்கின்ற பெயருடையதாய் இலட்சம் கிரந்தத்தில் ஞானநூல் தோன்றும் (புசுண்:69).

3.12.4. ஞானராமாயணம்-இதனை நல்வான்மீகி நவின்றதுபோல
ஆனபிறரும் பன்னிருகால மைத்தார்புல கால்அழிதலினால்
ஈனமில்லா விதற்கிணையாய் இரண்டாவது பாரதமனை
மானவியாதள் செய்தது முன் மறைய மற்றோர்களு
முரைத்தார்' (புசுண்:70)

எனப்பாரத நூலுக்கு இணையாக ஞானவாசிட்டத்தைக் கூறியுள்ளார்.

3.12.5. நான்கு யுகங்களைக் பற்றியசெய்தி காணமுடிகிறது (புசுண்:62).

3.12.6. பிராமணர், மகளிர் ஆகியோர்கள் யுகம் தோறும் செய்த செயல்களை விளக்கியுள்ளார் (புசுண்:62).

3.12.7. அகத்தியர் (புசுண்:62), நாரதர், பரத்துவாசர், முருகன், விநாயகர் (புசுண்:64) போன்றவர்களைப் பற்றியும் செய்தியுள்ளது.

3.12.8. கடலில் அமுதம் எடுக்கப் பன்னிரண்டு தடவை கடைந்தனர் (புசுண்:66)

3.12.9. 'குகன் போதித்த சிவஞானம்' (புசுண்:37.1).

3.13. இவை போன்ற பலசெய்திகள் கதையோடு கதையாக ஆசிரியர் வெளிப்படுத்திருப்பது அவரது தனித்தன்மையை வெளிப்படுத்துகிறது எனலாம்.

### 3.14. முடிவுகள்:

1. நான்கு வகை யோகத்தைப் பற்றி விளக்கினாலும் ஞானத்துக்கே முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

2. வீடுபேற்றை அடைவதற்கு முதலில் அதற்குரிய வைராக்கியநிலை ஏற்படவேண்டும்.

3. அறிவுறுத்தல் பக்குவப் பட்டவர்களுக்கே செய்தல் வேண்டும்.

4. மனப்புக்குவத்திற்குப் பத்தி, வழிபாடு, தியானம் முதலியவை தேவை.

5. இல்வாழ்க்கையில் இருந்தும், அரசு வாழ்க்கையில் ஈடுபட்டும் முத்தியடையலாம். அதிகமான கதைகளில் இல்வாழ்க்கை முத்தியே எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

6. பிரம்மம், மாயை, உலகம் எல்லாம் அவனுவர் தங்கற்பத்தால் (எண்ணத்தால்) தோன்றுபவை.

7. புசுண்டன் கதையில் புராணக் கருத்துகளையும் அதனோடு தொடர்புடைய பல செய்திகளையும் புசுண்டான் வழியாகக் கூற வைத்திருப்பது நூலாசிரியரின் தனித் திறமையாகும்.

8. ஆசனங்களின் பலநிலைகளைக் குறிப்பிட்டிருந்தாலும் பத்மாசனமே அதிகமாக காணப்படுகிறது.

9. அரச பரம்பரையே அரசாட்சிக்குரியது என வலியுறுத்தப் பட்டுள்ளது.

10. பெண்களும் அரசாட்சி செய்யலாம் என்ற கருத்தும் உள்ளது.

11. வாழ்க்கையின் எல்லா நிலைகளும் நூலினுள் படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளன.

12. பல இனத்தவரையும், பல மதத்தவரையும், பலகுலத்தவரையும், பல தெய்வங்களையும் குறிப்பிட்டிருப்பதால் இது ஒரு பொது நூல் எனலாம்.

---

அடிக்குறிப்பு:

1 அபிதான சிந்தாமணி, ப.247

# 4. ஞானவாசிட்டத்தில் தத்துவங்கள்

40. ஞானவாசிட்டத்தில் தத்துவங்கள் என்ற இந்த இயலில் தத்துவத்தின் விளக்கம், அத்வைதத்தின் சிறப்புகள், அத்வைதக் கருத்துகள் ஞானவாசிட்டத்தில் அமைந்திருக்கும் பாங்கு, அதனை எவ்வாறு ஆசிரியர் வளர்த்துச் சென்றுள்ளார் என்ற முறை போன்றவை விளக்கப்பட்டுள்ளன.

4.0.1. தத்துவம் என்னும் சொல் உண்மைப் பொருள் என்பதைக் குறிக்கும் உண்மைப் பொருளிலிருந்து உண்டாகும் காரியங்களிலும் உண்மைப் பொருள் நிறைந்து நிற்கிறது. இதனால் அந்தக் காரியங்களையும் தத்துவம் என்று அழைக்கிறார்கள். (தக் = அது; துவம் = நிலைபேறு; தத்துவம் = அது நிலைபேறு உடையது)[1] உண்மையைத் தேடி அறிவது தான் அறிவின் பயன் ஆகும். இந்த உண்மையை பூரண வடிவில் அடைய முற்படுவது தான் தத்துவத்தின் குறிக்கோளாகும்[2].

4.0.2. தத்துவம் என்னும் சொல்லுக்கு அறிவு என்றும் பொருளுண்டு. சென்னைப் பல்கலைக்கழகத்தில் தத்துவம் என்னும் சொல்லுக்கு மெய்யுணர்வு என்ற சொல்லைப் பயன்படுத்துகின்றனர். மெய்யுணர்வு என்ற சொல்லுக்கு உண்மை அறிதல், நல்லறிவு என்ற பொருள்களும் உள்ளன. தத்துவம் என்பதை உண்மையை அறிதல் என்று குறிப்பிடுவதே பொருத்தமாகும். இந்தக் கருத்தை அடியொற்றியே ஆசிரியர்கள் நூற்களில் உண்மையைத் தேடும் கருத்துகளைக் கதையுள் கதையாக அமைத்திருப்பதைப் பார்க்கலாம்.

4.0.3. ஞானத்தின் மேல் உள்ள பற்றே தத்துவ ஞானம் எனப்படும். மனிதன் ஒரு தத்துவப் பிராணி. முடிவான பொருள்களைப் பற்றி அவனால் ஆராயாமல் இருக்க இயலாது. 'இருத்தலின்' அடிப்படை எவ்வாறு உள்ளது; அது தனி இயல் தன்மை உடையதா; அல்லது தனி இயல் தன்மையற்றதா; அதனைப் பரம் பொருள் என்று வழங்க வேண்டுமா அல்லது இறைவன் என்று வழங்க வேண்டுமா; இந்த உலகத்திற்கு மூலாதாரம் என்று ஏதாவது உண்டா; சடம், உயிர், ஆன்மா ஆகிய மூன்றனுள் எது முதன்மையானது; உலகம் உண்டாவதற்குக்

காரணமாயுள்ள பொருட்கள் எவை;ஆன்மா என்னும் ஒன்று உள்ளதா; உள்ளதாயின் அதன் முக்கியத் தன்மை என்ன; அது எங்கிருந்து தோன்றிற்று; எங்குச் சென்று ஒடுங்கும் இவை போன்ற எண்ணங்கள் மனித மனத்தைக் குழப்புகின்றன. இந்தச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் முயற்சியே தத்துவம் ஆகும்[3]. இந்தக் கேள்விகளை ஞானவாசிட்டம் விளக்கிக் காட்டுகிறது. இத்தகையை அடிப்படைக் கேள்விகளுக்குத் தொடர்பான கோட்பாடுகளை அமைக்கும் பொழுது தான் பல்வேறு தத்துவ முறைகள் தோன்றுகின்றன. செய்திகளைப் புரிந்து கொள்வதில் ஆராய்ச்சி செய்பவர்களின் திறமைகள் வேறுபடுவது போல் தத்துவ முறைகளும் வேறுபடுகின்றன. ஆனால் இந்த வேறுபாடுகளுக்கு அடியில் சத்தியம் என்ற ஓர் ஒற்றுமை இழையோடி நிற்பதைச் காணலாம்[4].

4.0.4. இந்திய தத்துவ முறைகளை இரு பிரிவாகக் காண் பார். ஒன்று ஆத்திகம்; மற்றது நாத்திகம். ஆத்திகன் இறப்புக் குப்பின் வாழ்க்கை உண்டு. இறைவன் உண்டு என்று நம்பு கிறவன்; வேதத்தில் நம்பிக்கைக்கு நம்பிக்கை உள்ளவன். நாத்திகன் இதற்கு எதிர்மாறானவன். நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், மீமாம்சை, வேதந்தம் என்பவை ஆத்திகப் பிரிவைச் சார்ந்தவை. சாருவாகம், பௌத்தம், சமணம் என்பவை நாத்திகப் பிரிவைச் சார்ந்தவை. ஆத்திகத் தத்துவப் பிரிவுகளில் ஒன்றான வேதாந்தத்தில் காணப்படும் சில கருத்துக் கள் ஞானவாசிட்டத்தில் விளக்கப்பட்டுள்ளன. வேதத்தின் பிற்பகுதியாகிய உபநிடதம் வேதாந்தம் எனப்படுகிறது.

4.0 5. அத்வைதமும், விசிட்டாத்வைதமும், துவிதமும் வேதாந்தத்தின் மூன்று முக்கியப் பிரிவுகளாகும். உலகம் எவ் விடங்களில் எப்படி எப்படித் தோன்றுகின்றதோ, அப்படி அப்படித் தானே விளங்குகின்ற படியால் உலகம் காரியமாகாது; அதனால் பிரம்மம் 'காரண'மாகாது. இந்தக் காரியகாரண 'மின் மையினால் துவிதமும்; காரணத்துட் காரியம் வேறுபடாமல் அபேதமாயிருத்தலின் விசிட்டாத்வைதமும், தானே எல்லாமாய் விளங்குதலினால் அத்வைதமே எல்லாமாயிருக்கும் என்பர் (ஞான:4).

4.0 6. வேதாந்த மதம் என்பது இந்து மதத்தின் மறு பெயராகும். அனுமன் இராமனிடம் 'என்னை உடலாக நினைக்' கும் போது உனக்குத் தாசன்; என்னை உயிராக நினைக்கும் போது நான் உன் அம்சம்; என்னை ஆன்மாவாக நினைக்கும் போது நீயும் நானும் ஒன்றே' என்று கூறியதில் வேதாந்தத்திற் குரிய மூவகைப்பட்ட அனுபவ அறிவுகளும் வெளியிடப் பட்டுள்ளன. வேதாந்தம் உலக மக்களின் தனி வாழ்க்கையையும், சமூக வாழ்க்கையையும் முத்தியடைவதற்கு ஏற்ற நெறியில் அமைக்கவல்லது. ஆதலின் சாந்தியையும், அன்பையும், இன்பத்தையும், சமத்துவத்தையும், சமரசத்தையும் பரப்புவதில் வேதாந்தத்திற்கு இணையான தரிசனம் உலகில் வேறு இல்லை என்பர்[5].

4.0.7. வேதாந்தத்தின் ஒரு பிரிவாகிய அத்வைதத்தின் கருத்து களை அடியொற்றி எழுந்த நூல் ஞானவாசிட்டம். இந்த நூலில் காணப்படும் அத்வைதக் கருத்துகளே இங்கு ஆய்வு செய்யப்படுகின்றன. மதத்தைப் பற்றிய ஆராய்ச்சி எதுவும் இந்தப் பகுதியில் மேற்கொள்ளப்பட வில்லை.

4.0.8. அத்வைதம் என்னும் தத்துவ முறைமை வேதாந்த முறைமைகளுள் மிகச் சிறந்தது. 'பிரம்மம்' என்றும் 'ஆத்துமன்' என்றும் சொல்லபடுகிற சார்பற்ற 'பரம்பொருளே' உண்மையான பொருளாகும் என அத்வைதம் கூறுகிறது. இறை, ஆன்மா பற்றிய ஒருமைக் கொள்கையே அத்வைதத்தின் அடிப்படையாகும். சங்கரர், 'பிரம்மம் உண்மையான பொருள், இந்த உலகம் ஒரு தோற்றமே; ஒவ்வோர் ஆன்மாவும் பிரம்மம்தான் வேறொன்று மில்லை, என்கிறார். பிரம்மத்தின் இருமையற்ற உலகத்தின் மாயா நிலை, பிரம்மத்திலிருந்து ஆன்மா வேறுபடாத நிலை இவையே அத்வைதம் போதிக்கும் உண்மைகள்[6]. வேதந்தத்தின் பொற் காலத்தைத் தொடங்கி வைத்தவர் சங்கரரே. பிற்காலத் தத்துவ சிந்தனைக்கு வழி அமைத்துக் கொடுத்தவரும் அவரே. சீவன் முத்தியைப் பற்றிக் கூறும் போது இந்தப் பிறவியிலேயே வீடு பேறு அடையும் நிலையைச் சங்கரர் விளக்கியுள்ளார். ஞான வாசிட்டத்தில், சீவன்முத்தர்களைப்பற்றியும், அந்த நிலையை அடைந்தவர் பேறும், அதற்குரிய வழிமுறைகளைப் பற்றிய கருத்துகளும் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

4.0.9. அத்வைத முறைப்படி ஆன்மா அறிவுமயமானது. ஆன்மா தன்னை அறிதல் தான் முழு அறிவு நிலையாகும். (சின்மாத்திரம்). எல்லா அனுபவ அறிவிலும், தன்னை அறிந்திருத்தலோடு மனமும் இயங்க வேண்டிய அவசியம் கூறப்படுகிறது. மனமும் அதன் வடிவங்களும் உயிர்ப்பற்றவை, அறிவற்றவை. அறிவுமயமான ஆன்மாவின் ஒளியைப் பெற்றே மனம் பொருள்களைத் தெரிந்து வெளியிடுகிறது. அனுபவ அறிவே உண்மையில் அவித்தையின் ஒரு வடிவமான மாயையாகும். அவித்தை உண்மையை மறைக்கும்; பொய்ம்மையை வெளிக் காட்டும். அத்வைதத்தின் முக்கிய போதனை 'ஆன்மாவே பிரம்மம்' என்பது. பிரம்மத்தில் இருந்து தான் எல்லாப் பொருட்களும் தோன்றுகின்றன; பிரம்மத்தின் முடிவில் தான் அவை ஒடுங்குகின்றன. இந்தக் கருத்துகள் 'எல்லாம் பிரம்மமே' (வீத:76,76; கற்:17; வேத:51) என்று வலியுறுத்துவனவாகும். இவ்வாறு உலகோடு உள்ள தொடர்பு காரணமாகப் பிரம்மமானது கடவுள் என்று வழங்கப்படுகிறது. அறிவுள்ள பொருட்களான உலகமும், அறிவற்ற சடப்பொருள்களும் கடவுளின் இயல்புகளே யாகும்.

4.0.10. வீடுபேறடைவதற்கு ஒரே நேர் வழி ஞானம் (அறிவு) என்பதை அத்வைதம் கூறுகின்றது. வீடுபேறு அடைதல் என்பது புதிதாக வேண்டிய ஒன்றன்று. அஃது ஆன்மாவின் என்றுமுள்ள இயல்பான தன்மையே ஆகும். இந்தப் பேருண்மையைத் தெரிந்து கொள்ளாமல் இருப்பதற்குக் காரணம் அறியாமையே. ஒவ்வொருவரும் செய்ய வேண்டுவதெல்லாம் இந்த அறியாமையைக் களைதலேயாகும். இதைச் செய்யக் கூடியது 'அறிவு' ஒன்றே. 'ஞானவாசிட்டம்' எனும் பெயரின் முதல் பகுதியே ஞானம் என்ற சொல் ஆகும். ஞானத்தைப் பற்றி விளக்குவதே ஞானவாசிட்டம். எனவே அத்வைதத்தின் முக்கிய கருத்து இந்த நூலில் முழுமை பெற்றுள்ளது என்பதில் ஐயமில்லை. ஞானம் உதயமானவுடன் ஆன்மா உடலில் குடிபுகுந்திருக்கும் நிலையில் கூட ஒருவன் வீடு பேறடைய முடியும். அப்படிப் பட்டவனே சீவன் முத்தன் என்று வழங்கப்படுகின்றான்.

4.0.11. இது போன்ற அத்வைதக் கொள்கைகளான பிரம்மம், ஞானம், மனம், சீவன்முத்தன், ஆன்மா, சங்கற்பம்,

குண்டலினிசக்தி, வாசனை, பந்தம், ஆசை, அகங்காரம், மாயை, உலகம், முயற்சி, வழிபாடு, அத்வைதநிலை (வீடு) போன்றன ஞானவாசிட்டத்தில் இடம் பெறும் திறன் இவண் ஆய்வு செய்யப்படுகின்றன.

### 4.1. பிரம்மம்:

உண்மை அறிவின்ப வடிவாய் உலக முழுதும் தோன்றி ஒடுங்குதற்கு இடமாயுள்ள பொருளாகிய கடவுளைத் தான் பிரம்மம் என்று ஞானிகள் கூறுவர்[7]. பிரம்மம் எப்படி உண்டாயிற்று என்னும் கேள்விக்கு இடமில்லை. அது உண்டாக்கப்பட்ட பொருள் அன்று, எப்போதும் நிலையாய் உள்ளது.

### 4.1.1. பிரம்மம் எப்படிப்பட்டது:

பிரம்மம் என்பதன் வார்த்தைகளால் விவரிக்க இயலாது. கடலைப் பார்த்திராத ஒருவனுக்கு அது இப்படிப் பட்டது என்று சொல்லும்படி வேறு ஒருவனிடம் கூறினால், அவன் அது ஒரு பெரிய நீர்ப்பரப்பு; எங்கு பார்த்தாலும் நீர்தான் என்று மட்டுமே சொல்லக் கூடும். அது போன்று தான் பிரம்மத்தையும் விளக்க இயலும்[8]. பிரம்மம் அத்வைதப் பொருள். பிரம்மம் உலகத்தை ஆளும் இறைவன் என்றும் அதனை வழிபட்டு அதற்கும் தனக்கும் உள்ள தொடர்பை ஆராய்ச்சியால் உணர்ந்து மனிதன் மேல் நிலைக்கு வரவேண்டும் என்றும் புகட்டியவர் சங்கரர். பிரம்மம் கால, தேச, நிமித்தத்தின் வாயிலாக வந்து உலகம் என்பதாயிற்று என்பர். இதுவே அத்வைத வேதாந்தத்தின் மூலக் கோட்பாடாகும்[9]. பிரம்மம் பகுக்க ஒண்ணாதது; அதற்கு அயலாக எதுவுமில்லை. பிரம்மத்தை வரையறை செய்தல் என்பது அதனைப் புறப்பொருளாகக் கருதுவதாகும் அஃது இரண்டு அற்றது. அனுபவ உலகன் சொற்களால் இன்னது என வரையறை செயவது அருமை ஆதலால, பிரம்மத்தைக் கருத்து இயலில் மட்டும் அமைவது என்றோ வெறுமை என்றோ கொள்வதற்கில்லை என்பார்[10].

எதைப் பார்த்த பிறகு பார்க்க வேண்டிய பொருள் எதுவும் இல்லையோ; எந்த நிலையை அடைந்த பிறகு மறுபிறப்பு இல்லையோ; எதை அறிந்த பிறகு அறிய வேண்டியது எதுவும்

இல்லையோ; அதைப் பிரம்மம் என உறுதியாக உணர்ந்து கொள்ள வேண்டும்[11]. பிரம்மம் சலனமற்று, குணமற்று, நிலைத் திருப்பது. ஞான அஞ்ஞானம், நன்மை தீமை; தர்மம் அதர்மம் இப்படிப் பட்ட துவந்தங்களுக்கு அப்பாலும் இருக்கிறது[12].

உபநிடதங்களில் கூறப்படும் தத்துவப் பொருள்களுக்கெல் லாம் ஆணிவேராக உள்ளவை பிரம்மமும் ஆன்மாவுமாகும். அதை உபநிடதங்கள் பிரபஞ்சத்தில் ஆதிமூலத்துவம் எனக் கூறுகின்றன. பிரம்மத்தின் பண்பைக் கூறும் பொழுது அதைச் சத்து என்றும் அசத்து என்றும் கூறுவதில்லை. சித்தும் ஆனந்தமும் சேர்ந்த ஒன்று என்றே கூறுகிறார்கள். பிரம்மம் என்னும் சொல் ரிக் வேதத்தில் இருநூறு இடங்களுக்கு மேலாகக் காணப்படுகின்றது. இந்தச் சொல்லின் வேர் 'பிர்' என்பர். ஆயினும் இதையும், இதன் முற்பொருளையும் பற்றி அறிஞர் களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன என டாக்டர் எச்.ஜீ. நரஹரி குறிப்பிடுகிறார்[13]. ஞானவாசிட்டத் திலும் பிரம்மம் என்ற சொல் பல இடங்களில் வருகின்றன பிரம்மத்தைப் பற்றிய கருத்துகள் ஞானவாசிட்டத்தில் காணக் கிடக்கின்றன. பிரம்மப் பொருளின் இலக்கணம், வடிவம், எல்லாம் பிரம்மமே எனும் நிலை, பிரம்மத்தை அடையும் வழி, துரிய நிலை எனப் பலப்பகுதிகளாக ஞானவாசிட்டம் அதனை விளக்குகின்றது.

### 4.1.2 பிரம்மம் பொருளின் இலக்கணம்:

பிரம்மப் பொருளை, 'எவ்வகை மூலங்களுக்கு மூலமாம் பிரமமே யிலங்கா நிற்கும்' (ஞான:41.3) என மூலப் பொருள் பிரம்மம் என்கிறது ஞானவாசிட்டம். ஆசைகளை உருவாக்கு கின்ற மனத்தொழிலை மாறறி அகங்க ராத்மாவைக் கெடுத்தல் நாமம் அற்ற பிரம்மப் பொருளாகும்.

'முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டுயிலதுவா மும்மையாகி
யடர்தருஞாதுருஞான ஞேயமெழுந்து ஒடுங்குமிடம் அதுவேயாகுந்
திட விசும்பன் றாயிருந்தும் விசும்பான நிலையதுவாஞ் சிததம்புததி
படர்மனம்போய்த் தாவரம்போற் பெருமுளறி வொப்பா மப் பரமரூபம்' (ஞான:43)

இவ்வாறு அறிதுயிலும், திரிபுடியினாதாரமும், ஞானக்காசமும், அந்தக்கரண ஞானமின்றி சுழுத்தி ஞானமுள்ள தாவர அறிவும் பிரம்ம ஞானத்துக்கு உவமானமாக ஆசிரியரால் கூறப்பட்டுள்ளன.

### 4.1.3. பிரம்மவடிவம்:-

காணப்படுகின்ற எல்லாப் பொருட்களும் பிரம்மத்தின் வடிவமே அன்றி வேறொன்றில்லை என்றும், ஆதியந்தமில்லாமல் ஏகமானவடிவமே பிரம்மவடிவம் என்றும், வடிவமில்லாதது என்றும் விளக்கியுள்ளார்.

> 'மங்காமலடி முடிவுற்றொன்றாய வடிவுபர வடிவமாகும்'
> (அரு ச:17.2)
>
> 'பரமே பரமாணு' (வேதா:24.1)
>
> 'இலகுங்கதலி யுள்ளுள்ளே யிலையேயாகு மியல்பென்ன
> அலகிலாத வுள்ளுள்ளே யானபோது மப்பிரமம்'
> (வேதா: 23.3,4)

இவ்வாறு நூலில் விளக்கப்பட்டுள்ளது.

மாறுபாடு அற்று, எல்லாம் உள்ளது போன்று பேர்அறிவாய் ஆகாயமாகி, நிலைபெற்றிருப்பது பிரம்ம வடிவம் ஒன்றே. அழிவற்றதாகியும், அறியப்படத்தக்கதற்கு அயலாகியும் இருக்கும் பொருளாகி, ஒன்றாகியும், உண்மையுமாகியும் ஒளிவிடும் அந்த வடிவு எங்கும் நிறைந்திருக்கும். தோன்றாமல் துன்பமாகியும், பொய்யாய்த் தோன்றும்படியும் செய்கின்ற மாயையானது உண்டாகாமல் இருக்கவும் செய்யும்.

> 'பரமமே யெங்கும் என்றும் உண்டாகும் பயின் மன்னத்
> தின்ரன் மனமாம்' (பாலன்: 3.1)
>
> 'இவையெனும் அனைத்துஞ் சிற்கனமாகி இறப்பிலாப்
> பிரமமே' (உற்:21.1)
>
> 'நித்தமுறும் உதயமுளது ஆதியாகுவதந்த நிமலம் ஏகம்
> அத்தவ்வய பிரமமே யுளது' (விரத:17.1, )

இவ்வாறு பிரம்மத்தின் வடிவத்தை விளக்கியுள்ளார்.

### 4.1.4. எல்லாம் பிரம்மமே (சர்வம் பிரம்மமயம்):-

எங்கும் எதிலும் நிறைந்திருப்பது பிரம்மமே என ஞான வாசிட்டம் தெளிவுபடுத்தியுள்ளது.

'பிறிவில் பிரம மனைத்துமென நாடிற் பிரமம் அவனேயா' (புசுண்:26.3) கல்லில் தோன்றுகின்ற சித்திரங்கள் அதற்கு வேறு படாமல் அதுவாக விளங்குதல் போல் பிரம்மத்தில் தோன்றுகின்ற உலகம் அதற்கு வேறுபடாமல் பிரம்மமாகவே விளங்கும் (சிலை:8). கடலில் அலைமுதலாக உண்டான எல்லாம் நீராக விளங்காமல் புமுதியாகாதது போல பிரம்ம வடிவம் மாத்திரம் அல்லாமல் இரண்டென்கின்ற கற்பனைப் பெயர்கள் ஒன்றுமில்லை. அக்கினி யிடத்தில் சூடுமாத்திரமே அல்லாமல் இரண்டு உண்டாகாதது போல எப்போதும் பிரம்மம் ஒன்றே உண்டு என்பர் (தாசூ: 11).

'பரமமாமிதில் இலாததில்லை' (பாலன்: 1.2) என்றும், 'அறிவதாய் அறிவே மெய்யாய் அமலமாயனைத்தாயாறிப் பிரிவுறுவரவு போக்கில் பிரமமே யுளதாம்' (தாம:43 1,2) என்றும்,

சங்கற்பமே பிரம்மம் ஆகும் என்றும் அறியமுடிகிறது.

பிரமாவோடு திருமாலும், உருத்திரனும், சதாசிவனும், தேவேந்திரனும், சூரியனுமாகிய இவர்கள் எல்லாம் மனஅமைதி அடைகின்ற காலத்திலும் கடமைகள் யாவையும் விட்டபோதும், ஞானமாகிய பிரம்மவடிவமானது வேறுபட்ட வடிவமாய் எங்கும் நிறைந்திருக்கின்றபோதும் சிவமாகி, ஒன்றாகவே தோன்றும் (ஞான:44) என 'எல்லாம் ஒரேவடிவமாகிய பிரம்மவடிவம்' என விளக்கப்பட்டுள்ளது.

### 4.1.5. மனத்தினால் தான் பிரம்மம் உலகமாகத் தோன்றும்:

மனத்தினுடைய சங்கற்பத்தினால் தான் பிரம்மம் உலகமாகத் தோன்றுகிறது. பிரம்மத்தில் சலனத்தையுடைய அறிவு முதலாக உள்ள கற்பிதமான மனத்தினால் இந்த உலகமானது உண்டாகும் என்றும், தன்னுடைய இயல்பால் எல்லாம் தோன்றும் என்றும், மெய்வடிவமில்லாத ஆகாயத்தில் கானல் விரிவதுபோல மனநினைவால் உலகம் தோன்றும் என்றும் கூறியுள்ளார் (தா சூ:9). மேலும்,

'மதியோடி ரவிகதிர்பாய மணிகளிற் சேரொளிகளைப் போன்
முதிரு மரங்கள் கனியிலையை முதலாயின போல்அருவி களிற்

பிதிருந்துளிகள் போற் சாலப்பிறக்கும் பிரமத்திடை தோன்றுங்
கதிகொள் புந்தி முதலாகக் கற்பிதஞ் சேர்இச்சகமே' (இட்சு:28)

என மனத்தினால் பிரம்மம் உலகமாகத் தோன்றுவதை விளக்கியுள்ளார். பரம்பொருளை உலகமென்று தவமறு கீழ் மக்கள் பார்ப்பார்கள் (சிகிப்:161).

### 4.1.6. பிரம்மத்துக்கு உடல் ஒன்றே!

பிரம்மாவுக்குப் பிரம்மமே காரணம் ஆகையால் ஆதியாகிய உடல் ஒன்றே என,

'பிரமவொளியாற் பிறந்தசகம் பிறக்குமுயிர்க்குக் காரணமாய்
விரிவுமதனால் உயிர்க்கெல்லாம் ஏவும்உடல் இரண்டாகும்
பரமபிரமத் தினையொழிய பயில்காரணம் வேறிலாமையினால்
வரவில்அயனுக் கோருடலாய் மருவுமாதிவாகியமே' (ஞான: 24)

இந்தப் பாடல்வரிகள் மூலம் அறிய முடிகிறது.

### 4.1.7. வீடு:

எல்லாம் பிரம்மமே என்று அறிவினால் தரிசித்தவர்கள் வீட்டை அடைந்தவர்களாவார். மாயையை அறுத்துத் தன்னை அறிந்தவர்களே உடலின் மேலான பிரம்ம வடிவமாகிய வீட்டை அடைவர் (சுரகு:24).

### 4.1.8. வேதத்தில் பிரம்மம்:

வேதங்களில் பிரம்மத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதின் சாரத்தை இந்த நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார்,
வேதங்களின் மத்திய நிலையே பிரம்மம் என்பதனை,

'சடமசட மெனு நோக்கம் இரண்டினூடே கரியாகி நின்றபர தத்துவத்தை
இடவியபோ தாரண்ய முதலாம் வேத மிராமனே பல காலும் இயம்புமன்றே' (வீத:17.1,2)

என்ற வரிகளால் அறியலாம்.

மேலும் வேதங்களால் துணிந்த பிரமமும் அதுவேயாகும் (பகீர்:19) எனகிறார்.

### 4.1.9. பிரம்மத்தை அடையும் வழி:

பிரம்மத்தை அடைவதற்கு ஆசை, மனம், அகங்காரம், அஞ்ஞானம் போன்றவை இருக்கக் கூடாது என்றும், இவற்றை நீக்கினால் பிரம்மபதத்தை அடையலாம் என்றும், ஞானமே அதற்குக் கருவி என்றும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

நன்மை தீமை என்று குறிப்பிடுகின்ற பொருட்களில் ஆசை கொள்ளாமல், விருப்பு வெறுப்பு இல்லாமல் எல்லாம் பிரம்மமே என்றும், தான், அவன், இவன், அது, இது, தனது என்று சொல்லக் கூடிய தடைகளை எல்லாம் நீக்கி பிரம்மம் ஒன்றே உள்ளது என மனதில் கொள்ள வேண்டும் (உத்:6). பிரம்ம வடிவமே தனது வடிவமாகும் மனத்தில் குடும்ப வாழ்க்கையில் அழுந்திய மனத்தைக் கெடுத்து, துன்பம் செய்கின்ற அகம்பாவம் நீங்கி அத்வைத தியானத்தினால் இருமை பாவனை விட்டு ஏகநிலையை அடைய வேண்டும் (உத்:7).

இழிவுள்ள மனத்துடன் அகங்காரம் இறந்தால் எப்பொருள்களிடத்திலும் இருக்கும் குறைவில்லாத பிரம்மம் ஆநந்தமாக பிரகாசிக்கும் என்பதனை,

> 'விரிவுறும் உண்மைமேவில் வினையங்காரம் மாளும்
> புரிவற இவற்றையெல்லாம் புந்தியாற் றீரநீக்கித்
> துரிசலை வின்றி நின்றாய் என்னின் நானென்னுந் தோற்றத்
> தெரிகிலா ததுவேநீயாத் தெளிந்ததற் பரமும் அஃதே' (பகீர்:19)

என்ற பாடலால் தெளியலாம்.

அஞ்ஞான நினைப்பு இருக்கும் வரை பிரம்மபாவனை சாராது என்பதனை,

> — ......................... 'தொடரஞ்ஞான நினைவெம்மட்டு
> ஆகும்பிரம பாவனைமே வாதம் மட்டும்' (புசு:2.2,3)

இந்த வரிகளால் அறியமுடிகிறது.

வாசனை வலையில் கட்டுபட்ட உயிரும் மனமும் சார்ந்து செய்கின்ற தொழில்கள் முழுவதும் கெடுமாயின் அதுவே பிரம்ம பதம் (வேதா:9). சர்வம் பிரம்மமயம் என்னும் ஞானம் வந்தால் வாசனை நீங்கும். அஞ்ஞானமானது அழிக்கப்பட்டால் பிரம்ம பதம் தோன்றும் (சிகித்:150).

அவித்தைகளின் முடிவே பிரம்மபதம் (புசுண்:11). எப்போதும் எல்லா வடிவாலும், எல்லா இடங்களிலும் நெருங்கிய எல்லாம் பிரம்மமே என்று தெளிந்து ஆராதனை செய்ய வேண்டும் (தேவ:51 1,2).

பிரம்மத்தை அடைவதற்கு மனம், ஆசை, அகங்காரம் எனும் மூவகை அவத்தைகளை மாற்ற வேண்டும் என்றும், ஞானத்தில் மூழ்கி இருக்க வேண்டும் என்பது தெளிவு.

### 4.1.10. பிரம்மத்தை அடையாதவர்கள் நிலை:

பிரம்ம வடிவத்தை அடையாதவர்களை மாயை துன்புறுத்தும் என்பர். அதை,

> வெவ்விய மாமோகங்கள் விளைவித்தும் பரமத்தின் மேவி நிற்கும்
> அவ்வகையால் உரைக்கின்றே னநவரதஞ் சொரூபத் தை யடையாதாரைப்
> பவ்வமென வருந்துயரின் மூழ்கிவிக்குமிம் மாயை பண்பு தானே (உத்:1.2,4)

என்ற வரிகள் விளக்கின்றது.

### 4.1.11. பிரம்மத்தை அடைந்தவர்கள் நிலை:

பிரம்மத்தை அடைந்தவர்களை எந்தப் போகமானதும் வந்து பொருந்தாது, பிணி செய்யாது, மனத்தை எள்ளளவும் அசைக்காது என ஆசிரியர் விளக்கியுள்ளார்.

பிரம்மத்தை வணங்குகின்ற நிச்சயமுடையவர்கள் எல்லா எண்ணங்களையும் மாற்றினால் சத்தியமும், சாந்தமும் சமத்துவமும் என்கின்ற நிறைந்த பிரம்மபதத்தில் ஆனந்தமாயிருப் பார்கள் (புசுண்:29). பரம ஆகாயத்தில் உலகங்கள் அனைத்தும் இருக்கின்றன என்று பாவனை செய்து, ஆசை நீங்கினால் பிரம்மத்தையே கவசமாகத் தரித்தவனாகி பேரானந்தத்தை யுடைய சீவன் முத்தனாகலாம். தான் என்கின்ற அகங்காரத்தைக் கெடுத்தால் நினைவின்மை வடிவமான பாவனையினால் பொருட்கள் யாவும் வடிவமில்லாததாகவும், பற்றுக் கோடில்லாத தாகவும், சித்தாகவும், சாந்தமாகவும் இருக்கும் (இட்சு:30) என்பர்.

### 4.1.12. துரியநிலை:

பிரம்மபதத்தை அடைந்த நிலையை துரியநிலை என்றும், சுத்தநிலை என்றும், பரமாத்தும நிலை என்றும் யோகிகள் தன்மயமாக நிற்கும் உயர்நிலை என்றும் பலவாறாகக் கூறுவர். துரியநிலையை அடைந்தவர்களுக்கு எல்லாம் ஒன்றே என்ற எண்ணம் தோன்றும்.

'அகமென்பதும் என்னாததுவும் உளதுமிலதும் அறவிட்டு
நிகழுஞ்சமமாய்ப் பற்றறத் தன்னிலைக்கே நிற்றற் சரியமாதந்
தகுதன்னிலையாய்ச் சமமாகிச் சகத்தின் றொழிற்குச் சான்றாகி
புகல்சீவனின் முத்தியுமாகிப் பொரு கற்பனை தீர்நிலை துரியம்' (மானு:17)

அகம்பாவம் நீங்கிச் சம பார்வையில் இருப்பவர்களுக்குத் துரியம் அன்றி உலக ஆசைகள் தோன்றாது. மெய்யாய் ஆதிஅந்தமில்லாமல் வேறுபாடில்லாத ஞானம் மாத்திரமே சீவஉலகத்துக்குப் பிரம்ம வடிவமாகும். துரியபதம் என்பதும் இதுவேயாகும். தான் என்கின்ற நினைவு நீங்கினால் சமத்துவத்தை அடைந்து மனத்தை எங்கும் எதிலும் ஈடுபடாமல் செய்தால் துரிய நிலை உண்டாகும். தூல, சூக்கும வடிவங்களை மாற்றுவதால் அடையும் நிலையே துரியபதம். துரியபதத்துக்கு வேறாக ஒரு நிலையும் இல்லை. குற்றம் பொருந்திய வேற்றுமைகள் நீங்கிய ஞானமே துரியநிலை. இதையல்லாமல் இங்கு வேறொன்றுமில்லை (மானு: 15,19,22,23).

பாவனை நீங்கித் துரியத்தில் பிறப்பு நீங்கி மோட்சக்கரையை அடைந்தவன், சீவத்தன்மையோடு இருந்தாலும், சமாதி நிலையில் இருந்தாலும், குடும்பத்தில் பொருந்தினாலும், துறவியாயிருந்தாலும், வேதங்களால் கட்டப்பட்டாலும், எதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் எந்த மாற்றமும் அடையான் (முமுட்:26) எனத்துரியநிலை அடைந்தவனைப் பற்றி விளக்கியுள்ளார்.

### 4.1.13. பிரம்மத்தைப் பலவிதமாகக் கூறல்:-

பிரம்மம் பலவகையாகத் தோன்றினால் அவையெல்லாம் ஒன்றே என ஆசிரியர் கீழ்வரும் பாடலால் தெளிவுபடுத்தியுள்ளதைக் காணலாம்.

'கிஞ்சிலாக விரிந்து சகத்திரளாய்க் கிளைத்து விவை யெல்லாம்
விஞ்சுபிரமமேஅறிவு பிரமமேதி னிப்பிரமம்
பஞ்சபூதம் பிரம்மநாம் பிரமநமது பகை பிரமந்
தஞ்சநட்புக் கிளைபிரமஞ் சங்கராதி நிச்சயமே'

(புசுண்: 25).

என பிரம்மத்தைப்பலரும் பலவிதமாகக் கூறுகின்ற நிலையை, காணமுடிகிறது. ஆனால் பிரம்மம் ஒன்றே.

'சாந்தமாகிச் சிதம்பரமாய்ச் சமமாய் நொய்தாயமா வாய்
ஏந்து சத்தியள விலாதாய் இடும்பேர் பிரமமெனுமி தற்கே
சேர்ந்த பலநிச்சயம் பண்ணிச் சிலர் பாமென்பர் பரமேசன்
வாய்ந்த வுருவம் என்பர் சிலர் மாவிஞ்ஞானம் என்பர் சிலர்' (நிரு:2)

இவ்வாறு பலவடிவாகத் தோன்றினாலும் பிரம்மம் ஒன்றே என்பர்.

4.1.14. பிரம்ம நிலையை அடைவதற்கு முக்கிய கருவியாக ஞானத்தைக் கூறி, பிரம்மம் பல வடிவமாகத் தோன்றினாலும் பிரம்மம் ஒன்றே என்ற கருத்து ஞானவாசிட்டத்தில் வலியுறுத்தப் பட்டுள்ளது.

4.1 15. இராமன் தன்னுடைய வைராக்கிய நிலையைக் கூறி உடல்முதல் காணப்படுகின்ற எல்லாம் நிலையற்றவை என்று விளக்கிக் கூறினான். இந்த நிலையை மாற்ற வேண்டியும் அவனது கருத்தை ஒத்ததாக கூறவேண்டும் என எண்ணி விசுவா மித்திர, வசிட்டர்கள் பிரம்மத்தின் முக்கியத்துவத்தை எடுத்துக் கூறியுள்ளார்கள். பிரம்மமே முழு முதல் பொருள் அது நிலை யானது. மற்றவை எல்லாம் நிலையற்றவை. இராமனுக்குத் தெரிந்திருந்தாலும், இந்த வைராக்கிய நிலையில் எடுத்துக் கூறினால் தெளிவடைவான் என்றும், மேற்கொண்டு அரசியல் செயல்களில் ஈடுபடுவான் என்றும் அவர்கள் அறிவுத்தியிருக் கலாம்.

அத்வைதக் கோட்பாட்டிற்கு ஏற்றவாறு 'பிரம்மம் சத்தியம், உலகம்மித்தை' என்ற கருத்தும் வலியுறுத்தப்பட்டுள்ளது.

அத்வைதக் கோட்பாட்டிற்கு வித்திட்ட சங்கரர் போன்றோர் கொள்கையும் அதுவே என்பதை வெளிப்படையாகவே ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

'பிரமஞ் சங்கராதி நிச்சயமே' (புசுண்:25.1) என்று குறிப்பிட்டிருப்பது சங்கரர் காலந்தொட்டே அத்வைத கோட்பாடு நடைமுறையில் உள்ளது என்றும் அவரே இந்தக் கோட்பாட்டிற்கு ஆதியானவர் என்றும் கொள்ளலாம்.

## 4.2. ஞானம்:

4.2.0. மனித இனத்தில் பல நிகழ்ச்சிகள் நிகழ்கின்றன. அவற்றுள் ஞானம் (அறிவு), உணர்ச்சி, செயல் என்பவை முதன்மையானவை. ஒவ்வொருவருடைய மன வாழ்க்கை ஒவ்வொரு கணமும் இந்த நிகழ்ச்சிகளால் நிறைந்துள்ளது. இவற்றுள் முதன்மையாகக் குறிப்பிடப்படுவது ஞானம்.

4.2 0.1. ஞானம் என்பது அறிவு. அது மெய்யறிவு, பொய்யறிவு என இரு வகைப்படும். புலன்களாலும் புத்தியாலும் உண்டாகும் அறிவு மெய்யறிவாகாது. மாறாத பொருள் ஒன்றிருக்க வேண்டும். அதுதான் உண்மை பொருள். மாறுபாடுகள் எல்லாம் வெறும் தோற்றமே. பெயர் வடிவங்களைப் பொய்யென்று விலக்கி அவற்றுக்கு ஆதாரமான சச்சித் ஆனந்த பரமான்மாவை அறிவே ஞானம் எனப்படும்[15].

4.2.0.2. ஞானம் எண் வகைப்படும். உம்மையின் (மூன்று பிறப்பு) வாசனை பற்றி முன்னொரு பின் மலைவின்றிப் பொருந்தும் மாற்றால் பொருள்களை ஆராய்ச்சி செய்து ஊகித்தறியும் ஞானம் ஒன்று. ஆத்தியான்மீகம் முதலிய மூவகைத் துக்கத்தால் முடிவு வந்தால் நிகழ்வனவாகிய ஞானம் மூன்று. நட்டோர் கூறும் வாயுறை மொழியான் வரும் ஞானம் ஒன்று. தானே படித்து உணர்தலாலும், ஆசிரியனை வழிபட்டு ஓதியுணர்தலானும் வரும் ஞானம் இரண்டு. தானம் முதலிய நல்வினைகளால் வரும் ஞானம் ஒன்று[16].

4.2 0.3. ஞானத்தைச் சன்மார்க்கம் என்றும் சொல்லுவர்[17]. சிவஞான போதத்தின் தலையாய கருத்து 'ஒன்றே சிவம்! அதன் உண்மையான இயல்பு பற்றிய அறிவே ஞானம். அத்தகைய ஞானத்தை அறிவதே போதம். போதம் என்றால்

அறிவு அல்லது ஞானம் என்பதாகும்[18]. முதலும் முடிவும் இல்லாத தோற்றமே தன் வடிவமாகிய பிரம்மமானது இங்கு சோதியாய் இருக்கும் என்கின்ற நிச்சயமே ஞானம் என்று சொல்லுவர். மனம் முதலிய எல்லாம் அறிவு வெளி நிச்சயத்தால் ஞானம் என்பதாகும். உலகிலுள்ள எல்லாவற்றையும் ஆத்ம வடிவமாகப் பார்த்தால் ஒன்றும் வேற்றுமை இல்லை என்பதும், சீவனும் உலகமும் ஆநந்தமாயின் வேறுபாடு இல்லை என்பதும் ஞானமாகும். மனத்தை அடக்குகின்ற தந்திரமே ஞானம் எனப் படும் இரண்டென்றும் ஒன்றென்றும் பாகுபடுத்தும் மனத்தின் எண்ணமே அஞ்ஞானம். அதன் நீக்கமே ஞானம். எண்ணங்கள் யாவும் அறியாமைக்குக் காரணமாக எழுவனவே. இந்தத் தவறைச் சரிசெய்வதற்கு ஒரே வழி உண்மை ஞானத்தைப் பெறுதலே என்று அத்வைதக கருத்துகளைக் குறிப்பிடும் போது டி.எம்.பி. மகாதேவன் குறிப்பிட்டுள்ளார்[19].

4.2.0.4. ஞானத்தை பரோட்ச (கேள்வி) ஞானம், அபரோட்ச ஞானம் என இருவகையாகக் கூறுவர்[20].

4.2.0.5. ஞானத்தை ஆளவந்தார் அறிவு, சைதன்யம், சித், மதி, உணர்வு, புந்தி எனப் பல பெயர்களால் சுட்டி யுள்ளார். அவர் கூற்றுப்படி இவை எல்லாம் ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களாகும். ஞானவாசிட்டத்தின் முக்கிய நோக்கு ஞானத்தின் கூறுகளை வலிவுறுத்துவதாகும். எந்தக் கதையை எடுத்துக் கொண்டாலும் எந்த அறிவுரைப் பகுதியை எடுத்துக் கொண்டாலும் ஞானத்தின் கருத்தை வலியுறுத்து வதாகவே அமைந்துள்ளது எனலாம்.

### 4.2.1. ஞானத்தில் பல நிலைகள்:

4.2.1.0 ஞானவாசிட்ட ஆசிரியர் கூறியுள்ள கருத்துகளை ஞானம், அஞ்ஞானம், ஞானிகள், அஞ்ஞானிகள், ஞானம் உண்டாவதற்குரிய வழிகள், ஞானம் அடைந்த பின் ஏற்படும் நிலை, ஞானத்தின் பயன் என்ற நிலைகளில் விளக்கலாம்.

#### 4.2.1.1. ஞானவாசிட்டத்தில் ஞானம்:

'ஏகமெனும் பிரமத்துக்கு உறுமுத்தி யோகமே இலங்கு ஞானம்' (அருச்:15 1)

எனவும், 'சுத்த ஞானத்தான் நலம்பெறக் காண்பதாம்' (வீத:29.3) எனவும், ஞானத்தைப் பற்றி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

4 2.1.1.1. எல்லாம் ஞானமே:

எல்லாம் ஞானமே என்றும், சர்வமும் தானாய் விளங்குகின்ற அறிவு, தனது வேற்றுமை இல்லாத ஞானத்தினால் வேற்றுமையான ஞானத்தைத் தானாகப் பார்க்கும் என்றும் கூறுவர். மேலும் எங்கும் எதிலும் நிறைந்திருப்பது ஞானமே என மாவலி கதை வழியாக அறிவுறுத்தப்பட்டுள்ளது (மாவலி.45).

கிரணம் என்றும் ஆபரணம் என்றும் வேறுபிரித்துப் பாராமல் சூரியனாகவும் பொன்னாகவும் பார்த்தால் அவையாய் விளங்குவதுபோல உலகத்தை வேறு பிரித்துப் பாராமல் அறிவாகப் பார்த்தால் அதாகவே எல்லாம் தோன்றும் (விரத:2). உண்மையாக ஞானத்தைத் தவிரவேறொன்றுமில்லை என்றும், ஞானமாத்திரத்தாலுண்டான படைப்பானது அந்த ஞான வடிவமே என்றும் சொல்லப்படும் (சிகித்: 149.2,3). உலகமானது எப்போதும் உள்ளதல்ல, பொய்யுமல்ல. கனவின் கூட்டத்தைப் போலத் தோன்றும். எல்லாம் புதிதானதும் அன்று. எல்லாமும் உண்மை என்று அறிவால் செய்கின்ற செய்கைகள் அனைத்தும் களங்கமற்ற ஞானமயமானப் பொருளேயாகும் (விரத: 41). ஞானமே எல்லாம் என்றும் அதுவே ஒன்றாக விளங்கும் என்றும், அதுவே அதீதமாகும் என்றும் கீழ்வரும் பாடலாம் அறியலாம்.

'பந்தமில்லை வீடில்லைப் படர்தீர் பிரமமே யுளதாம்
அந்தவயிக்கமில்லை இரண்டில்லை அறிவே
வளர்ந்தெழுந்த
சிந்துதரங்கப் பங்கத்தாற் றிகழுகின்ற நீர்போல
வந்தமில்லா அறிவுருவே விளங்கும் அபலொன்றிலதாகும்'
(இட்சு: 16)

ஞானாத்மாவே பிரம்மம் என்று அத்வைத நிலையில் விளக்கியுள்ளார் (சிகித்: 16). சித்தே அதீத நிலையை அடைய உதவும் (வில்வ:8). எல்லாம் நீங்கி ஞானமாய் வாழவேண்டும் என்பதனை

'எல்லாநீக்கி மகாமவுனத் திருப்பாய் நிருவாணத்
தினனாய்ப்
பொல்லாமனம் போய்ச் சித்தம்போய்ப் புத்திபோய்த்
தானென்பதுபோய்ச்
சொல்லாவூமை குருடுசெவி டொத்துத் தூயவான்மாவின்
இல்லாயுள்ளே முகமாகி நித்த நொய்தாய் நிறைமதியாய்'
(நிரு:3)

என்னும் பாடலால் தெளிவுறுத்தியுள்ளார்.

ஞானமே எல்லாம் எனக்கூறவந்த ஆசிரியர், பிரம்மா, உருத்திரன், திருமால், இந்திரன் முதலியவர்கள் செய்யும் பஞ்ச கிருத்தியங்கள் முதலிய எல்லாம் தத்துவத்தில் கலந்து நிறைந்த ஞான வடிவத்தையுடையது (இட்சு: 54) என ஞானமே எல்லாம் என்று அத்வைத நிலையில் கூறியுள்ளார்.

**4.2.L.1.2. ஞானத்தை அடையும் வழி:**

ஞானத்தை அடையும் வழியையும் ஞானம் உண்டாகும் வழியையும் பல நிலைகளில் ஆசிரியர் விளக்கியுள்ளார்.

நரம்பிலுண்டாகின்ற இசையைப் போல் சாந்தி முதலான சற்குணங்களினால் ஆத்ம ஞானம் உண்டாகும். பற்றில்லாத தாய் மாசற்ற மனம் தொழில்களைச் செய்தாலும் பந்தத்தை அடையாது. அகத்தில் ஆசை இல்லாமல் நற்செயலைச் செய்கின்ற சீவனானது புறச்செயல்களைச் செய்தாலும் பற்றில்லாமல் செய்யாவிட்டாலும், செய்பவனும், துய்ப்பவனுமாகிய அவர்களுடைய குணத்தைப் பொருந்தாது. அவ்வாறு செய்வதாக இருந்தால் ஞானத்தை அடையலாம் (வீத:2).

'செறிவாஞான மனமாய்வு திரள்வாதனைமாய்
விர்மூன்றும்
பிறிதாங்கார ணங்கடமைப் பெறுசாதித் தற்கரிதாகும்'
(உபசா:50 1,2)

என போக மயக்கமும், மனமும், வாதனையும் கெட்டால் ஞானம் உண்டாகும். இச்சையை நீக்கி ஆத்ம ஞானத்தால் மனவடிவாகிய காண்பவற்றைக் கெடுத்தால் ஞானம் உண்டாகும்.

ஞானத்தை அடைவதற்குரிய கருவிகளாக சாமர்த்தியம், ஞாபகம், மனனம், சாத்திர ஆராய்ச்சி, ஆனந்தம், சாந்தி, வைராக்கியம் என்ற ஏழனையுங் குறிப்பிடுவர்.[21] சாந்தி; மனம்,

நூலாராய்ச்சி போன்றவற்றை ஆசிரியர் தெளிவாகச் சுட்டியுள்ளார். ஆனால் ஞாபகம், சாமர்த்தியம், ஆனந்தம், சமபார்வை போன்றவற்றைத் தனித்தனியாக ஆசிரியர் விளக்கவில்லை. கதைகள் வாயிலாகச் சுட்டிச் செல்வதைக் காணமுடிகிறது.

### 4.2.1.1.3. ஞானம் அடைந்தபின் ஏற்படும் நிலை:-

ஞானம் அடைந்தபின் எந்தவகையான நிலை தோன்றும் என்றும் எந்தந்த இடையூறுகள் மாறும் என்றும் இந்தப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது. ஞானம் உதித்தால் மனமும் வாசனையும் கெடும் என்பதனை,

'உண்மைஞான மெம்மட்டும் வாராதம்மட் டுளமழியா
திண்மையுளமெம் மட்டழியா திகழ்தத்துவமெம்
மட்டெய்தா
தண்மையுறுவா தனையெம்மட்ட ழியாதம்மட்
டுணர்வனுகா
வண்மையுணர்வெம் மட்டனுகா வருவாதனையம்
மட்ட ழியா' (உபசா:49)

என விளக்கியுள்ளார். மாசற்ற பிரம்மப் பார்வையினது நெறியினால் நசிக்கின்ற துன்பமுள்ள அவன்யென்பதுமில்லை, தான் என்பதும் இல்லை சொல்லப்பட்ட எல்லாம் மாறி ஞானமே தோன்றும் (புண்:45). எப்பொழுதும் அத்தியாத்ம ஞானமே வடிவமாகவும் அகமுகமாகியும் மகிழ்வெய்தி சித்தினை அனுபவிப்பவர்களுக்குச் சிறிதும் வருத்தம் வராது (பாச:1). தீபமும், சூரியனும், மலரும் உண்டாயிருக்கும்போது வீசுகின்ற வெளிச்சமும், பகற்பொழுதும், வாசனையும் உண்டானதுபோல. அச்சமில்லாத அறிவு (சித்) உண்டானால் உலகம் உண்டாகும் (தாரு: 13). அறிவே தான் என்பவன் எதிலும் பற்றுவைக்கான் என்றும் துன்பம் அடையான் என்றும் அறியலாம். இதனை,

'திரண முனிகள் விசும்பு இரவி தேவர் உருகர் நரரிடத்தில்
விரியுறிவே நானென்று விளங்குழ்தீரன் மெலிவனு
கான்' (இட்சு: 43.1,2)

எனும்பாடல் அடிகளால் அறியலாம். மேலும் வேற்றுமை இல்லாத ஞானம் இருந்த இடத்திலிருக்க வேற்றுமையான ஞானமானது முன்படைப்பின் மனோமயக்கமே மேற்பிறப்பு என்பர் (லீலை:17).

இவ்வாறு ஞானம் அடைந்த பின் ஏற்படும் நிலைகளை விளக்கியுள்ளார்.

### 4.2.1.2. அஞ்ஞானம்:-

ஞானத்துக்குக் கொடுத்திருக்கும் விளக்கம் போல ஞானவாசிட்டத்தின் கண் அஞ்ஞானத்துக்குக் கொடுக்கப்படவில்லை. ஆனால் பேதஞானம் என அதை விளக்கியுள்ளார். பேதஞானம் என்பது சத்தாமாத்திரமாய் விளங்கும். சைதன்யத்தில் அபேத ஞானத்தில் உண்டான பேத ஞானமானது நூதனம் (புதுமை), புராதனம் (பழமை) என்னும் இரண்டில் புராதன வடிவமானதாகும் (லீலை: 87). பேதஞானத்தால் ஏற்படும் இன்னல்களும் அதன் மாற்றங்களும் இந்நூலில் காணப்படுகின்றன.

### 4.2.1.2.1. அஞ்ஞான வாழ்வின் நிலை:-

அஞ்ஞானத்தோடு வாழ்கின்ற வாழ்வானது சண்டாளர்கள் வீடுகள் தோறும் ஓட்டில் பிச்சை வாங்கிச் சுழல்வதிலும் மோசமானது (முமூட்: 15). கறுத்த ஆகாயத்தில் மறையாததாயும், பிரகாசத்துக்கு ஒளிமங்காததாயும் இருக்கின்ற பொருளானது, பார்க்கும் போது தான் யார் என்றும் கேட்கின்ற விசாரணையானது அஞ்ஞான அந்தகாரமான ஆபத்துக்கு மருந்தாகும் (முமூட்: 18) என்பர்.

பாவமிகுந்த இந்த அஞ்ஞான மென்னும் சத்துருவினால் விவேகம் என்கின்ற வருத்தமில்லாத பொருட்களை நீக்கலாம் என்பதை,

'பாவமிகு மிவ்வஞ்ஞானப் பகைவனாலே விவேகமெனு
மேவமில்லாப் பொருளெல்லாமிழந்தேன்'
(பிரக: 42.3,4)

எனக் கூறியுள்ளார்.

ஞானமில்லாதவர்களுக்குத் தோன்றும் நிலையைப் பற்றி ஆசிரியர்,

'உண்டான சிருட்டிதான் நன்றாய்ப்பார்க்கில் ஒழிந்து போமுறுதியா யுணராவாற்றாற்
கண்டார்கள் கயிற்றிலே பாம்பென்பார்போற் காட்சியுறுங் கலை நூலாற் கற்றோர் சார்வாற்
தண்டாத பரிசயத்தாற் சிலகாலத்திற் றாவுமன தின் மலமாய்ச் சசிபோனி
பண்டாய வனுபூதிமய மாய்த்தானே பாக்கியவான் களுக்கிற்கிந்தப் பார்வை தோன்றும்' (சிகித்: 162)

என விளக்கியுள்ளார்.

**4.2.1.2.2. அஞ்ஞானம் நீக்கும் வழி:-**

செல்வமயக்கத்தைத் துறவினால் கெடுக்க எண்ணினால் அஞ்ஞானமானது வெட்டுகின்ற மரத்திலிருக்கும் பேய் ஓடுவது போல செல்வங்கள் அனைத்தையும் விவேகத்தினால் நீக்க அது விரைவில் நீங்கும் (சிகித்: 122) அஞ்ஞானத்தை ஞானத்தாலும் ஞானநூற்களாலும், குரு அறிவுரையாலும் நீக்கலாம் என்ற கருத்து இந்தநூலில் காணப்படுகிறது.

**4.2.1.2.3. அஞ்ஞானம் நீங்கினால் அடையும் நிலை:-**

அஞ்ஞானத்தை ஒழித்து உணரில் உள்ளபடி உன்னைக் காண்பாய் (புண்: 48). விசாரஞானத்தினால் சிந்தையும், சடத்தையும், மாயையும் விசாரித்து அஞ்ஞானத்தைக் கெடுத்தால் ஆநந்தத்தை அடையலாம் (முமூட்: 18).

**4.2.1.3. ஞானிகள்:-**

ஞானிகளை இரண்டு நிலையில் ஆசிரியர் கூறியுள்ளார். ஒன்று சத்துக்கள், அறிஞர்கள், அறிவுடையோர், உத்தமர்கள் என்னும் ஞானிகள் பகுதி. மற்றொன்று ஆசிரியர், குரு, சாது சங்கம், தேசிகன் எனப்பெயர் கொள்ளப்படும். குருநிலை இரு நிலைகளையும் ஞானிகள் என்று கொள்வதே பொருந்தும். நூலாசிரியர் பல நிலையில் இவ்வாறு கூறியிருப்பதால் அவ்வாறே பிரித்துப் பகுத்து இங்கு விளக்கப்படுகிறது.

ஒருவன் கோயிலுக்குப் போகாமலிருக்கலாம்; யாதொரு சமய சடங்கையும் ஆற்றாமலிருக்கலாம்; ஆனால் கடவுளைத்தன் இதயத்தில் உணர்ந்து, இந்த உலகத்து ஆடம்பரங்களைக் கடந்து அப்பால் அவன் சென்றிருப்பானாயின், அவனே புனிதனாவான். அவனே ஞானியாவான்[22]. காண்பன எல்லாம் சொப்பனம் என்று துணிந்தவன் ஞானியாவான்[23].

ஞானவான்களின் இலக்கணமாக ஆசிரியர் சிலவற்றைக் குறிப்பிட்டுள்ளார். மரணமானது எபபோது வந்தாலும், கற்ப முடிவில் வந்தாலும் ஞானவான்கள் சேற்றில் அழுந்திய பொன் போல் களங்கம் அடையமாட்டார்கள். எல்லாமாயும், பார்வை யாயும், அடிமுடியின்றி ஒன்றாய் ஆநந்த மாத்திரமாகியும், ஒளி யாகியும், காட்சிகள் இல்லாத அடையாளத்தை உடையவர் களை ஞானவான்கள் என்று வேதங்கள் கூறும் (சுரகு. 16).

'துயில்விழிப்பு சொலல்செலவு தொடர்ந்தாலும் அகமுகமாந் தொடர்பாலென்றும்
பயின்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற் காண்பவரே பரமசீலர்' (சுரகு:12.1,2)

அரியவற்றை எள்ளளவேனும் இதயாகாசத்தில் அணுகவிடாதவனே ஞானவான். அவன் சடமாகாதவன்; அவன்விடய அறிவில்லாதவன்; அவனே சீவன்முத்தன் (உபசா:33). விடயமானாலும், பிரதிவிடயமானாலும், பாலானாலும், கரும்பின் சாறானாலும், உணவானாலும், உண்ணும்போது மனமானது பற்றாமல் உண்மையை உணர்ந்தவர்கள் ஞானிகள். பகைவரென்றும் நட்பென்றும் ஞானமுள்ளவர்கள் அகமகிழ்ந்து சமமாகப் பார்ப்பார்கள். சடமான பொறிகளை மோகத்தையுடைய பார்வையில் செல்லாமல் படிக்கும் சத்துக்கள் மனத்துன்பமில்லாத அறிவினால் தடுப்பார்கள் (உபசா:66)

### 4.2.1.3.1. ஞானிகளின் செயல்கள்:-

மனம் குளிர்ச்சியாய் இருந்து இன்பதுன்பத்தில் சேராதவர்களும், நல்லவர்களிடமும் தீயவர்களிடமும் சமமாக உள்ளவர்களே உத்தமர்கள். அவர்கள் தாழ்வு மேன்மை இரண்டையும் நினையார். விருப்பு வெறுப்பை அடையார். அவர்கள் செறிந்த பிறவியில் சேரார். எல்லோர்க்கும் இன்பமானவற்றைப் பேசுவர். அழி பொருட்களின் குணத்தை அறிந்தவர்களுமாவார் (புண்: 31). கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறர்மனை நயவாமை முதலிவற்றை விடாமல் சுகமாக எத்தனைவித இடையூறுகளினின்றும் எளிதில் கடந்து செல்லும் ஆற்றலுற்றவரே மனித உத்தமராவார் (வைரா: 92).

ஞானிகள் ஆத்ம விசாரணையினால் விரிந்த அகங்காரம் அற்றவர்கள். பிறபிறப்புக்கள் வருமே என்று அஞ்சும் சலனம் இல்லாதவர்கள். களங்கமற்றவர்கள் எளிதாய்க் கிடைத்த பொருட்களைப் பெறுபவர்கள் எபபோதும் நடக்கின்ற அனைத்தையும் ஞானப்பார்வையினால் சமமாகப் பார்ப்பவர்கள் (வீம:22). காணப்பட்ட அனைத்தும் மித்தையே யென்று மனத்தில் சகல விருப்பங்களிலும் நீங்காத ஆசையை நீங்கிய வல்லோர். எல்லாம் அறிந்த சத்துக்களைப் பாசமாயையானது துன்புறுத்தாது (தாரு: 46). ஞானிகளுக்கு இறப்புக் கிடையாது. அவர்கள் அகம்பாவம்

நீங்கத் துரியாதீத பதத்தை அடைவார்கள். 'மெய்யுணர்வுறுத லாலே வெறும் பொய்யாக மகங் காரத்தினையுறார்' (விம:18.1).

### 4.2.1.3.2. ஞானியின் வகைகள்:-

ஐயம் நீங்கி முடிவான நிச்சயத்தை அடைந்த ஞானிகளை மாகத்தன், மாபோகி, மாத்யாகி என மூவகையாகப்பிரிப்பர்.

### 4.2.1.3.2.1. மாகத்தன்:-

விருப்பு வெறுப்பும், சுகதுக்கமும், தருமஅதருமமுமாகிய இவற்றில் தவறாத பலமும் அபலமுமாகிய இச்சை கொள்பவனே மாகத்தன். பிறப்பிலும் இறப்பிலும், தோன்றுதலிலும் மனம் ஒத்தவன் (விரத:10) ஆவான்.

> 'மோனமுற வகங்காரமுமான முமச்சரமும்போய் முடுகி வாடா
> தீனமிலாதன செய்வோனெங்கணுமன்பறச் சாட்சியென லாயிச்சை
> தானறவே காரியஞ் செய்வோன் வெருட்சியாதந்தத் தாக்குற தோன்
> ஆனசம நொய்ய தொழிலாலிடற்று தயமுறாதவன் மாகத்தன்' (விரத:11).

### 4.2.1.3.2.2. மாபோகி:-

உப்பின் தன்மையைப் போல நன்மை தீமை இரண்டிலும் சமமாக சேர்ந்திருப்பவனே மாபோகி கோபமடைந்து ஒன்றையும் தள்ளாதவனும் ஒன்றையும் விரும்பாதவனும் இயல்பாக வத்தை முழுதும் புசிப்பவனுமாகிய இவனேமாபோகி (விரத:12,13).

### 4.2.1.3.2.3. மாத்யாகி:-

தருமஅதருமமும், இன்பதுன்பமும், பிறப்புஇறப்பும் ஆகிய அனைத்தையும் சேரத் தள்ளுகின்றவனே தெரிபவத்தில் எண்ண மாய் பார்க்கின்றவை எவ்வளவோ, அந்தக் கூட்டங்கள் அனைத் தையும் ஊனங்கம் இல்லாமல் விட்டவனே மாத்யாகி (விரத:14,15)

### 4.2.1.4. குரு:-

ஆசான், ஞானாசாரியன், உபாத்தியன், தேசிகன், குரவன் என குருவுக்கு பலபொருள் உண்டு. இத்தப்பொருள் அடிப்படை

யில் ஆசிரியரும் பல இடங்களில் சொற்களைப் பயன்படுத்தியுள் ளார் குருவின் அறிவுரை அறிவைக் கொடுக்கும் என்பதனை,

'கருதிமலத்தான் மலமறுக்குங் காருவன்ன மாயைதனைப்
பெருமாயையினாற் செறல் வேண்டும் பெரிய மாயை காரணமாய்
பொருளன்றாயுங் குருவாக்காற் புகலும் பொருளாய்க் காரணமாய்
மருவுமுணர்வாந் தன்னுருவை வழுவரதளிக்கும் உணர் வோர்க்கே' (தேவ.56).

இவ்வாறு விளக்கியுள்ளார். மேலும்,

'குரவன் உணர்த்து ஞானமெய்ப்படதந்தாற் சுகமாம்'(சிகித்: 93.3) என்றும், குரு அறிவுரையாயினால் சீடன் அடையும் பலனை ஆசிரியர், அவர் வாக்கியப்படி துரியவடிவைச் சிந்திக்கச் சிந்திக்க அந்தச் சிந்தனை மாறிச்சிந்தனாதீதமான துரியதீதம் வெளிப்படும் (சிகித்:64,65) என தெளிவுபடுத்தியுள்ளார். ஆசிரி யர் அறிவுரைப்படி நாள்தோறும் தவறாமல் நடந்தால் முத்தி கிடைக்கும் என்பதனை,

'தேசிகன் சொற்பிழையாமல் அனுட்டிக்கிற் ஐயப்
பையத் தியக்க நீக்கிப்
அடுத்த பேசிய சென்மத்தாதல்
சில பிறப்பினாலாதல் பேறாம்'

என வெளிப்படுத்தியுள்ளதைக் காணலாம்.

### 4.2.1.5. சாதுசங்கம்:

நல்லோர் கூட்டத்தைச் சாதுசங்கம் என்பர். உலகமென்னும் மாயையை வெற்றி கொள்ளத்தக்கவர்களுக்கு எல்லாம் (முமுட்சு களுக்கு) சாதுசங்கம் மாறாத உறவியாகும் (முமுட்:19) அற்பமான அறிவைப் பூரணமாக்குவதாயும், ஆபத்துக்களை நீக்கவும் அமங்கலத்தை மங்கலமாக்குவதாயு இருக்கின்ற சிறந்த மகான் கள் சங்கம் என்கின்ற கங்கையினது குளிர்ந்த நீரில் ஆடினவர் களுக்கு வேள்வியும் தவமும் தானமும் தீர்த்தங்களும் வேண்டாம். எனவே துக்கமாகிய பந்தநாகம் செய்து, யாவருக்கும் இனிமை யுள்ளவராய்ப் பிறப்பெனும் கடலைக் கடப்பதற்குக் கப்பலாய் இருக்கின்ற சாதுசங்கத்தினரைச் சேரவேண்டும் (முமுட்: 20).

சாதுசங்கத்தால் விசாரஞானம் கிடைக்கும் (சிகித்:98). சமாதி கூடுதற்குச் சங்கத்தியாகம் வேண்டும் என்றும் அதனால் பிரம்ம நிலையை அடையலாம் என்றும் விளக்கியுள்ளார் (பகீர: 15).

சாது சங்கத்தாருடைய கூட்டம் (நட்பு) எளிதில் கிடைக்காது என்றும் தீயவர்கள் கூட்டம் (சங்கம்) எளிதில் கிடைக்கும் என்றும் கீழ்வரும் பாடலால் அறியலாம்.

'பெரியவர் நண்பதிதூரஞ் செல்கதி கிட்டாதுண்மை
பெறற்கொணாதாங்
கரியமன மோகிக்கு முண் மகிழ்ச்சி தூரமதாங் கருணை
தோன்றா
விரியுமிழிவதி தூரத்தினுமணுகு நிலைமைபோய்
வேறாமவீழ்வோர்
திரியவுடனெழுவர் சிறியவர் கூட்டமெளிதரிது தெளிந்
தோர் கூட்டம்' (வைரா: 16).

## 4.2.1.6. சங்கம்:

சங்கம் என்பது பொதுவாகக் கூட்டத்தைக் குறித்தாலும் ஞானவாசிட்ட ஆசிரியர் தீயோர் கூட்டத்தைக் குறிக்கவே சங்கம் என்னும் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார்.

சமாதி கூடுதற்குச் சங்கத்தியாகம் வேண்டும் (பகீர: 15) என்றும், அசுத்தவாதனையே சங்கம் என்றும் கீழ்வரும் பாடலால் அறியலாம்.

'சாற்றுமலின வாதனையே சங்கமாஞ் சீவனின்முத்தி
தோற்று முடற்கு மறுபிறவி யின்றியின்ப துன்பங்கள்
மாற்றிவிசுத்த வாதனை தான் மருவுஞ்சீவன் முத்தரலால்
ஊற்ற மடநெஞ் சினர் பிறவியுறு வாதனையின் பெயர்
சங்கம்' (உபசா: 69).

சங்கத்தியாகம் செய்தால் குடும்பமயக்கம் நீங்கும் என்றும், அதனால் சீவன் முத்தி நிலையை அடையலாம் என்றும் குறிப்பிட்டுள்ளார் (உபசா: 67).

## 4.2.1.6.1. சங்கத்தை நீக்குவதற்குரியவழி:

'பிரியகுயை யிடராதி பீடியாம னிற்றிலெனில்
விரியுமாசை பயங்கோப மிலனாய்ச் சங்கம் விட்டவனீ

கரியதுயரா விளையாது கலந்தசுகத்தான் மகிழாது
புரியுமாசை வசம்போகா திருக்கிற்சங்கம் போக்கினை நீ'
(உபசா: 70)

எனச் சங்கத்தை நீக்குவதற்குரிய வழிகளைப்பற்றி குறிப்பிட்டுள்ளார்.

## 4.2.1.7. அஞ்ஞானி:

அஞ்ஞானி என ஆசிரியர் வஞ்சகர்களையும், சடர்களையும் மூடர்களையும் சுட்டியுள்ளார். அவர்களை இழிந்தோர்கள் எனவும் தெளிவுறுத்தியுள்ளார். அஞ்ஞானிகளின் இயல்புகளைக் கூறாமல் அவர்களின் வாழ்க்கை நடைமுறைகளை மட்டுமே இந்நூலில் குறிப்பிட்டுள்ளதைக் காணப்படுகிறது.

உலகமானது அஞ்ஞானிகளுக்குத் துன்பமாகவும் கரை காணாத ஆழம் உடையதாகவும், அளவில்லாததாகவும், ஆசையினால் எண்ணுதற்கரியதாகவும், சாந்தமுடையதாகவும், எல்லாமாகவும், நினைவு தோன்றாது இருக்கின்ற சச்சிதானந்த வடிவமாகவும் இருக்கிறது (புசு: 10). திடமான சமத்துவமனத்தில் சேர்ந்தவர்கள், உடல் இருக்கு மட்டும் கன்மேந்திரியாங்களோடும், பொருந்தாதவர்களாயின் அவர்கள் ஞானிகளல்லாத வஞ்சகர்களாவர்கள் (சிகித்: 190).

'புந்திப்பார்வைக் கெட்டுவதாயப் புகலாபத்தெல்லா மிறந்த
விந்தப்பொருளை மோகத்தால் எய்தாதவர் சீசியிழிந்தோர்' (இட்சு: 6.1,2)

என்றும், 'மூடர்க்கு உலகம் திர நிலையாம்' (மானு: 18.4) என்றும், மூடர்களுக்கு எவ்வளவு அறிவுரை செய்தாலும் பயன் படாது என்றும் அஞ்ஞானிகளின் நிலையை விளக்கியுள்ளார்.

அஞ்ஞானிகளும் முயற்சி செய்தால் ஞானத்தைப்பெறலாம் என்றும் குறிப்பிட்டுள்ளார் (உபசா: 2). எனவே முயற்சியே எல்லாவற்றிற்கும் உறுதுணை ஆகும்.

## 4.2.1.8. ஞான நூற்கள்

குருவுக்கு அடுத்தபடியாகப் பெருமைப் பெறக் கூடியவை ஞானநூற்களேயாகும். ஞானநூற்களின் பெருமைகளையும் ஞானவாசிட்டம் கூறுகிறது.

'திதமுற அத்தியாத்துமத்துவ நூலே பிறவிநோய் தீர்ப்பது'
(சிகித்:6.4)

என ஞான நூற்களினால் பிறவி நோயைத் தீர்க்கலாம் என்றும், தன்னறிவால்தானே எல்லாவற்றையும் அறிந்துகொள்ள வேண்டும் என்றும், அதற்கு உறுதுணையாக இருப்பது நூற்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

'ஆசான்மொழியான் நூற்பொருளால் அன்றிப் பெறவும்
அரிதாகும்' (தேவ: 58.1)

என்றும்,

............ 'பன்னூற் பொருளாற் குருமொழியாற்
தரவுமரிதாந் தன்னறிவாற்றானே அறிந்து பெற
வேண்டும்' (தேவ: 57.34)

என்றும், ஞானநூற்களினால் முத்தி அடையலாம் என்றும் நூலால் அறியமுடிகிறது.

### 4.2.1.9 ஞானத்தின் பயன்:

ஞானத்துக்கு எங்கும் வியாபித்திருக்கும் தன்மை உண்டு என ஞானத்தின் சிறப்பை நூல், முழுக்க ஆசிரியர் தெளிவுபடுத்திருப்பதைக் காணலாம்.

1. ஞானத்தால் அன்றிவேறு எதனாலும் பாவத்தை நீக்க முடியாது,

   'உரைக்கின்றேன் வெம்பவத்தை ஞானத்தால் அன்றி
   மாய்க்கப் பின்னையொரு நெறியில்லைப் பாசத்தாற்
   பிணிப்புண்ட பிணிநெஞ்சுக்கே'(வீத:1.3,4).

2. பாவ மின்மையுடன் மாசின்மையாய்ப் பூரணமாகிய தனது ஞானத்தில் பொருந்துதல் எப்போது உண்டாகுமோ அப்பொழுதே பிறவி மயக்கத்துக்கு மூலமாகின்ற பேதமானது நீங்கிவிடும் (உத்:7).

3. ஞானமே தெய்வம்; அதுவே முத்தி (தேவ: 20.4).

4. ஞானமானது எந்தநூலுக்கும் எட்டாதது. சகலகருத்துள்ளும் இருக்கும். சத்தசத்தின் மத்தியில் சத்தா சாமானிய வடிவமாயிருக்கும். நிந்திக்கப்படாத ஞானமானது விதற்ப வடிவமானால் ஞானவடிவை இழந்து வேறாகும் (தேவ: 24).

5. ஞானமே இழிவற்ற தியானமும் ஆராதனையும் ஆகும். ஞானதேவ ஆராதனை செய்தால் பயன் உண்டு (தேவ: 37, 29, 40).

4.2.2.

ஞானம் வீடுபேறடைவதற்கு ஒரே நேர்வழி என்று அத்வைதம் குறிப்பிடுவதற்குக் காரணம், வீடுபேறடைதல் என்பது புதிதாக அடையவேண்டிய ஒன்றன்று. வீடுபேறடைதல் ஆன்மாவிலிருக்கின்ற இயல்பானதன்மையே. அதனால் தான் ஞானவாசிட்டத்தில் 'உணர்வே தெய்வம்' என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இந்த பேருண்மை தெரியாதிருப்பதற்குக் காரணம் அறியாமையே. அறியாமையைக்களைய வல்லது ஞானம் ஒன்றே யாகும்.

ஞானமே எல்லாவற்றிற்கும் மூலதனமாக உள்ளது என்று ஞானவாசிட்டம் குறிப்பிட்டிருப்பது போன்று திருமந்திரமும் விளக்கியுள்ளது.

'ஞானத்தின் மிக்க அறிநெறி நாட்டிலில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே'

(திரு: 1467)

4.2.3. ஞானத்தைப் பற்றி இராமன் முழுமையாக அறிந் திருந்தாலும் அவனது பற்றற்ற நிலையாகிய மாயை அவனை மறைக்கச் செய்து விட்டது. அந்த மாயையை மாற்ற வேண்டி விசுவாமித்திர, வசிட்டர்கள் ஞானத்தின் முக்கியத்துவத்தை ஞானிகளின் வரலாற்லோடு, கருத்துக்களோடு ஒப்பிட்டு எடுத்துக் கூறியுள்ளதைக் காணமுடிகிறது. ஞானத்தை அடைய குரு, ஆசிரியர், சத்சங்கம், நூற்கள் போன்றவை தேவை என்று வலியுறுத்தியுள்ளனர். பிறவி மயக்கத்தை மாற்ற ஞானத்தில் சிறந்த நெறி இல்லை என்ற கருத்தும், அத்வைத கேட்பாட்டின் கருத்தாகிய பிரம்மத்தை அடைய ஞானமே வழி என்ற கொள்கையும் நூலில் வலியுறுத்தப்பட்டுள்ளது.

## 4.3. மனம்:-

4.3.0. மனத்திற்குச் சரியான விளக்கம் இதுவரையாராலும் வரையறுக்கப்படவில்லை. பலரும் பலவிதமாக விளக்கியுள்ளனர்,

4.3.0.1. சார்வகர், மனமானது உடலினின்றும் வேறல்ல; உடலிலேயே ஏற்படும் உணர்ச்சியே மனம் என்பர். நையாயிகர் வைசேடிகர், மீமாம்சகர் போன்றவர்கள் மனம் என்பது ஒரு பொருள் என்றும் அதற்குச் சலனம் முதலிய செய்கைகள் உண்டு என்றும் கூறுவர். சுகதுக்காதி பிரத்தியட்சம் ஏற்படுவதே உடலினின்றும் வேறாகாத மனமிருப்பதற்குச் சான்று என்பர். சுகாதி பிரத்தியட்சத்திற்குக் காரணமே மனந்தான். அதை உள் இந்திரியம் எனலாம். மனத்துடன் கூடிய இந்திரியம் அறிவைக் கொடுக்கும், மற்றவை கொடா. இம்மனம் அணுவானது ஆன்மா மனத்துடன் சேர்ந்தால் அந்தர சுகாதி ஞானங்கள் ஏற்படும். ஆன்மா மனத்துடனும், மனம் இந்திரியத்துடனும், இந்திரியம் புலனுடனும் சேர்ந்தால் வெளிப் பிரத்தியட்சம் (காட்சி) ஏற்படும்.

4.3.0.2. சாங்கியம், யோகம் என்னும் இரண்டு மதங்களிலும் மனம் பற்றிய கொள்கையில் வேற்றுமை கிடையாது. சமமான உலகிற்கு மூலப் பிரகிருதி என்ற பிரதானம் மூலகாரணமாகும். அதில் இருந்து புத்தி என்ற தத்துவம் உண்டாகிறது. புத்தியிலிருந்து அகங்காரமும், அகங்காரத்திலிருந்து பதினொரு இந்திரியங்களும் உண்டாகின்றன. அவற்றில் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, மனம் ஒன்று இந்த மனம் இருவிதமான இந்திரியங்களையும் அடக்கி ஆள்வதால் இதை ஞானேந்திரியம் என்றும் கன்மேந்திரியம் என்றும் சொல்லலாம். மனத்துக்குச் சங்கற்பம் (எண்ணம்) என்ற ஒரு வேலை தான் உண்டு. மற்றதத்துவங்கள் போல் இதுவும் சத்துவம், இராசதம், தாமசம் என்ற முக்குணங்களுடன் கூடியது. இந்திரியங்கள் வழியாக மனம் வெளியே சென்று அந்தந்தப் பொருள் உருவமாக ஆகிறது. சுகதுக்கம், நினைவு முதலியவை மனத்திற்குள்ளேயே உண்டாகும் விருத்திகளாகும்.

4.3.0.3 அத்வைத மதத்தில் மனம் என்பது சாங்கியர் சொல்வன போலப் பிரமாணம், விபரீதஞானம், விகற்பம், நித்திரை, மிருதி என ஐந்து விருத்திகளையுடையது. வெளிச் செய்தியை அறியும் போது கண் வழியாகப் பரிணமிக்கிறது. பஞ்ச பூதங்களின் சத்துவகுணாமிசத்தினைப் மனமுண்டாகிறது. ஞானம், சுகம், துக்கம், வெறுப்பு, தைரியம், காமம், குரோதம்

முதலியவை எல்லாம் மனத்தின் வேலைகளே. இந்தமனம் எல்லாப் பொருட்களையும் அனுபவித்து, அந்தந்தச்சமகாரியங் களைத்தன்னிடம் அடக்கிக் கொண்டிருக்கிறது. ஆன்மாவுக்கும் மனத்துக்கும் வேற்றுமை அறியாமல் அது தன்னுடையது என்கி றோம். ஒருடம்பை விட்டு வேறொருடம்பிற்குச் செல்லுங்கால் மனமும் ஆன்மாவுடன் செல்லும். மோட்சகாலத்தில் மனம் அழிந்து விடும். மனத்திற்கு ஞானசத்தி, கிரியாசத்தி என்று இரு விதமான சத்திகள் உள. மனம் ஓர் இந்திரியம் என்று சிலரும்; அது இந்திரியம் அன்று என்று சிலரும் கூறுவர். மனம், புத்தி, அகங்காரம், சித்தம் போன்ற பெயர்கள் எல்லாம் மனத்திற்கு வெவ்வேறு விதமான வேலைகளைப் பொறுத்து ஏற்பட்டி- ருக்கின்றன.

4.3.0.4. மனத்தின் சேர்க்கையால் ஆன்மாவில் ஞானம், காமம், குரோதம் முதலிய செயல்கள் உண்டாகின்றன. மனத்திற்கு வேறு செயல்கள் இல்லை. இது இதயப் பகுதியில் மாத்திரமே உள்ளது. சந்தேகம், நிச்சயம், அபிமானம், நினைவு முதலிய குணங்கள் ஆன்மாவுக்கு ஏற்பட மனம் உதவுகிற படி யால் அந்தந்தக் குணங்களை உண்டு பண்ணும் போது மனத்திற்கு அந்தந்தப் பெயர்கள் ஏற்படுகின்றன. இந்த மனம் ஆன்ம சம்சார மோட்சங்களை அனுபவிக்கக் கருவியாகிறது. இது மோட்ச காலத்திலும் ஆன்மாவுடன் இருக்கிறது என் விசிட்டாத்வைத மதத்தினர் அணுப்பரிமாணத்தை உடையது என்பர். துவைத மதத்தில் மனம் அணுவானது என்பர். அதற்கு மனம், புத்தி, அகங்காரம், சித்தம், சேதனை என்ற ஐந்து வேலைகள் உண்டு என்பர்[24]. மனம் என்பது மநத்வ சாமான்ய அணுபரிமானம், ஆத்மசையோகி, உள் இந்திரியம், இன்பம் முதலிய சாட்சாத் காரத்திற்குக் காரணம், நித்தம் சங்கியை முதலிய ஐந்து குணமுடையது. அது பரத்வ அபரத்வ வேக முடையது என்பர்[25].

### 4.3.1. ஞானவாசிட்டத்தில் மனம்

4.3.1.0 ஞானவாசிட்டத்தில் மனத்தைப் பற்றிய விளக்கங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. மனத்தின் இயல்பு, வடிவம், அதன் வளர்ச்சிக்கும் நாசத்துக்கும் காரணம், அதனை மாற்று

வதற்குரிய கருவிகள், மனத்தை அழித்தவர்கள் மனம் நசித்தால் அடையும் நிலைகள் போன்றன இந்தப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

### 4.3.1.1. மனத்தின் இயல்பு:-

உயிர்கள் யாவையும் உள்ளுற'தான்' என்று நினைக்கின்ற பாவனையே மனம் என்றும் அகம்பாவமே மனம் என்றும் கூறுவர்.

'தாவுற்றெழுந்த பேதைமையே மனமாம்' (உபசா: 12.3)
'தொடர்மனமே தென்னின் மெத்துமாகம பூடணர்
உரைத்தது விசையுயிரசைவாகும்' (வீத: 29.4)

என மனத்தைக் குரங்கைப் போலத்தாவுகின்றது என்றும் நிலையாக இல்லாது தொடர்ந்து செல்லும் என்றும் அறியமுடிகிறது.

'பல்லவங்கடனையசைக்கும் பவனன் போலமனம்'
(பிரக: 40.1)

என்றும், தானல்லாததைச் சொல்லுகின்ற பொருள் எது என்னும் கருத்தைக் கேட்கின்ற அதுவே மனம் (உபசா: 28) என்றும், உள்ளதாகிய பிரம்மத்துக்கும், இல்லாததாகிய உலகத்துக்கும், மத்தியிலிருந்து அறிவிலும் சடத்திலும் பொருந்தி அலைந்து கொண்டிருப்பதே மனம் (உற்:18) என்றும் கூறுவர்.

### 4.3.1.2. மனத்தின் நிலை:

மனமானது அளவற்ற பிறவிகளைக் கொடுக்கின்ற வாசனையாகும். மனத்தைச் சாத்துவிதம் என்றும். ஞானமில்லாத மனம் என்றும் (சிசித்: 158) கூறுவர். மனமானது இடத்திற்கும் செயலுக்கும் ஏற்றவாறுமாறும் நிலையை உடையது.

இதனை ஆசிரியர்,

'தியக்கு நெஞ்சகந் திரநிலையன்றியே சிறுசருகென
வோடும்
பயக்கு மின்பமில் கடநின்றுபடமுறும் படநின்று
கடமெய்து
மயக்கமேவும் பல்பொருள்களிற்போய் விழு மரங்களிற்
குரங்கே'(வீத: 48.2-4)

எனக்கூறியுள்ளார். மனத்துக்கு நாட்டுப்புறங்களில் பயன்படுத்தும் 'மனம் ஒரு குரங்கு' என்ற சொல்லை ஆசிரியர் அவ்வாறே பயன்படுத்தியுள்ளார்.

### 4.3./.3. மனத்தின் வடிவங்கள்:

4.3.1 3.0. சகல சத்திகளையும் உடையதாய் முடிவற்றிருக்கின்ற ஆத்மாவானது சங்கற்பத்துடன் கூடுகின்ற உருவமே மனம். சத்தும் அசத்துமாகிய இரண்டின் மத்தியில் உண்டாகி, செயல்களோடு பழகும் பாவனையும் மனத்தில்உருவமாகும். (மனத்:8).

> 'மனம்புரியட்டக வடிவமுடையது' (தாகு:36.3)
> 'மனம் வில்வக் கனியைப்போலானது' (தாகு:37.1)
> 'மனத்தின் வடிவம் சங்கற்பமே' (லீலை: 24.2)

பற்றுதலும் விடுதலும் பொருந்தின இரண்டும் மனத்தின் வடிவமாகும் (புண்: 4). அவித்தை மயமாயும், உருவமில்லாததாயும் எல்லா இடங்களிலும் சேர்ந்திருக்கின்ற மனத்திற்குப் பெயர் மாத்திரமே யன்றி ஆகாயத்தைப்போல அகத்திலும் புறத்திலும் வடிவமில்லாததாகும். குற்றமற்ற மெய்யும் பொய்யும் என்கின்ற பொருளின் தோற்றமுமே மனமாகும். இவ்வாறு மனத்தின் வடிவங்களை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். மேலும் மனமே பல நிலைகளாகத் தோன்றும் என்பதனை கீழ்வரும் சான்றுகளால் அறியலாம்.

### 4.3./.3./. மனமே சீவன்:

> 'தளர் நெஞ்சாஞ் சீவனும் அதுவே; -(உபசா:10:2)

### 4.3./.3.2. மனமே வாசனை:

> 'உன்னுமனம் எம்மட்டொழியாது உறவாதனை
> அம்மட்டழியாது,
> அன்னபடி வாதனை எம்மட்டழியாது உளம்
> அம்மட்டழியா' (உபசா: 48.3,4)

### 4.3./.3.3. மனமே சித்து:

> ............'சித்தம் உண்டாகைக்
> கனதுக்கமதாஞ் சித்தமறிற் கனத்தசுகமாஞ் சித்தத்தை'
> (நிரு: 4.2,3)

என நூல் வழி தெளிவுபடுத்தப் பட்டுள்ளது.

### 4.3./.4. மனத்துக்கு வித்து:-

மனம் என்னும் மரத்துக்கு இரண்டு வகையான வித்துகள் உண்டு என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

'மல்லன்மன மெனுமரத்துக் கிரண்டு வித்தா மாவியசை
வொன்றாம்வா தனையழுத்தஞ்
சொல்லுமிரண்டாவதாமென்று கொள்வாய்'
(உபசா: 18. 3,4).

பிராணனசைவும், வாசனையும் மனத்தின் வித்து என அறிய முடிகிறது.

## 4.3.1 5. மனத்தின் வளர்ச்சி:

மனத்தின் வளர்ச்சிக்குரிய சிலவற்றை ஆசிரியர் வெளிப் படுத்தியுள்ளார் (உத்: 9–11).

1. உடலிலுள்ள ஆசையை அறிவினால் தான் அல்லாத அனாத்மாவை ஆத்மா என்று நினைத்தால் மக்களும், மனைவியும், குடும்பமும் என்கின்ற நினைப்பினால் மனம் வளரும்.

2. விரிகின்ற அகங்காரத்தினாலும் மமதையான களங்க விளையாட்டினாலும் தன்னுடையது என்கின்ற பாவனையினால் மனமானது வளரும்.

3 ஆதிவியாதியினது விரிவாலும், அவை மாறிக்குடும்ப வாழ்வில் நம்பிக்கையுடன் தங்குதலினாலும், நீக்குதலுக்கும், பிடித்தலுக்கும் ஊதியமான முயற்சியினாலும் பிறவிதோறும் மனமானது வளரும்.

4. மாதர், இரத்தினங்கள் (மணி), தனம் முதலானவற்றினால் உண்டாகுகின்ற ஆசையினாலும் இலாபத்தினாலும் மனம் வளரும்.

5. துராசை என்கின்ற பாலைப்பருகி, போகம் என்கின்ற வாயுவினால் பலம் உண்டாகி இச்சிக்கப்பட்ட வழியினால் சஞ்சரித்தால் மனம் வளரும்.

## 4.3.1.6. மனத்தை மாற்றுவதற்குரிய கருவிகள்:

4.3.1.6.0. மனத்தை 'வாவுமனம்' (உற்: 5.1) என்று கூறுவதாலும், குரங்கைப் போலத்தாவிக்கொண்டிருப்பதாலும் நிலைப் படுத்துவதற்குப் பலவழிகளைக் கையாளுவர். அவற்றுள் சில வற்றை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

1. அறிஞர்கள் அறிவுரையாலும், வேதநூற்களாலும் தான் என்னும் நினைவைக் கொண்டுள்ள மனத்தை மாற்றலாம் (உற்; 3, சிகித்: 156).

2. 'இரும்பாலிரும்புதிருந்துவ போலியற்று மனத்தரன் மனந் திருத்துய்' (உற்: 4.1)

3. தேவபூசை செய்தாலும் மனத்தை மாற்றலாம் (தேவ:44).

4. ஆத்ம விசாரணையினால் மன அழுக்கு இமைப்பொழுதில் மாறும் (உற்: 12; சுரகு: 20; உபசா: 61).

'பொருவறுதன் விசாரத்தால் இமைப்போதின் மனவழுக் கப் போகா நிற்கும்' (சுரகு: 20.3)

5. 'காண்பவையே மனத்துக்கு என்றுந்த விராத துயரசம்' (உபசா: 19.3) எனப்பொருட்களைப் பாராது இருந்தால் மனம் மாறும்.

6. அறிவு எவன் என்னும் படையால் சந்தேகக் கெட மனத்தை மாற்றலாம் (உற்: 7; இட்சு: 31, சிகித்: 140).

7. பஞ்ச ஆசைகளையும். ஐம்பூதங்களையும் பொடியாக்கி னால் மனம்மாறும் (உத்: 11).

8. மனத்தை நால்வகை உத்திகளால் அடக்கலாம்.

'ஊனநன்மையா லல்லது வெலப்படா துள்ளம்
வேகமத்தமா வங்குசத்த லால்வெலப் படுமோ
வேகபோதத்தை யறிதனல் லவருட னெய்தல்
சோகவாதனை விடலுயிர் தோன்றுறாதொடுக்கல்'
(உபசா: 56).

9. வாதனை ஒழிவால் நினைவு திரிந்து உபசாந்திதரும். மனோநாசம் உண்டாகும். பற்றுதலும், அதை இல்லாததாகப் பாவித்தாலும், விசாரணை செய்து உண்மையாகிய பொருளைக் காணுதலும் மனோநாசமாகும் (உபசா:26).

10. மனத்தை அடக்கும் கருவியாக தவத்தையும், நாற் கருத்துக்களையும், மோட்சத்தையும் குறிப்பிட்டுள்ளார் (உற்: 12).

11. மனத்தைக் கெடுப்பதற்குச் சாந்தி வேண்டும் என்றும், பற்றை அல்லது பந்தத்தை அகற்ற வேண்டும் என்றும் (விந: 21) உரைப்பர்.

12. மோகம் என்னும் சக்கரத்தையும் (வாதி: 33), சங்கற் பத்தையும், ஆசையையும், கழிந்ததை நினைப்பதையும் கணந் தோறும் (உத்: 3) தவிர்த்தால் கேடுற்ற மனநாசமானது அதுவே யாகும்.

18. சங்கற்ப நாசத்தினால் மனோநாசம் எளிதாகத் தோன்றும் (சனக: 2).

## 4.3.1.7. மனம் நசித்தால் அடையும் நிலை:

4.3.1.7.0. மனம் நசித்தால் அல்லது மாறினால் முத்திநிலையும், நிருவாண நிலையும், அத்வைதநிலையும், ஆனந்த நிலையும் கிடைக்கும் என்று குறிப்பிடுவர்.

1. திடங்கொண்டு காண்பவற்றை நீக்கினால் மனமானது மாறி முத்தி ஏற்படும் (புண்: 9); (நிரு: 53).

2. ஆசைகள் அனைத்தையும் கெடுத்துப் பிறப்பின் அச்சத்தை மாற்றி மனத்தின் எண்ணம் நாசமானால் மோட்சம் உண்டு (மாவலி: 10,54; வேதா: 12).

3. ......................... 'மனமே இறக்கில் வானோரும்
அன்பினையப்பர் நலனுண்டாம் அங்கே சமமாமதியுதிக்கும்
என்புகுளருஞ் சாந்தியெழிலெய்துந் தடைதீர் பெருமையுறும்' (இட்சு: 4. 2-4)

4. 'மனமா நினைவே சங்கற்ப மனத்தின் நினைவற்றது சிவமே' (நிரு: 57.4).

5. 'மனமிறந்தாற் சத்தாய் ஒன்றாஞ் சமநிலையாம்' (மானு: 24.4).

6. மனமிறந்தால் பிறப்பென்கின்ற மரம் மாயும் (சனக: 22).

7. 'அறிதிமரத்துக்கு ஈரரிவாள் ஆக்கை வல்லிக்கு எரிபுகுவோ மறுகுகின்ற மனத்துன்ப மருவாதவரை யமன் அணுகான் (புசண்: 75. 1,2).

8. சலனமற்ற அந்தராத்மாவினால் ஆசைகளினின்று மனத்தைத் திருப்பி, இசையத்தக்க வற்றைச் செய்து, ஆசையில்லாமல் மனம் இளைப்பாறி, சாந்தமென்றினால் அசுத்தமனத்தை ஆகாசத்தைப் போல நின்மலமாகச் செய்து, சலனமற்ற மவுனியாகவும் ஒருவனாகியும் இருந்தால் உபசாந்த வடிவமாகும் (பகீ: 1).

9. மனத்தை விட்டுவிடுவதே சகல தியாகமாகும் (சிகி: 195), அதுவே பிரம்ம ஆநந்தமாகும் (திரு: 4).

10. மனம் நசித்தால் பரம பதமடையலாம்.

........குரவனன்னூ லகல்கிலாச் செழிவால்வன்பிற்
பேதமை யுளத்தை மாய்ப்பாய்ப் பிராணனைத் தடை செய்தாலும்
வேதன வசைவுதீர விடுகிலுஞ் சித்தம்போகுந்
தீதறு மதுவேமேலாம் பதமெனச் செப்புமன்றே'
(வில்வ:5).

### 4.3.1.8. மனமே உலகம்:-

4.3.1 8.0. மனத்தினது எண்ணத்தினால் உலகம் என்ற ஒன்று தோன்றுவதாக அத்வைத வாதிகள் கூறுவர் இந்தக்கருத்தையே ஞானவாசிட்டமும் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளது.

4.3.1 8.1. 'அலையுமந்தமனமுலகாம்' (உற்:12.1)

'உலகங்கள் யாவும் மனத்தின் வடிவமே' (ஞான: 25.4) மெய்வடிவம் இல்லாத விண்ணில் கானல் நீர் விரிவதுபோல மனநிலனவால் உலகம் விரிந்து தோன்றும் (தாசு:9;ஞான:10), மனமே ஆன்மா, மனத்தின் தொழிலே தொழில், தனது வேற்றுமை (விகற்ப) மிகுதியினால் தனித்த மனமே உலகமாகும் (சுக்:24). மனமானது பிரம்ம காரணமாய் உலகங்கள் யாவும் தோன்றும் (கற்:14). சஞ்சலிக்கின்ற மனது தானே தனது நினைவால் உலகத்தை உண்டாக்கும் (ஞான:8).

'கனத்தசக மனத்தசை வாற்கடிது தோன்றும்' (வீத:27.4). இவ்வாறு மனம் நிறைந்திருந்தால் உலகம் தோன்றும் என்று அறியமுடிகிறது.

### 4.3.1.9. மனமே எல்லாம்:-

மனமானது ஆன்மாவை அடையவும் பிரம்மத்தை அடையவும் கருவியாக இருப்பது போல எல்லாச் செயலுக்கும் காரணமாக இருக்கிறது என்று ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார்.

மனத்தின் வலிமையினால் கற்பகாலம் ஒரு கணப்பொழுதாகவும் கணம் ஒரு கற்பகாலமாகவும் தோன்றும் (சித்:3). எல்லாவற்றிலும் சேர்ந்திருக்கின்ற சிவன் என்றும் பிராணன் என்றும் பொருந்திய நாமங்கள் பல பெற்று பயனுள்ள சடமும் அசடமும் இல்லாததாய், மயக்கத்தில் விரிந்த மனதைச் சத்துக்கள்

'எல்லாம்' என்று சொல்லுவார்கள் (சிகித்:185). கறுத்த மேக மானது சூழ்ந்தால் சந்திரனது காட்சி கண்ணுக்குத் தென்படாது போன்று மனமானது எல்லாவற்றிற்கும் காரணமாக உள்ளது (உத்:8).

இவ்வாறு மனமே சிந்தனை செய்கின்ற அறிவு, பிரகிருதி, மாயை, சங்கற்பம் போன்றவற்றிற்குக் காரணமாக இருப்பதால் மனமே எல்லாம் என்று குறிப்பிட்டுள்ளார்.

### 4.3.1.10. மனமே மாயை:-

மனத்தின் நீங்காத சலனமே மாயை என்றும், அசுத்த வாசனை என்றும் பெயர்பெறும் (உற்:12). துன்பங்களினால் தனது வசந்தப்பி, தன்பிரம்ம வடிவத்தை மறந்து துன்பத்தை அடைகின்ற மனத்தை மாயை என்பர் (தாசு:26). நடுக்கம் வரச் செய்கின்ற மாயையினால் விசாரமுள்ள மனம் வருந்தாது. ஆத்ம விசாரமுள்ள மனது மாயையினால் கெடாமல் சம்பவம் முதலான குணங்களோடு மகிழ்ச்சியை அடையும் (முமுட்:22). மனத்தைப் பொய் யென்றே குறிப்பிட்டுள்ளார் (வைரா:78).

'வினவி நோக்காமையின் சித்தம் மெய்போற் றொன்றும் பொய்யேயாம்' (வேதா:10.1).

### 4.3.1.11. மனத்தினால் ஏற்படும் செயல்கள்:-

1. மனத்தினால் மோகம் உண்டாகும் (சிகித்:15; வைரா:74)
   காதலெனு மனைவியின் பின் செல்கின்ற மனமென்னுங் கடியஞாளி
   பேதைமைமே வியவென்னைப் பிணந்தின்னு மாறுபோற் பிடிங்கித் தின்னும்' (வைரா:75.1,2).

2. மனமானது வீணாக வருத்தும்.
   'மோது பெருங் காற்றினான் முறிந்தெழுந்த துரும்பு போன் மோகமெய்த
   வாதைமனம் பெரும்பாழின் மிகவீழ வதிதூர மலங்கத் தளளும்' (வைரா:75.3,4).

3. ஆசைகள் அனைத்துக்கும் காரணம் அதுவே (வைரா:77).

4. மனம் அறிவைத் தரிசிக்கும் (பாச:5).

5. 'இம்மனமே மிகுமாயைக்கு விளைமுளையே' (உபசா:10.4),

6. மனத்தைப்பேய் என்றும், துன்பத்தையும் அச்சத்தையும், செல்வத்தையும் கெடுக்கும் என்றும் (தேவ:8) குறிப்பிட்டுள்ளார்,

### 4.3.1.12. மனத்தின் வலிமை:-

1. மனமென்னும் வலிய பேயானது அக்கினியிலும் கொடுமை யானது.

2. மலைகளைக் காட்டிலும் கடத்தற்கரியது.

3. நீண்ட வச்சிரத்திலும் வலிமையுடையது.

4. கடலைக்குடித்தாலும் குடிக்கலாம், அக்கினியை விழுங்கினாலும் விழுங்கலாம். ஆனால் இந்த மனத்தை நிறுத்த முடியாது (1-4: வைரா:77).

5. 'மனவன்பேய் உறப்பிடித்தாற் சாத்திரத்தாற் சுற்றத்தான் மாற்றவொண்ணா வினவுறு தேசிகராலும் மீட்பரிதாம்' (தேவ:9:1;2) என்பர்.

6. மனத்தின் காரணமாகத்தான் பொருள் தாமாகவும், அரம் பொருளாகவும் தெரிகிறது (புண்:16).

7. தனம், நட்பு, உறவு, காசி முதலிய புண்ணிய தேசங்கள், தீர்த்தம், ஆச்சிரமம், உடலைவருத்தும் தபசுகள் அனைத்தினாலும் பரகதி அடையமுடியாது, மனசுத்தத்தினால் பரமபதம் உண்டாகும் (மூமுட்:15).

### 4.3.1.13. கற்றறிந்திலார் மனம்:-

கற்றறிவு இல்லாதவர்கள் மனத்தை விடய போகங்களில் செலுத்துவர், அதனால் அவர்கள் மனம் போகங்களில் மூழ்கும் என உணர்த்தியுள்ளார். (மாவலி:35)

### 4.3.1.14 சிறிதறிந்தவர் மனம்:-

சிறிதறிந்தவர்கள் மனத்தை இந்திரிய வசத்திற் செல்லுகின்ற போகங்களில் சிறிதும், குரு ஆதாரணை, ஞானநூற்கள் போன்றவற்றில் பெரும்பங்கும் செலுத்துவர் (மாவலி:36). அதனால் காலப்போக்கில் பக்குவ நிலையை அடைவர்.

**4.3.1.15. சீவன்முத்தன் முதலானவர்கள் மனம்:**

சீவன்முத்தர்களுக்கு மனம் அருவமாகவும், பெத்தர்களுக்கு உருவமாகவும், விதேகமுத்தர்களுக்கு இந்த இரண்டும் இல்லாத தாகவும் தோன்றும் (உபசா: 9) என்பர்.

**4.3.1.16. மனத்தை அழித்தவர்கள்:**

சுகதுக்கங்களில் எள்ளளவும் அசைவுபடாமல் இருக்கும். ஞானிகளுக்குப் பயனின்றிய மனமானது அழிந்தது என்பர் சம்பத்தும், ஆபத்தும், யுத்தியும், அந்தமும், தாரித்திரமும், மதங்களும், பொருந்தினவாய் எவரை வேறுபடுத்தாததோ அவர்களுக்கு மனம் அழிந்ததாகும் (உபசா: 11,12) எனலாம்.

4.3.2. மனமே எல்லாவற்றிற்கும் அடிப்படை என்பதும், அந்த மனத்தைக் கெடுத்தால் அத்வைத நிலையை அல்லது நிருவாண நிலையை அடையலாம் என்பதும் இந்த நூலில் தெளிவுபடுத்தப் பட்டுள்ளது. மேலும் மனம் கட்டுப்படாது அலையும் தன்மையது என்பதில் ஐயமில்லை. எனினும் பழக்கத்தாலும், வைராக்கியத் தாலும் (ராகமின்மை) மனத்தை அடக்கலாம்[26] என்றும், மனம் என்னும் பாம்பைக் கட்டி ஆட்டத்தெரிந்து கொள்வோமானால் பிறகுதம்மை இறைவன் வந்தடைவது திண்ணம்[27] என்றும் கூறப்படும் கருத்துக்களுக்கு அணிசெய்வதாக இந்நூலில் செய்திகள் அமைந்துள்ளன.

4.3.3. இராமனது பற்றற்ற நிலை உருவாவதற்குக் காரண மாக மனத்தைக் கூறலாம். இராமன் பல இடங்களுக்குப் புண்ணிய யாத்திரை சென்றுவந்ததினால் (பல சிந்தனைச் செய்திகள் மனத்தில் பட்டிருக்கலாம்) அவனது மனம் எதிலும் பற்று இல்லாமல் இருந்தது எனவேதான், முனிவர்கள் அவனது மனத்தை ஒருமைப்படுத்தவும், பிரம்மத்தின பால் செலுத்தினால் ஏற்படும் நன்மைகளையும், இல்வாழ்க்கையில் ஈடுபடச் செய்யவும், மனத்தை மாற்றினால் ஏற்படும் பலன்களையும் எடுத்துக் கூறியுள்ளார்கள் எனலாம்.

**4.4. சீவன் முத்தன்:**

4.4.0. முனிவர்களைக் காட்டத்துவமுனி, சீவன் முத்தன் என இரு பிரிவாகப் பிரிப்பர். பிரம்மானந்தத்தை அடைவதற்கு

இந்த உடல் அழிய வேண்டும் என்பதில்லை. இந்த உடல் இருக்கும் போதே ஆன்மா விடுதலை அடைய முடியும்[28]. இந்த நிலையில் உள்ளவர்களேயே சீவன்முத்தர்கள் என்பர். சீவன் முத்தர்களைப்பற்றிக் குறிப்பிடும் எல்லா நூற்களும் ஒரே கருத்தை அடியொட்டியுள்ளன.

4.4.0.1 குருவருளால் ஞானத்தை அடைந்து விருப்பும் வெறுப்பும் அற்றுப்பரம் பொருளையே பார்த்திருப்பவர் சீவன் முத்தராவர். அவர்களுக்கு உடம்பிருந்தாலும் மனக்குற்றம் இல்லாதவராவர் என்ற கருத்தைச் சிவஞானசித்தியார் சுபக்கமும் (8:29) சிவஞானபோதமும் (பன்னிரண்டாம் சூத்திரம்) விளக்கியுள்ளன.

4.4.0.2. தாண்டவராய சுவாமிகள்,

*'சென்றது கருதார் நாளைச்சேர்வது நினையார் கண்முன்*
*நின்றது புசிப்பார் வெய்யி லிலவாய்விண் விழுது வீழ்ந்தது*
*பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையா யொன்றும் பாரார்*
*நன்றுதீ தென்னார் சாட்சி நடுவான சீவன்முத்தர்'*
(கை.ந.த.வி.ப: 91).

எனக்கைவல்லிய நவநீதத்தில் குறுப்பிட்டுள்ளார்.

4.4.0.3. தம்சொருபத்தை உணர்ந்தவர் எந்தத்துன்பமும் இல்லாதவராவார். உடலுக்குத்தான் துன்பம்; அறிவுக்குத் துன்பம் அன்று எனத்துன்பம் நீங்கியவர்களே சீவன்முத்தர். சீவன் முத்தர் உலகம் அறியாது பேய் போலத்திரிந்தாலும் திரிவர்; மற்றவர்களைப்போல உலகில் வாழ்ந்தாலும் வாழ்வர். அவர்கள் ஆசை அற்று வாழ்ந்து ஆனந்தம் அடைவர்[29] இறைவனே செயல் அனைத்துக்கும் காத்தா என்று உணருபவன் சீவன் முத்தனாகிறான்[30]. ஞானவாசிட்டத்திலும் இக்கருத்து களைக் காணலாம் அவற்றை வகைப்படுத்தி அதன் பிறபிரிவு களும் இந்தப்பிரிவில் கொடுக்கப்பட்டுள்ளது.

4.4.0.4. உலகத்தின் தன்மையை எதார்த்தமாக அறிந்து தன்னிடத்தில் ஆத்மாவைச் சிந்தித்து உலகத்தாருக்குக் கிரியை

யில் ஒப்பாய் இருந்தாலும் அகத்தில் அமைவு உள்ளவனே சீவன் முத்தனாவான் (வேதா: 3).

### 4.4.1. காட்டத்தவமுனி:

செய்கின்ற பிராணாயமத் தொழில்களில் திடமான சிந்தையைப் பொருத்தி இந்திரியங்களை மிகுந்த வலிமையினால் வெற்றி கொண்டவனே காட்டத்தவமுனி (வேதா: 2) என்பர்.

### 4.4.2. சீவன்முத்தனின் இயல்பு:

சீவன்முத்தனின் இயல்பை ஆசிரியர் வித: 10,11,12; புசுண்; 1; இட்சு: 30,41; கசன்:13; புண்: 20,21; சுகர்: 21; மானு:4; ஞான: 37,38 போன்ற பாடல்களில் விளக்கியுள்ளார். ஞானவாசிட்டத்தில் சீவன்முத்தனுக்கு முக்கியத்துவம் கொடுத்திருப்பது மற்றநூற்களில் இல்லாத சிறப்பாகும்.

> 'போகமுறு பாவனையாற் பொருளல்லாத பொருளிலெழு
> பந்த நிலை பொருந்துவன் பாஞ்
> சோகமுறு பாவனைதான் சாந்தமாகிற் றுயர்பந்த
> மிகத்தேய்ந்து துலைந்து போகும்
> இராகவனே வாதனையி னோர்மைவீடா மிகப்பொருளின்
> வாதனையினி றுதலைபந்தஞ்
> சேகறவென் றவர்க்கேது வின்றிப்போகத் திரள்
> வெறுப்பா மேலவரே சீவன்முத்தர்' (சுகர்: 21)

என்றும், பரந்தவிடய இச்சை நீங்கி வாழ்பவர்களே சீவன் முத்தர்கள், வேறு ஒன்றும்இல்லை. என்று அகத்தில் நாடிக்காணுகின்ற விடயங்களைத் தான் என்னும் அகம்பாவத்தை நீக்கிய தேகப்பிரிவு இல்லாதவனே சீவன் முத்தன் (புசுண்: 1) என்றும் பலநிலைகளில் சீவன் முத்தர்களைப் பற்றி ஆசிரியர் குறிப்பிட்டுள்ளனர்.

### 4.4.3. சீவன்முத்தன் குணங்கள்:

1. கிரமமாக (ஒழுங்காக) முதிரும் வசனத்துக்கு எட்டாதவராய் உலகத்தாரைப்போலக் காணப்படுவர்.

2. அறிவினால் ஒரு கருமத்திலும் பிடிப்பற்றவராய் இருப்பர்.

3. சுகதுக்கங்களில் ஈடுபடார்.

4. கிடைத்ததை அன்பாக அனுபவிப்பர்.

5. ஒழுக்கத்துக்கு வேறாகிய போகங்களிடத்தில் எள்ளள வும் சம்பந்தப்படாது இருப்பர் (1-5 முமுட்: 28).

6. மறுபிறப்பைக் கொடுக்கின்ற வாசனையை நெருங்க மாட்டார்.

7. உண்மையுருவடைந்த மனமுடையவராவார்.

8. சமமாக அறிகின்ற ஞான தீரத்தையுடையவர்.

9. உடலைவிட்டால் சிதாகாச வடிவத்தை அடைந்தவராவர் (6-9 உபசா: 27).

10. காமாதிகளினால் உண்டாகின்ற விகாரம் (காமக்கவலை) அடைந்தும் ஆகாசத்தைப் போல அற்பமாவார்.

11. அகம்பாவம் என்பதில்லாமல் தொழில்களைச் செய் தாலும் விட்டாலும் அதில் அழுந்த மாட்டார்.

12. உலக நெறிகளைச் செய்தாலும் பிறரைப் போலக் கண்டு குளிர்ந்த தன்மையைச் சார்ந்தவர்களாவார்.

13. மனமும் கருத்தும் இருந்து அற்பமும் பற்றில்லாமல் இருப்பர்.

14. துன்பங்களில் மூழ்கி இன்பங்களில் மேற்கொள்ளாத அறிவின் நிச்சயத்தை உடையவர்களாவார்.

15. இயல்பானவர்களும் அடைந்த சுழுத்தி அவத்தையில் நனவாகவும், நனவு இன்றியும், வாசனையிறந்த சுழுத்தியினால் ஞானத்தைப் பொருந்தினவர்களாவார்.

16. உலகத்தினால் அச்சப்படாமலும், உலகத்தை பயமுறச் செய்யாத மகான்களைப்போலும், குடும்பம்பந்தமற நற்சிந்தனை யிருந்தும் சிந்தனை இல்லாதவர்களைப்போல இருப்பர்

(10-16 ஞான: 37,88).

17. கருமங்கள் செய்தும் செய்யாதவர்போல இருப்பர் (இட்சு:6 2).

### 4.4.4. சீவன்முத்தர்களை அடையாதவை:

மித்தையான சுகதுக்கங்கள் சீவன் முத்தர்களை வருத்தாது (வைரா: 130). ஆசை, பிறப்பு, இறப்பு, கோபம், துக்கம், உலோபம், ஆபத்து இவை அவர்கள் பக்கம் வந்தால் தேய்ந்து போகும் (மாறு: 4).

### 4.4.5. சீவன்முத்தி அடையும் வழி:

ஆத்ம விசாரணை, அசங்கபாவனை பற்றின்மை விலாபினி யாகிய (விலாபம்—கனவு) வளருகின்ற வாசனையைப் பற்றில் லாமல் கெடுக்கும் நிலை, மயக்கமில்லாத ஞானமயமான ஆநந்த வடிவம், நித்திரை விழிப்பாதிகளில்லாத நிலை, சங்கத் தியாகம் இவை எல்லாம் சீவன்முத்தியை அடையும் வழிகளாகும் (இட்சு:35, உபசா:67).

### 4.4.6. சீவன்முத்தரது சக(கூடுதல்)நடையைத்தெரிவித்தல்

சீவன்முத்தன் முக்காலச் செய்கைகளிலும் ஆசை கொள்ளான். எல்லாத் தொழில்களையும் செய்வான். பந்தத்தில் மனம்வையான். கவலை கொள்ளான். பத்திமான்களிடத்து பத்திமானாகவும், வஞ்சகர்களிடத்து வஞ்சகனாகவும் இவை போன்று ஒவ்வொருவரிடத்தும் அவரவர் நிலைப்போல் இருப்பான். செம்மையையுடையவனாகவும், சிறப்பைச் செய்பவனாகவும், தெளிவு உடையவனாகவும், ஞானமுடையவனாகவும், இளைத்த மனம் இல்லாதவனாகவும் இருப்பான். சூரியன் குளிர்ந்தாலும், சந்திரன் கறுத்தாலும், அக்கினி கீழ் நோக்கினாலும் அச்சமுற்று அதிசயப்படான் (வித: 25,26). அவன் எதிலும் பற்றுக் கொள்ளான் (சிகித்: 214). தனையுணர்ந்தவனாக இருப்பான் (சிகித்: 157). சீவன் முத்தனுக்கு மனம் உருவநாசமாயும் அருவமா யும் இருக்கும் (உபசா: 13). சீவன் முத்தனின் கன்ம நிவிர்த்தியை ஆசிரியர்,

'பாவிப்பன யாவையினுமுளம் பற்றாதுயர்ந்தோன்றார
கையின்

றேவிற்குளிர்ந்து நிறைந் தொளிர்வன் செய்ய
கதிரோன்றன்கதிரின்

பூவிற்றொழிலினுலைந்துழலும் பொத்தவுடலாயிலவு
தனை
மேவுதொழிற் பஞ்சோடிப்போ ஞானக் காற்றால்
விசைந்தொருபால்' (இட்சு: 47)

எனக் கூறியுள்ளார்.

### 4.4.7. சீவன்முத்தன் அடையும் பயன்(நிலை):

சீவன்முத்தன் காசியில் இறந்தாலும், புலையர் வீட்டில் இறந்தாலும் பிரம்மபதம் அடைவான். அவன் ஞானத்தை அடைந்தபொழுதிலும் மோட்சத்தை அடைவான் (இட்சு: 63). சீவன்முத்தர்கள் அடையும் நிலை சத்தாசாமானியமாகும் (உத்:69-71) என்பர்.

'தேற்றமாங்காண் பனநீங்கிச் சித்தினிடையே
சித்திறக்கிற்
சற்றுமுயற் கொம் பெனநொய்தாஞ் சத்தா சாமானிய
மதுவே
தோற்றும் புறனுள்ளாய்ப் பலவாய்த் துவக்குமாகு
மிவையனைத்து
மாற்றியகன்று மனநிற்கி லதுசத்தாசா மானியமே'
(உத்.70)

ஆகும் என்பர்.

சீவன்முத்தனாகிய நிலையை அடைந்து அகம்பாவம் விட்டு, தான் என்னும் அகப்பற்றானது கெட்டு, புத்தியில் விகற்பங்கள் யாவும் நீங்கி, ஆத்மபாவனை முதிர்ந்தால் அடைவது கைவல்யம் ஆகும் (திரு: கசன்.11).

### 4.4.8. சீவன்முத்தி அடைந்தவர்கள்:

பிராரதத்தம் (கருமம் மூன்றனுள் இம்மையில் பலனளிக்கும் பழவினை) புசிக்கும்படி முடிவாக வந்த உடலைத் தரிசித்துச் சுத்த வாசனையைப் பெற்றவன் பிறப்பில் அழுந்தான். அவனே சீவன் முத்தி அடைந்தவன் (வைரா: 28), ஆவான்.

### 4.4.9. விதேக முத்தி:

சீவன் முத்திபதத்தை நீக்கி உடல் அழிந்தால் பூரணமான காற்றானது அசைவற்ற ஆகாயமாய் இருப்பது போல, விதேக

முத்தியை அடைவான். அதன் இயல்பானது சர்வமும் பிரம்ம மயமான பவரோட்ச ஞானாத்ம சாட்சாத் காரமாய் விளங்கும் (ஞான: 39,40). இந்த அனுபவமே விதேக முத்தி என்பர்.

### 4.4.10. விதேகமுத்தன்:

விடய இச்சை விட்ட சீவன்முத்தர்களுக்கும், அதனால் பந்தப் பட்டவர்களுக்கும் மேலானவர் விதேக முத்தர் (வித:24).

'மண்டுற்ற நேயமற வாழ்வோரின்பஞ் வருஞ்சீவன்
முத்தராம் வளர்நேயத்தாற்
றொண்டுற்ற வாழுமவர் பந்தமுற்றோர் சொன்ன
மூன்றாமவனே துயமுத்தன், (வித:24.3,4)

என சீவன்முத்தனின் முதிர்ந்த நிலையில் உள்ளவனையே விதேகமுத்தன் என்பர் (விதேகம் என்றால் உடல் விமோசனம் என்று பொருள்).

4.4.11. சீவன் முத்தர்கள் இந்த உலகத்தின் கண் வாழுகிறார்கள். ஆனால் இந்த உலகத்துடன் வாழ்வதில்லை பிராரப்த வினைகளின் முடிவை நோக்கி அவர்கள் காத்திருக்கிறார்கள். இத்தகைய வினைகளால் விளையும் பலன்களிலும் அவர்களுக்குச் சிறிது கூட பற்றுக்கிடையாது. தனது சமநிலையை அல்லது சம நோக்கை அவர்கள் எப்போதும் தவற விடுவது கிடையாது. தன் முனைப்பற்ற குழந்தைகளையும், பைத்தியக்காரர்களையும் சீவன் முக்தர்களுடன் ஒப்பிடலாம். அவர்களின் பரந்த உளப் பாங்கில் செயலுமில்லை, செய்பவனுமில்லை, அனுபவமுமில்லை அனுபவிப்பவனுமில்லை. காலத்திற்கும், இடத்துக்கும் அப்பாற் பட்ட உலகில் அவர்கள் வாழ்கிறார்கள். எனவே காலமும் இடமும் அவர்களைப் பொறுத்த வரையில் பொருளற்றவையே ஆகும். பகுப்பற்றதும் எப்போதும் நிலவக் கூடியதுமான பேரானந்த நிலையில் சீவன்முக்தர்கள் திளைத்துக் கொண்டிருக்கின்றனர் என்பது இந்த நூலால் தெளிவாகிறது.

4.4.12. இராமனிடம் இந்த உலகில் சீவன்முத்தனாக வாழ வேண்டும் என்பதை வலியுறுத்த வேண்டியே சீவன்முத்தனுடைய இயல்புகளையும் அதன் முக்கியத்துவத்தையும் தெளிவாக முனிவர்கள் குறிப்பிட்டிருப்பார்கள் எனலாம்.

## 4.5. ஆத்மா:

4.5.0. 'அன்' என்றால் உயிரளிப்பது என்பது பொருள். அந்த வேர்ச் சொல்லில் இருந்து தோன்றிய பதமே ஆத்மா. புலன்களையும் அந்தக்கரணத்தையும் உயிர்ப்பித்து இயக்கும் ஆதாரத் தத்துவம் ஆத்மாவே. விழிப்பு, கனவு, துக்கம் என மூன்று நிலைகளிலும் விளங்குவதும் அதுவே[31].

4.5.0.1. ஆத்மா என்னும் வடமொழிச் சொல்தான் தமிழில் ஆன்மா என்று வழங்கப்படுகிறது. ஆன்மா என்பது உடலினின்று வேறுபட்டதும்; உடல் இறந்த பிறகு உள்ளதும், உடல் போன பின் பூமியில் செய்த செயல்களின் பலன்களைத் துய்ப்பதுமான மனித ஆவியைக் குறிக்கிறது. உபநிடதங்களிலும் இந்தப் பொருளே ஆளப்பட்டிருக்கிறது. சில சமயங்களில் பிரம்மம் என்பதற்குப் பதிலாக வந்துள்ளது. அப்பொழுது ஆன்மாவின் பொருள் பிரபஞ்சத்தின் மூலதத்துவம் என்பதாகும். ஆன்மா வேறு உடல் வேறு என்றும், அவை இரண்டும் ஒரே பரிமாணம் உடையன என்றும் ஆன்மா விரியவும் சுருங்கவும் கூடிய சத்தி வாய்ந்தது என்றும் சமணர்கள் கூறுகிறார்கள். இந்தத் தத்துவ சாத்திரங்கள் ஆறும் ஆன்மா வேறு, உடல் வேறு என்பதை ஏற்றுக் கொள்கின்றன. இந்தத் தரிசனங்களிடையே சில வேறு பாடுகள் காணப்படினும், புறத்தேயிருந்து வந்து உடலில் புகுந்து விட்ட மாசுகளை எல்லாம் நீக்கிவிட்டால் எஞ்சி நிற்பது ஆன்மா என்பதே அவை அனைத்தும் கூறும் முடிவாகும்[32].

உலோகாயதர்களில் சிலர் உடலையே ஆன்மா எனக் கூறுவர். உடலை விட்டு உயிர் வெளிச் செல்லும் போது உடல் அழிந்து விடுகிறது. எனவே இயக்கமற்றது அழியுந்தன்மை வாய்ந்ததுமான ஒன்றை ஆன்மா எனக் கொள்ளல் வேண்டாம். உலோகாயதர்களில் வேறொரு சாரார் தம்முடைய புலன் களால் தான் அறிவு வளருகிறது என்றும் தாம் ஆன்மாவை உருவாக்குகின்றன என்றும் கூறுவர். கணத்துக்குக் கணம் மாறிக் கொண்டிருக்கும் அறிநிலையே ஆன்மா என விஞ்ஞான வாதிகள் கூறுவர் ஆன்மா என்றால் அறிநிலைகளின் குவியலைக் குறிப்பிட வேண்டும் எனும் உபநிடத கூற்று அறிநிலை தான் ஆன்மா என்பதை வலியுறுத்துகிறது. ஆனால் ஆழ்ந்த தூக்க

நிலையில் இந்த அறிநிலைகளுமில்லை. எனவே எதுவுமற்ற வெறுமைதான் ஆன்மாவாக அமையவேண்டும் எனக் கொள்வர் மாத்யமிகர். வெறுமையைத் தான் ஆன்மா என இன்மைக் கொள்கையினர் கொள்வர். உலோகாயத்தின் ஒரு சிலர் மனத்தையே ஆன்மாவாகக் கொள்வர். மனத்தை ஆன்மா எனவும், ஆன்மா உடலைச் சார்ந்தஒன்றனெவும் கூற முடியாது. ஆன்மா பருப்பொருளுக்கும் அப்பாற்பட்டது. அது உண்மைப் பொருளுக்கும் அப்பாலானது. இதனால் தான் மனத்தைக் காரணமானவன் எனவும், அனுபவிப்பவன் எனவும் மீமாம்சகர்கள் கூறுவர். ஆன்மாவை அறிபவன் எதையும் ஆதரிப்பவன்; எதற்கும் காரணமானவன் என்று பிரஸ்ன உபநிடத கூறும்.

ஆன்மாதான் எதற்கும் காரணமாகும் எனும் கூற்றைச் சாங்கியர்கள் மறுப்பர். ஆன்மா அறிவாற்றல் மயமானது, இயக்க மற்றது. எவ்வகை இயக்கமும், மாறுதலும் ஆன்மாவைச் சாராது எனக் கூறலாம். ஆன்மாவின் அனுபவ நிலை அறிவதற்கெல்லாம் சாட்சியாக அமைகிறது. இதனால் தான் ஆன்மா அனுபவியாக மட்டும் எனச் சாங்கியர் கூறுவர். சத்சித்தானந்தமாக விளங்கும் பிரம்மத்தினின்றும் எவ்வகையிலும் மாறுபடாத வகையில் விளங்குவதுதான் ஆன்மா என்பது அத்வைத வாதிகளின் முடிவான நிலை. காட்சி, அனுமானம், இறைவழி பாட்டு நூல்கள் இவை மூலமாக ஆன்மா தன்உணர்வு நிலை பெற்ற ஒன்றாக அறியப் படுவதால் அதை இயக்க மற்றஒன்றாகக் கூறமுடியாது. பரம் பொருளான ஆன்மா தன்னொளிர்வாக விளங்குகிறது என்பதைத் தூக்க நிலையின் உண்மையால் உணரலாம். இந்த ஆன்மாதான் சாட்சி-அறிவாற்றலாக விளங்குறது. சாங்கியர்கள் ஆன்மாவைச் சாட்சியாகக் கொண்ட போதிலும், அவர்கள் பல மனிதர்களைப் பற்றிய கருத்தைக் கொண்ட காரணத்தால் ஆன்மாவைப் பற்றிய உண்மையை அவர்கள் அறியாதவர்களாகின்றனர். பலராலும் ஆன்மா தான் என்ற நிலையில் ஒருமையாக அறியப்படுவதால் ஆன்மாவையும் ஒன்றெனக் கொள்ளவேண்டும். பிரம்மத்தினின்றும் வேறுபடாத நிலையில் விளங்குவது ஆன்மா ஒன்றே என்பதை அறியலாம்[33].

4.5.0.2. கடவுள், பிரகிருதி, ஆன்மா இந்தமூன்றும் ஒரே விருப்பேதான் என்று கூறுவார்கள். கடவுளே ஆன்மா என்றும், இயற்கையும் சீவ ஆன்மாக்களும் கடவுளின் உடல் என்றும்

அவர்கள் கூறுவார்கள். மனித உடலில் பூத சம்பந்த மில்லாத ஒரு கூறுதான் ஆன்மா. அது சடமில்லாததால், கூட்டுப் பொருளாய் இருக்க இயலாது. அப்படி இராமையால் அது காரண காரிய நியதிக்கு அப்பாற்பட்டது. ஆதலால் அது அமரத்தன்மை வாய்ந்தது என்பர்[34]. ஆத்மாவானது ஓசையில்லாதது; தொட்டு உணரமுடியாதது; உருவமில்லாதது, அழிவற்றது; சுவையற்றது, நிலையானது துவக்கமும்முடிவும் இல்லாதது. மூலப்பிரகிருதிக்கும் மேலானது. அந்த ஆத்மாவை அனுபூதியில் அடைகிறவன் மரணத்தின் வாயினின்று விடுதலை அடைகிறான் (கடோபநிடதம் 3:15) என்பர்[35].

## 4.5.1. ஞானவாசிட்டத்தில் ஆத்மா:

நத்மா எல்லா இடத்தும் நிறைந்திருக்கும் என்றும், அதுவே பிரம்ம நிலையை அடைய உதவி செய்யும் என்றும் ஞானவாசிட்டத்தில் வலியுறுத்தப்படுகிறது. ஆத்மாவைப் பற்றி இந்நூல் குறிப்பிடும் செய்திகள் வகுத்தும் பகுத்தும் விளக்கப்பட்டுள்ளது.

### 4.5.1.1. ஆத்மாவின் இயல்பு:

காண்பவற்றிடத்தில் அடையாததாகியும், எவ்விடத்திலும் பரிபூரணமாகியும், உள்ளதாகியும், பெயரில்லாததாகியும் இருக்கின்ற ஞானமே பிரம்மஞானம். அதுவே ஆத்மா (உற்: 20). ஆயிரம் செயல் செய்யினும் சட மில்லாத அறிவின்மையே ஆத்மா வாகும் (உபசா: 33). ஆத்மா சுத்த அறிவாதலால் அது ஆகாய பாவனையால் நிறைந்த ஆகாயமாகும். அதுபோல எல்லாப் பொருட்களிலும் உள்ளதாயும் இல்லாததாயும் இருக்கும் அதுவே ஆத்ம சுபாவமாகும் (ஞான: 83) என்பர்.

### 4.5.1.2. ஆத்மா தங்குமிடம்:

உலகம் முதலான வேற்றுமை பாவனை நீங்கிய இடத்தில் (நீ, நான் என்பது முதலாக) தானாய் விளங்குகின்ற அனுபவமே ஆத்மாதங்குமிடமாகும் (ஞான 28).

### 4.5.1.3. ஆத்மாதரிசனத்தில் அடங்குவன:

'நிரு விகற்ப வான்மாவிற் சகத்தோற்ற மொடுக்கு
மிவை நேராயில்லை
மரு விகற்ப பேதமுறாப் பராபரமாப்பொருளை வயங்கக்
கண்டாற்

பெரு மனக்கட் டறுமையம றுங்கருமம் அறும்'
(ஞான: 84. 1-3).

என ஆத்ம பார்வையால் அடங்குவனபற்றி விளக்கியுள்ளார்.

### 4.5.1.4. ஆத்ம வடிவம்:

முடிவு இல்லாமல் ஒளியைக் கொடுக்கும் சூரியனாயும், எல்லையற்றதாயும், அற்பதுன்பமில்லாததாயும், உற்பத்தி இல்லாததாயும், எந்தக்காலத்தும், எல்லாமாய், எல்லாவற்றையும், எவ்விடங்களிலும் உண்டாக்கியும், எல்லாம் விடுபட்டதாயும் நிறைந்திருக்கின்ற பிரம்மவடிவமானது ஆத்மாவாகும் (ஞான: 30) அந்தமில்லாததாயும், அறிதற்கரிதாயும் இருக்கின்ற ஆத்ம வடிவத்தை சலனமில்லாமல் பார்த்தால் அறிவு உருவமானது குற்றமற்றதாய் இருக்கும். (அருச்: 11). ஆத்மாவானது மகான் களால் விவரிக்கக்கூடிய பரியாய (ஒரு பொருளை வெளிப்படை யகாக் கூறாது குறிப்பாகக் கூறும் அணி) பெயர்களைப் பெற்றுத் (சத்தியம், பிரம்மம், பரம்) தானே சிவனைப் போல விளங்கும் (ஞான: 7) என்பர்.

ஆத்மவடிவத்தை ஆத்மவிலாசம், ஆத்மவிகாரம், ஆத்ம சுபாவம் எனமூன்று வகையாக ஆசிரியர் கூறியுள்ளார்.

### 4.5.1.4.1. ஆத்மவிலாசம்:

ஆத்மவிலாசமானது சொல்வதற்கரியதாயும், சத்துக்களால் படிப்பதாயும், பிரம்ம முதலிய கற்பிதமாகிய பலபெயர்கள் இடப் பெற்று, சாங்கியர்களால் ஆத்மா என்றும், வேதாந்திகளால் பிரம்மமென்றும், விஞ்ஞானிகளால் விஞ்ஞான வடிவமென்றும், சூனியவாதிகளால் சூனிய வடிவம் என்றும் சொல்லப்படுவது மன்றி, சூரிய ஒளியாயிருந்து எல்லாவற்றிற்கும் வெளிச்சத்தைக் கொடுத்துத்தானும் அதன் வடிவமாக விளங்கும் (ஞான: 31) நிலையாகும்.

### 4.5 1.4.2. ஆத்மவிவகாரம்:

ஆத்மவிவகாரம், சொல்பவனாயும், ஆராய்பவனாயும், கேட்பவனாயும், பார்ப்பவனாயும், புசிப்பவனாயும், நினைப்ப வனாயும், உலகில் உடலில் திடமாகப் பொருந்தியும் பொருந்தாத தாயும் இருக்கின்ற பொருளில் தோன்றும். சூரியஒளி போல ஞானப்பிரகாசம் உண்டாக்கும் (ஞான: 32) என்பர்.

### 4.5.4.3. ஆத்ம சுபாவம்:

ஆத்மா சிந்தனையால் நிறைந்த ஆகாயமாகும். அவ்வாறே எப்பொருளும் பாவனை செய்கின்ற போது அந்தப் பொருட்களே உளதாய் இருக்கும். அந்த ஞானத்தில் மூவுலகும் கானல் நீர்போல எப்போதும் உண்டாகிக்கெடும். இவ்வளவையும் செய்தும் தான் செய்யாமல் இருந்த படியே இருக்கும் வடிவமே ஆத்ம சுபாவமாகும் (ஞான:33). அதுவே ஆன்மா இயல்பு என்பர்.

### 4.5./.5. ஆத்மாவே எல்லாம்:

ஆத்மா, 'ஆற்றுமதத்து வஞ்சகல சத்தியமானாம்' (தேவ: 28.1) என்றும், எல்லாப் பொருட்களின் உள்ளிலும் புறம்பிலும் இடையின்றிக் காலாதீதமான பூரணமாய் விளங்கும் (இட்சு:21) என்பது வெளிப்படை. மேலும்,

> நாசவட வைக்கனல்படா நடுக்கஞ் செய்யுங் காலமெனு
> மூசுகடலிற் சகத்திரளா முடுகுநதிகள் பல்லுயிராம்
> வீசுதரங்கத் தொடு பாய்ந்து நிறையாதந்த வேலையை
> யும்
> ஆசமனஞ் செய்யகத்தியனா மான்மாவென்று வகத்
> துணர்வாய்' (இட்சு:22)

என்றும், எல்லாவற்றையும் அசைப்பிக்கின்ற சத்தியமானே ஆத்மா (தேவ:33) என்றும் விளக்கியுள்ளார். மன முதலாக நடக்கின்ற அந்தக்கரணங்களை இந்த ஞானாத்மாவானது அசைக்கும். துன்பம் பொருந்திய இயந்திரியங்கள் அனைத்தை யும் எல்லாக் காலமும் ஆத்மாவே தாங்கும் (பிரக:40). எல்லா இடமும் இல்லாதது போல ஆத்மாவானது இருக்கும் (வீத:19) என ஆத்மாவைக் குறிப்பிட்டுள்ளார்.

### 4.5./.6. ஆத்மாவே உலகம்:

ஆத்ம சங்கற்பமே உலகம் (ஞான:2). பரப்பிரகாசமே உலகம் ஆதலால் அதற்கு அதுவே காரணமாகும். ஆத்மாவினிடத்தில் இல்லாமையாகத் தோன்றின உலகம் அதையே மறைக்கும் (இட்சு:29). முழுவடிவமாயும் ஏகமாகியும் இருக்கின்ற ஆத்மா வானது ஆற்றிலும் கடலிலும் உள்ள நீரைப் போல எல்லா சத்தி

களிடத்திலும் ஒளி விடும். நீங்காத எண்ணத்தினது சமூக மில்லாத தாய் ஏகமாகி இருக்கின்ற சற்பாவந்தன்னில் எல்லா உலகங்களையும் தழுவின பாங்கின் அளவாக அறியும் (இட்சு: 49) என்றும், கன்ம நிவிர்த்தியும் ஞானவிருத்தியும் ஆகிய உலகத்தின் வடிவமே ஆத்மா என்றும் வெளிப்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.

### 4.5.1.7. ஆத்ம நிலையை அடையும் வழி:

1. மனோநாசம், வாசனை அழிவு, தத்துவஞானம் பெறுதல் என்னும் இந்த மூன்றும் பெறுவதற்கு முயற்சி செய்யாவிட்டால் ஆத்மபதமானது பல வருடமாயினும் ஆத்ம நிலையை அடைய முடியாது. எனவே இந்த மூன்றையும் பெற முயற்சி செய்ய வேண்டும் (உபசா:51).

2. 'கடனாவுயிர் கொல்உறு பகைவன் கருத்தில் வஞ்சமிலா நட்பிற்
தொடர்பானவனே எனக்காணும் அவனே கண்டேன்
தூயதாக' (புசுண்:5.3,4)

என உள்ளவனே ஆத்மவைத் தரிசித்தவான் ஆவான்.

3. தானறியும் அனுபூதி, ஞானநன்னூல், குரு இந்த மூன்றும் தம்மிடத்தில் பொருந்தினால் ஆத்ம ஞானம் தோன்றும் (முமுட்:14).

4. ஆத்மாவை அடைவற்கு உண்மை நெறியான ஏழுவகை ஞானபூமியை ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார் (இட்சு:34-39).

### 4.5.1.8. ஆத்மாவை ஆராதித்தல்:

சங்கற்பம் அனைத்திற்கும் பயனைக் கொடுப்பதாலும் எல்லாப் பிரகாசத்துக்கும் பிரகாசமாய் விளங்குவதாலும் எல்லாக் குணங்களும் நீங்கி இருக்கின்ற தனிமையாகிய ஞானாத்மாவைத் துதிக்க வேண்டும். எல்லாச் சங்கற்பங்களும் நீங்கி எல்லாச் சுகங்களும் நீங்கி, எல்லா ஆரம்பங்களும் நீங்கி இருக்கின்ற தனிமையான ஞானாத்மாவை ஆராதிக்க வேண்டும் (புசுண்: 28; தேவ:47) என்று ஆத்மாவை ஆராதிக்கும் முறையை விளக்கியுள்ளார்.

### 4.5.1.9. ஆத்மாவை அடைந்து நீக்க வேண்டியவை:

1. மவுனத்தால் மோட்சத்தை யுடையவனாய், மனம் சித்தம், தான் என்பது நீக்கி, ஊமையனுக்கும், குருடனுக்கும், ஒப்பாகி பரிசுத்தமாகி ஆன்மாவில் அகமுகத்தை உடையவனாய் எந்த காலமும் குறைவாகியும், பூரண ஞானத்தை உடையவனாகி யும் இருக்க வேண்டும் (நிரு:3).

2. போக இச்சையில் இருந்தபடி ஆத்மாவானது சீவன் என்னும் நாமத்தை அடையும். விவேகத்தினால் ஆசையுண்டாகி அது தானே அழியும் (இட்சு:50).

3. பிரம்ம பாவனையால் அசம்பாவம் நீங்கி, ஆத்மாவைத் தியானித்து உபசாந்தத்தை உடையவனாய் துன்பத்தை நீக்க வேண்டும் (கசன்:14).

### 4.5.1,10. ஆத்மாவை நீக்கியவர்கள்:

மட்டில்லாமல் எளிதாய்க் கிடைத்த சுகத்தை நீக்கி அற்புத மான பொருட்களில் (கடவுள்) மனது பொருந்தினவர்களே ஆத்மாவைக் கொன்றவர்களாவார்கள் (சிகித்:118).

### 4.5.1.11. முத்தி:-

1. இச்சை எப்பொழுது நீங்குமோ அப்போது சீவத்தன்மை யை நீக்கிக் குற்றமற்ற மேலான பிரம்மத்தின் தனிமையை ஆத்மா வானது அடையும் (இட்சு:51).

2. ஆத்மஞான ஆநந்தம் சாட்சாத் காரமாய் வருமாயின் பவத்துன்பம் நீங்கும். அதனால் பரமாத்மாவை அடையலாம் (பகீர:11).

3. அநாத்மாவை நீக்கினால் ஆத்மாவை அடைந்து பிரம்ம மயமாகலாம்(இட்சு:7).

4.5.2. ஆத்மாவே எல்லாமாகத் தோன்றுவதால் அதனை மாற்ற மனநாசம், வாசனை அழிவு, ஞானம் போன்றவற்றைக் கடைப்பிடிக்க வேண்டும். இவற்றைக் கைக்கொண்டால் பிரம்மபதத்தை அடையலாம். அதற்காக ஆத்மாவை ஆராதிக்க வேண்டும் என்றும் ஞானபூமிகளைக் கடைபிடிக்கவேண்டும் என்றும், குருவின் அறிவுரைகளை நடைமுறைப்படுத்த வேண்டும் என்றும் இந்தப் பகுதியில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

4.5.3. ஆத்மாவை இறைவனுடன் ஒப்பிட்டுக் கூறப்பட்டிருப்பதால் ஆத்மாவே எல்லாம் என அறிய முடிகிறது. இராமனுக்கு ஆத்மாவே எங்கும் நிறைந்திருக்கிறது என்று கூறி அதனை ஞானத்தினால்தான் மாற்ற வேண்டும் என்றும் முயற்சி செய்தால் பிரம்மத்தை அடைய முடியும் என கதையோடு கருத்தை முனிவர்கள் வாயிலாக ஆசிரியர் வலியுறுத்தியுள்ளார்.

## 4.6. சங்கற்பம்:

4.6.0. சங்கற்பம் என்ற சொல்லுக்கு பலவகையான பொருட்களைத் திறனாய்வாளர்கள் கூறுகின்றனர். அவற்றை திறனாய்வு நோக்கில் பார்த்து ஞானவாசிட்டத்தில் காணப்படும் சங்கற்பம் பற்றிய சிந்தனைகளையும் இந்தப் பகுதியில் காணலாம்.

4.6.0.1. சங்கற்பம் என்பது எண்ணம், நியமம், விருப்பம், துணிவு, சங்கல்பம், மனோநிச்சயம், கொள்கை எனப் பல பொருள்படும்[36].

4 6 0.2 சங்கற்பம் என்பதற்குச் சாதாரணமாகக் கூறும் பொருள், ஏதேனும் ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்து முடிப்பதாக மனதில் உறுதி செய்து கொள்வதாகும். மேனாட்டு உளவியல் கூறும் கிரியாசக்தி அல்லது இயற்றி நிலை (Conation) என்பது வேறு சங்கற்பம் என்பது வேறு. சங்கற்பம் என்பது நனவின் ஒரு அமிசமாகும். ஒரு குறிப்பிட்ட நோக்கத்தைப் பெறுவதற்காகச் செய்யும் தீர்மானம் சங்கற்பம் என்பர். சங்கற்பம் என்னும் சொல் ரிக் வேதத்தில் தீர்மானித்தல் என்னும் பொருளில் வந்துள்ளது. அதர்வண வேதத்தில் இந்தச்சொல் மண்விபுவின் மனைவியின் தந்தை என்ற பொருளில் வந்துள்ளது சங்கற்பம் என்பது மனம் செய்யும் வேலைகள் பதினான்கில் ஒன்று என ஐத்திரேய உபநிடதம் கூறுகிறது. ஆனால் பிற்காலத்து ஞானவாத நூற்கள் இந்த உறுதியை விகற்பம் எனக் கூறுகின்றன.

4.6.0.3 படைப்பு, சத்தியால் (சங்கற்பம்) நடைபெறாவிட்டாலும் சிந்தனா சத்தியால் நடைபெறும் சவிகற்ப-பிரத்யட்சம் என்னும் கருத்திலிருந்துதான் இந்தப்பொருள் விளங்குகிறது. ஆயினும் பொதுவாக இந்தச் சங்கற்பக்காரியம் ஓர் இலட்சியத்தை அடைவதற்காக உறுதிசெய்தி கொள்வதையும் அந்த இலட்சி

யத்தை அடைவதற்குப் பயன்படும் சாதனங்களைத் தீர்மானம் செய்வதையும் குறிப்பதற்காகப் பயன்படுகிறது. மனத்தைச் சேர்ந்த இச்சைவேறு ஆத்மாவைச் சேர்ந்த சங்கற்பம் வேறு. இலட்சியத்தையும் அதற்கான சாதனங்களையும் தீர்மானிக்கும் செயலாகிய சங்கற்பம் என்பது நிச்சயம் என்பதற்குச் சமான மாகும். சங்கற்பம் என்பது அந்தக் கரணத்தில் ஒரு செயல் என்று பிங்கல உபநிடதம் கூறுகிறது. மனம்தான் காம-சங்கற்பம். அதுவே ஆசையும் உறுதியும் என்று மைத்திராயினி உபநிடதம் கூறுகிறது. சங்கற்பம் என்பது ஆசையும், ஆசைப்படும் கருத்தையோ, குறிக்கோளையோ அடைவதற்கான ஆற்றலும் ஆகும். அதனால் சங்கற்பத்துடன் கருதுதல், கற்பனை, சாதனம் அமைத்தல் இந்த மூன்றும் சேர்ந்திருக்கும். சில உபநிடதங்கள் சங்கற்பத்தைச் சுத்தம் என்றும் அசுத்தம் என்றும் இருவகையாகப் பிரித்துக் கூறுகின்றன. ஞானவாசிட்டம் எல்லா சங்கற்பத்தையும் அசுத்தமானதாகவும் சகல படைப்புகளையும் பொய்யானதாகவும் கருதுகிறது.

4.6.0 4. திரியுக் காட்சி பற்றிக் கூறும் கொள்கை சங்கற்ப மனோகாரியத்தை அடிநிலையாக உடையது. சங்கற்பமே மாயையின் வேர். ஆதலால் சங்கற்பத்தை விட்டு விடுதலை பெற வேண்டும். தனிப்பட்டவர் சங்கற்பத்துக்கும் பொதுமக்கள் சங்கற்பத்துக்கும் வேறுபாடு இல்லை. சங்கற்பம் என்பது கற்பனா சத்தி. ஞானவாசிட்டமும் சங்கற்பம் அனைத்தும் ஆன்மாவின் ஒருமையைச் சிதைத்துப் பல ஆன்மாக்கள் போல நடக்குமாறு செய்வதாகக் குறிப்பிடுகிறது.

4.6.0.5. சகுணக் கொள்கையையுடைய வேதாந்தம், மக்களுடைய சங்கற்பத்தால் கனவுகளும் பல ஆத்ம தோற்றமும் உண்டாகும் என்றும், தெய்வ சங்கற்பத்தால் (இச்சை)பொய்யானவை உண்டாக மாட்டா என்றும் கருதுகிறது. தெய்வ சங்கற்பம் உண்மையான உலகங்களையும் ஆன்மாக்களையும் உண்டாக்குகின்றது. மனிதனுடைய சங்கற்பம் காம-சங்கற்பம். தெய்வத்தினுடைய சங்கற்பம் திவ்விய-சங்கற்பம். உண்மையையும் நன்மையையும்நாடி, மனம், வாக்கு, காயம் மூன்றிலும் கடவுள் ஆட்சிக்கு உட்பட்டு நடக்கும் மனிதனிடமும் உண்மை

யான சங்கற்பம் ஏற்படும். வேங்கடநாதர், தம்முடைய சிறந்த நாடகத்திற்குச் சங்கற்ப சூரியோதயம் என்று பெயரிட்டார். ஆங்கு சங்கற்பம் என்பதற்கு அருள் என்பது பொருள். மனிதன் அசத்திய சங்கற்பன் என்றும், கடவுள் சத்திய சங்கற்பன் என்றும் உபநிடதங்கள் கூறுகின்றன. சங்கற்பம் பற்றி இந்திய உளவியல் கொண்டுள்ள கருத்தும் இதுவேயாகும்[37].

4.6.0.7. கர்மபலனைப்பற்றி மனத்தில் உண்டாகும் கற்பனா சத்திக்கே சங்கற்பம் என்று பெயர். ஆசையின் வேகத்தால் அனந்தகோடி எண்ணங்கள் உதிப்பதே சங்கற்பம் எனப்படும். இதனால் மனம் சலனமடைகிறது. சந்நியாசத்தால் சங்கற்பம் துறக்கப்படுகிறது. சங்கற்பத்தைத்துறப்பதால் யோகம் உறுதி பெறுகிறது. சங்கற்பம் மாறினால் ஆசையும் கர்மமும் அடிபட்டுப் போகின்றன[38]. ஞானவாசிட்டத்தில் இந்தக் கருத்துகள் கதையுள் கதையாகக் காணப்படுகின்றன.

### 4.6.1. ஞானவாசிட்டத்தில் சங்கற்பம்:

ஞானவாசிட்டத்தில் கூறப்பட்டுள்ள சங்கற்பக் கருத்துகளை சங்கற்பவடிவம், சங்கற்பத்தைக் கெடுத்தல், சங்கற்பநாசமே முத்தி என்ற வகையில் பகுத்து இங்கு விளக்கப்பட்டுள்ளன.

### 4.6.1.1. சங்கற்பத்தின் இயல்பு:

அறிவு என்கின்ற முளையினிடத்தில் வளர்கின்ற களையே சங்கற்பம் (சிகித்: 139, தாசு: 104). சிறிதாக உண்டாகி, உள்ளதாகி கிரமமாகமெல்ல மெல்ல வளர்ந்து பரமாத்மாவை மறைக்கின்ற சடபாவமான அறிவானது காண்பவற்றினைப் பாவித்திருக்கின்ற வேற்றுமையைப் போல சங்கற்பமாய்த் தோன்றும். இதனை,

> ........'பரம மாயுண்டெனல் வடிவாய்
> மின்னிய சமமா மறிவு காண்பவற்றின் மேவுறவெழுதல்
> சங்கறபம்' (தாசு:102.3,4)

இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.

### 4.6.1.2. சங்கற்பத்தின் வடிவம்:

அநர்த்தம், மோகம், பலம், பந்தம், அவித்தை, மாயை, சுதப (இருள் அல்லது தாமசகுணம்) முதலானவை சங்கற்பத்துக்கு

ஏற்ற வடிவங்கள் (ஞான:27) ஆகும். தாமத குணத்தையுடைய சங்கற்பமென்பது பிரகிருதியின் செயலினால் துன்பத்துடன் வருத்தமுற்றுப் பாதாளக் கிருமிகளாகும். சாத்துவித குணத்தையுடைய சங்கற்பம், மிகுந்த தருமங்களையும் ஞானங்களையும் உடைய மோட்சத்தை உடையதாய் அரசனைப்போல ஒளிவீசும். இராசதகுணத்தையுடைய சங்கற்பம் இந்த உலகில் இயல்பாகிய சம்சாரத்தை உடையதாய் விளங்கும் (தாசு:97).

### 4.16.3. சங்கற்பத்தைக் கெடுக்க வேண்டும் எனல்:-

பந்தத்துக்குக் காரணமான சங்கற்பத்தை கெடுக்க வேண்டும் என்று கீழ்வரும் பாடலால் விளக்கியுள்ளார்.

'பந்தநிதானஞ் சங்கற்பமன்றோ அது நீ பற்றறுப்பாய்
முந்துசங்கற்பந்த விர்ந்தான் முத்தியதுவாம் அதுதன்னைப்
புந்தியதனாற் பரிசயிப்பாய் பொருளும் பொருள்கொள்பவனும் உறின்
மைந்த மெள்ள வெப்போது மறவாதொழிப் பாய் சங்கற்பம்' (மானு:8)

என, சங்கற்பத்தை ஒழிக்க மறக்கக் கூடாது என்று வலியுறுத்தியுள்ளார்.

சங்கற்பத்தை வருத்தமில்லாமல் பாவனையாலும் முயற்சியாலும் மாற்றலாம் (தாசு:105) என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

### 4.6.1.4. சங்கற்ப வடிவமான மனத்தைக் கெடுத்து ஆத்ம ஞானமாக விளங்க வேண்டும் எனல்:

சங்கற்பமே எல்லாவற்றிற்கும் காரணம் என்றும் அதைவிடலே இன்பம் என்றும் கீழ்வரும் பாடல்வரியில் கூறியுள்ளார்.

'சங்கற்ப மாத்திரத்திற் துன்பமுறுஞ் சங்கற்பந் தவிர்த்த மட்டில்
இங்குற்ற துன்பமறுஞ் சங்கற்பமே துன்பமிலதே லின்பம்
(தேவ:26.3,4).

சைதன்னிய சங்கற்பத்தைக் கரைத்து நித்தியாநந்தனாய் இருந்தால், எல்லாச் செயல்களையும் செய்யலாம். ஆன்மாவானது தன்னிடத்தில் சங்கற்பசத்திகளினால் அளவற்ற விளையாட்டைக் குழந்தையைப் போலச் செய்யும். அதனை நீக்கினால் நித்தியாநந்தனாய் வாழலாம் (இட்சு:25). சங்கற்பமானது பாவனையை விட்டுவிட்டால் நாசமடையும். இந்தச் சங்கற்பத்தைத் திடமகா

கெடுத்துப் பரிசுத்த மனத்தினால் அசுத்த மனத்தைக் கெடுத்தால் ஆத்மஞானத்தில் நிலையாக இருக்கலாம் (தாகு:106). ஞானமானது சங்கற்பத்தினால் பந்தப்படும். சங்கற்பம் ஏற்பட்டால் பந்தம் விரிவடையும். பந்தம் நீங்கினால் ஆத்ம ஞானமாக வாழலாம் (சுகர்:18).

மனோபாவமே சங்கற்பமாகும்; மனத்தினது பாவனை அற்றலே சிவமாகும் (நிரு:47) சுகதுக்கம் சங்கற்பத்துக்கே அன்றி ஆத்மாவுக்கில்லை. அதை நீக்கினால் ஆத்மஞானத்தை அடையலாம் (இட்சு:17). சங்கற்பத்தைக் கொடுத்தால் ஆநந்தம் அடையலாம் என்பதனை,

'தன்னுடைய விவேகம் எனும் பெருங்காற்றாற் சங்கற்ப முகிலைத்தள்ளி
மன்னுசரற் காலத்தின் வானம்போன் நின்மலத்தை மருவாநிற்கும்
உன்னுடைய சங்கற்பம் எனும் அழுக்கை யுன்னாலே யுனக்கு மாற்றித்
துன்னிமிகு தெளிவுற்றுப் பரமாநந்தக் கடலிற்றுளைந்து வாழ்வாய்' (தேவ:27)

இவ்வாறு விளக்கியுள்ளார்.

#### 4.6.1.5. சங்கற்ப நாசமே முத்தி எனல்:

சங்கற்பமே சம்சார பந்தமாகும், அதன்நாசமே மோட்சமாகும். தாமத இராசத, சாத்துவித குணத்தையுடைய சங்கற்பங்களை நீக்கினால் அச்சங்கற்பம் நின்மலமாகி பரமபதத்தை அடையும் (தாகு:98). சங்கற்பமான பாசத்தை எளிதில் அறுத்துவிட்டால் மயக்கத்தையுடைய பாவனைகள் மாறிவிடும். துன்பம் செய்கின்ற சங்கற்பமில்லாமல் தொழிலின் மார்க்கமாக இருக்க வேண்டும். நடுக்கம் செய்கின்ற சங்கற்பமானது பார்வைகள் எதிலும் பற்றாது. எனவே பிரம்மபதத்தைச் சேர்ந்து உலகவேறுபாடான விகற்பங்கள் யாவையும் நீக்கிச் சுழுத்திமனத்தை அடைந்து அத்வைத பரமசுகத்தை அடையலாம் (தாகு:99) என்பர்.

4.6.2. சங்கற்பமே எண்ணம், விருப்பம், துணிவு, மனோநிச்சயம், கொள்கை போன்ற நிலைகளில் இருக்கிறது என்பதும் அதனால் பந்தம் ஏற்பட்டு முத்தி அடைவதற்குத் தடையாக இருக்கிறது என்பதும் அதை மாற்றினால் முத்தி அடையலாம் என்பதும் மேற்குறிப்பிட்ட கருத்துகள் மூலம் தெளிவாகின்றன,

4.6.3. சங்கற்பம் (எண்ணம்) தான் பலவித இன்னல்களுக்குக் காரணமாகக் காணப்படுகிறது என இராமனுக்குக்கூறி அதனை மாற்ற வேண்டும் என்றும் மாற்றினால் அதுவே முத்தி நிலையாகும் என்றும் தெளிவுபடுத்தியிருப்பதை நூலுள் காணமுடிகிறது. இராமன் புண்ணிய இடங்களுக்குச் சென்று வந்தமையால் பல எண்ணங்கள் ஏற்பட்டன. அதனால் அவனுக்கு எதைச் செய்வது எதைச் செய்யக்கூடாது என்ற மனக்குழப்பம் (எண்ணம்) ஏற்பட்டது. அதன்காரணமாக அவன் பற்றற்ற நிலையை அடைந்திருக்கலாம் என்று எண்ண இடமுண்டு. எனவேதான் முனிவர்கள் அவனது எண்ணத்தை மாற்ற வேண்டும் என வலியுறுத்தி அறிவுரை செய்துள்ளனர் எனலாம்.

## 4.7. வாசனை:

4.7.0.1. வாசனை எனினும், அறிவு எனினும், நம்பிக்கை எனினும், மணம் எனினும், நாற்றம் எனினும் ஒக்கும். மலரினின்று எழும் மணம் மலரை அப்புறப்படுத்திய பிறகும் சிறிது நேரம் தொடர்ந்து வீசுவதுபோல நல்வினைகள், தீவினைகள் வாசனையாக எஞ்சி நிற்கின்றன. அனுபவத்தில் நிகழும்வினைக்கு இரண்டு விதமான விளைவுகள் உள்ளன. ஒன்று அந்த வினையால் உடனே ஏற்படக்கூடிய இன்பதுன்பங்கள். மற்றொன்று அந்த வினையாலும் அதன் விளைவாலும் மனதைப் பற்றும் வாசனை. வாசனை இன்பத் தொடர்பு கொண்டதாயிருந்தால் பழைய அனுபவம் மீண்டும் நிகழும்; துன்பத் தொடர்பு உடையதாயிருந்தால் அனுபவத்தில் வெறுப்புக் கொண்டு அது மீண்டும் நிகழாதிருக்கும்.

4.7.0.2. வாசனைகளைச் சுத்தம், மலினம் என இரு வகையாகக் கருதுவர். சுத்தவாசனை புண்ணியம். மலின வாசனை பாவம். அறிவும் செயல்களும் பூர்வ வாசனைகளால் ஆனவை. பூர்வ வாசனைகள் என்று குறிப்பிடும்போது முற்பிறவிகளில் நிகழ்ந்தவற்றை மட்டும் குறிப்பிடுவதில்லை. இந்தப் பிறவியிலும் முன்பு நிகழ்ந்த அனுபவங்கள் எல்லாம் வாசனை வடிவமாக எஞ்சி நிற்கின்றன என்பதையும் நினைவு கொள்ள வேண்டும். வாழ்க்கையில் வாசனைகள் சேர்ந்து கொண்டே வருகின்றன, நல்லவாசனைகள் சத்துவகுணத்தோடும், அசுத்த

வாசனை இராச, தமோ குணத்தோடும் சேரும். ஆன்மீக வாழ்வில் முதலில் அசுத்தவாசனைகளை நல்ல வாசனைகளின் துணை கொண்டு அகற்றவேண்டும். பிறகு எல்லா வாசனைகளையும் மாற்றவேண்டும். இந்த நிலையை வேதாந்திகள் வாசனாட்சயம் என்று கூறுகிறார்கள்[39].

4.7.1. ஞானவாசிட்டத்தில் வாசனையைச் சுத்தவாசனை, அசுத்தவாசனை என இரண்டாகப் பிரித்துக் கூறியுள்ளார். இதன் விளக்கங்களும், அதனால் பெறும் வீடுபேறும் இந்தப் பகுதியில் விளக்கப்பட்டுள்ளன.

### 4.7.1.1. சுத்தவாசனை:

சுத்தவாசனையைச் சுபவாசனை என்றும், வாசனை என்றும் கூறுவர். பிறப்பை அகற்றும் தன்மையுடையது சுத்தவாசனை. அதனைத் தொடர்ந்தால் பரமபதத்தை அடையலாம். சுத்த வாசனையைத் தரிசித்தவன் இந்தப் பிறவியில் அழுந்தமாட்டான். சுத்த வாசனையை அடைந்தவன் முத்தன். மறுபிறப்பை நீக்கி இருப்பதும் தீயினால் வறுக்கப்பட்ட விதை முளையாதிருக்கும் நிலைக்கும் சமமானது சுத்த வாசனை (வைரா: 27) ஆகும்.

### 4.7.1.2 அசுத்த வாசனை:

அசுத்தவாசனையை அசுப வாசனையென்றும், மலினம் என்றும் கூறுவர். அசுத்தவாசனை மறுபிறப்பைக் கொடுக்கும் தன்மையுடையது.

'மடமையின் செறிவே மெய்யாய் மலியகங் காரந்துன்றிப்
படர்தரு பிறப்பை மேன்மேற் பயில்விக்கு மலினமென்ப'
(வைரா: 27.1,2)

என்பது ஆசிரியர் கூற்று.

அசுத்த வாசனையின் வித்தாகிய அஞ்ஞானத்தை எரித்த சத்தாசாமானிய வடிவத்தைப் பெற்றவர்களை உடல் இருந்தாலும் இல்லாவிட்டாலும் துன்பம் நெருங்காது என்பர் (புசுண்: 22). அசுத்த வாசனையுடையவர்களைப் பெத்தன் என்றும், அசுத்த வாசனையைச் சங்கத்துடன் ஒப்பிட்டும் கூறுவர். சீவன் முத்தரல்லாதவர்கள் அஞ்ஞான மனமுடையவர்கள் ஆவார் (உபசா: 68,69) எனவே. சீவன் முத்தர்களைத்தவிர மற்றவர்களிடம் அசுத்தவாசனை இருக்கும் என்பது உறுதியாகிறது.

### 4.7.1.3. வாசனையின் வலிமை:

வாசனையின் வலிமையை மலைக்கு ஒப்பிடுவர். அது ஒருவரைப் பின்பற்றினால் விடுதல் அரிது என்று கீழ்வரும் பாடல் வரியால் அறிய முடிகிறது.

'சொன்ன மலையைப் பிடுங்கிடினுந்தொடர்
வாதனையை விடல் அரிதாம்' (உபசா: 48.2).

### 4.7.1.4. இயமன் அணுகான் எனல்:

அசுத்த வாசனையைக் கெடுத்தால் இயமன் நெருங்க மாட்டான் என புசுண்டன் கதையில் விளக்கப்பட்டுள்ளது (புசுண்: 74).

### 4.7.1.5. முத்தி:

வாசனையை நீக்கினால் முத்தியடையலாம் என்பதை ஆசிரியர் பல நிலைகளில் குறிப்பிட்டுள்ளார்.

1. வாசனையை நீக்கினால் மூப்பு, மரணங்கள் பொருந்திய பிறவியில் பிரம்மபதம் உண்டாகும் (சிகித்: 96).
2. சஞ்சலம் செய்கின்ற வாசனையைப் பற்றற விடுதலே நிலையான முத்தியாகும் (வைரா: 26).
3. சுத்தவாசனை ஏற்பட்டால் முத்தி உண்டாகும் (சிகித்: 94, முமூட்: 3).
4. அறிவானது முன்புள்ள விடயவாசனையோடுஞ் சுழுத்தியிலடங்கி நின்று வெளிப்படில் பவமாதலால் சுழுத்தியில் அடங்கி இருக்கும். அசுத்த வாசனையை நீக்கித்துரியாதீதமாக விளங்கினால் முத்திகிடைக்கும் (புசுண்: 19).
5. சஞ்சலம் செய்கின்ற வாசனையைப் பற்றற விடுதலே நிலையான முத்தியாகும் (வைரா: 26).

4.7.1.6. இவ்வாறு வாசனை, அதன்வகை, அதனால் ஏற்படும் முத்தி ஆகியவற்றை ஆசிரியர் விளக்கியுள்ளமையைக் காணமுடிகிறது.

### 4.8. குண்டலினிசத்தி:

4.8.0. குண்டலிசத்தி என்றும் கூறுவர். குண்டலினி சத்தியைப் பற்றிய செய்திகள் ஞானவாசிட்டத்தில் அதிகம்

காணப்படவில்லை இதையோகிகள் கையாளுவர். குண்டலினி சத்தியின் இயல்பு, செயல், பயன் போன்ற அடிப்படையில் கிடைத்த செய்திகளை வகுத்து இந்தப்பகுதியில் கொடுக்கப் பட்டுள்ளது.

4.8.1. குண்டலினி என்பது குய்யத்திற்கும் குதத்திற்கும் நடுவில் இருப்பதாகக் கருதும் மூலாதாரம் ஆகும்[40]. இது மூலாதாரத்திலுள்ள பாம்பின் வடிவமான ஒரு சத்திபாகும். மேலும் அதற்குப் பல பொருள்களை யோகிகள் குறிப்பிடு கின்றனர். சுத்தமாயை என்றும், பிராணாயாம சத்திகளில் ஒன்று எனவும் குறிப்பிடுகின்றனர்[41].

### 4.8.1.1. குண்டலினி சத்தியின் இயல்பு:

குளிர்ச்சியின் வருத்தத்தினால் உறங்குகின்ற பாம்பைப்போல வளைந்து எப்போதும் அசைவற்ற ஆந்திர (குடல்) வேட்டணி கையானது பிராண வாயுவினால் நிலையாய் இருக்கும். வாழை யினது மிருதுவான மல்ரைப்போல அகத்திலும் மேன்மையான மிருதுவானதாகும். அந்த ஆந்திரவேட்டணி கையினிடத்தில் குண்டலினி சத்தியானது பரிசுத்தமாய்க் குற்றமற்ற மேலான தாய்ச் சத்திகள் அனைத்திற்கும் வெற்றியை கொடுக்கும். கோபம் மிகுந்த பெண்பாம்பு போலப் பெருமூச்சுவிடும். எப் போதும் முகம் மேலாய் இருக்கும். சலனத்துக்குக் காரணமாயிருக் கும். இதய(மன)ப் பெட்டியைச் சேர்ந்திருக்கின்ற நாடிகள் யாவும் இதில் பந்தப்படும். இதுவே குண்டலினிசத்தியின் இயல்பாகும் (கிசித்: 34,35).

### 4.8.1.2. குண்டலினியின் செயல்:

குண்டலினி சத்தியானது சிந்தனையினால் கலையாகும்; ஞானத்தால் ஞானமாகும்; சீவனத்தினால் சீவனாகும். மனத்தி னால் மனமாகும்; சங்கற்பத்தினால் சங்கற்பமாகும்; அறிவினால் புத்தியாகும்; அகம்பாவத்தால் அகங்காரமாகும் என்பர் (சிகித்:36)

### 4.8.1.3. குண்டலினி சத்திக்கும் சீவனுக்கும் உள்ள ஒற்றுமை

புரியட்டகமென்னும் சீவனுக்குப் பிராணவாயுவென்கின்ற குண்டலினி சத்தியானது வாசனைக்கிடமாகிய மலர்போல இருக்கும் (சிகித்: 51).

### 4.8.1.4. குண்டலினி சத்தியே பிராண அபான உருவம்:

பிராணவாயும் குண்டலினி சத்தியும் ஒன்றே எனக் கீழ்வரும் பாடலால் அறியமுடிகிறது.

குண்டலினியெனுஞ் சிவசத்திமிக நல்லதாய்க் கூடி நிற்கு
மண்டு பிராணாபான வடிவமா தலிற் கீழ்மேல் வந்துபோகு
மிண்டறமேற் போகிலுமெல் லாமாய்ப்போ மீளினுமெல்லா
மாய் மீளுந்
தண்டலிலாப் புமானாகிச் சாமேவும் பிராணனுமச் சத்தி
தானே' (சிகித்: 37).

### 4.8.1.5. குண்டலினி சத்தியின் பயன்:

4.8.1.5.1. குண்டலினி சத்தியைப் பூரகப் பழக்கத்தினால் பூரணம் செய்தால்:

1. மகாமேருவுக்கு ஒப்பாகிய வலிமையுண்டாகும்.
2. உடல் பருக்கும்.
3. அறிவானது வளரும்.
4. நாடிகளின் தளர்ச்சி நீங்கும்.
5. ஆகாயத்தில் சஞ்சரிக்கும் நிலையேற்படும் (யோகிகளுக்கு இந்நிலை உண்டு) என்பர்.

4.8.1.5.2. ஞான நுட்பத்தினால் ஆகாயத்தில் அணிமா முதலிய பொருட்களைக் கொடுக்கின்ற சித்தர் கூட்டங்கள் கனவில் தோன்றுவது போல நிலையாகத் தோன்றும் (1-2, சிகித்: 52-55).

4.8.1.5.3. குண்டலினியின் அசைவே பவநோயும்; அஃதின்மையே அதன் நிவிர்த்தியும் ஆகும் எனக் கீழ்வரும் வரிகளால் அறியலாம்.

'தன்னிடத்தே யெப்படியும் போக்குவரத்தொழிந்திந்தச்
சத்திநிற்கின்
மன்னுயிர்க்கு நோய் வாரா' (சிகித்: 28.1,2)

4.8.1.6. இவ்வாறு குண்டலிசத்தியைப் பற்றிய செய்திகளை ஞானவாசிட்டத்தில் ஒரு கதையில் மட்டுமே (சிகித்துவசன் கதை 6.9) கூறப்பட்டிருப்பினும் விளக்கமாக அமைந்துள்ளன.

## 4.9. பற்று

4.9.0. ஞானவாசிட்டத்தில் பற்றை வந்திப் பற்று அவந்திப் பற்று என இரண்டாகப் பிரித்து விளக்கியுள்ளார் நூலுள்

காணப்படும் செய்திகளைப் பகுத்து அவற்றின் தன்மையும் அதனால் ஏற்படும் வீடுபேற்றையும் ஆசிரியர் வழி இங்கு விளக்கப்பட்டுள்ளது.

4.9.1. பற்று: என்பதற்கு அன்பு, ஆசை, நட்பு, விருப்பு, சம்பந்தம், பற்றுக்கோடு, கட்டு போன்ற பல பொருட்கள் உள்ளன[42]. பற்று என்பதற்குச் சாதாரண மக்கள் அன்பு, இரக்கம், அளவுகடந்து காட்டும் உணர்ச்சி போன்ற பொருள் களை கையாளுகின்றனர். ஞானவாசிட்டத்தில் உடல்பற்றில் உள்ள உணர்ச்சிகளை குறிப்பிட்டுள்ளனர்.

4.9.1.1. பற்று சரீரத்தையும் சரீரியையும் பிரித்தறிகின்ற ஒன்றையும் சிந்திக்காமல் சரீரத்தை நம்புதலே பற்றாகும். ஆத்ம தரிசனமின்றித் தேகமாய் இருத்தலே பற்றாகும். ஆதுவே பவத்தை கொடுக்கும் என்பதாகும் (வீத: 8).

4.9.1.1.1. வந்திப்பற்று: பற்று இருவகைப்படும் என்பர். அதில் ஒன்று வந்திப்பற்று இதைப் பயனிலிப்பற்று என்பர். இது மூடர்களுக்குரியது. ஞானமில்லாமல் சரீரமுதலாகப் பொருந்து கின்ற பொருட்களினால் உண்டாகிய உலகத்தினிடத்தில் உண்டாக்கப்பட்ட பவங்களைத் திரும்பப் பெறுகின்றதே வந்திப் பற்றாகும்.

### 4.9.1.1.1.1. வந்திப்பற்றின் இழிவை உரைத்தல்:

வந்திப்பற்றினால் சிலர் உலகங்களில் பெத்தத் தன்மையோடு பாவ நரகத்தில் அழுந்துகின்றனர் (வீத: 9).

### 4.9.1.1.2. அவந்திப்பற்று:

இதை வணங்கப்பற்று என்றும் தொழுகைப் பற்று என்றும் கூறுவர். இது குறைவற்ற ஆத்மதத்துவத்தை அறிந்தவர்களுக்கு ஆபரணமாக அமையும். ஆத்மதத்துவ ஞானத்தினாலும் விவேகத்தினாலும் கிரமமாக உண்டானதாகியும் திரும்பவும் பாவமானது நெருங்காததாகியும் இருக்கின்ற ஒன்றாகும்.

### 4.9.1.1.2.1. அவந்திப்பற்றின் பெருமை:

ஈஸ்வராதிகளும் வணங்கப்பற்றினால் உலகங்களில் சிவன் முத்தி தன்மையோடு விளங்குகின்றனர் என கீழ்வரும் பாடல் விளக்குகிறது.

விளையாழி கைதரித்த செங்கன்மேனி வணங்கப்
பாற்றாம் பற்றின் வசத்தினாலே
இளையாமல் விவிதமாந் தொழிலினாலே யெவ்வுலக
நன்றாக விரங்கிக்காக்கு
முளையாத விஞ்ஞான கதிசேர் சித்தருலக பாலகராகி
யுரைத்தவாறே
விளையாடி வணங்கப்பாற் றென்னும் பற்றால் வரித்தசக
மூற்றத்தின் மேவி நின்றார் (வித:8).

### 4.9.1.2. பற்றின்மை:

பற்றின்மை சாமானிய பற்றின்மை என்றும் சேட்டப்பற்றின்மை என்றும் இருவகைப்படும்.

### 4.9.1.2.1. சாமானிய பற்றின்மை:

ஒன்றும் நாமல்ல வென்றும் பற்றின்மையே சாமானியப்பற்றின்மை என்பதை,

'பொருள்கடனிற் செய் பவனல்லேன் புசிப்போனல்லேன்
றெளிவோனுங்
குருவுமல்லே னெனப்பற்றிற் குணமாஞ் சாமானிய
விரத்திப்
பருகுதுன்ப மின்ப மெலாம் பண்டை வினையால்
வருமன்றே
யருள்செய் கடவுள் வசத்தானா மமைப் போனாத
லெனக் கெங்கே' (நிரு:20)

என விளக்கியுள்ளார்.

### 4.9.1.2.1.1. சாமானியத்தில் சாமானியப் பற்றின்மை:

கருமத்தினாலும் தெய்வத்தாலும் வருகின்ற சுகதுக்கங்கள் விருப்பு வெறுப்பென்ற இவற்றில் பற்றற்றதாய் வேதாந்த வாக்கியார்த்த நிச்சயத்தில் அழுந்துவதே சாமானியத்தில் சாமானியப் பற்றின்மையாகும் (நிரு: 21,22).

### 4.9.1.2.2. சேட்டப்பற்றின்மை:

முன் ஆத்ம நிச்சயத்தில் அழுந்தின படியே அதை அனுபவமாய்த்தரிசித்தல் சேட்டப்பற்றின்மையாகும். சுபஞ்சைதன்யத்தை அகத்தில் தெளிந்த தெளிவினாலும், தக்க மனித வருத்தத்தால் நீங்காத ஞான நூற்களின் பழக்கத்தினாலும் அங்கை நெல்லி போல, பிறவிப்பெருங்கடலின் கரையானது உறுதி

யாகத் தெளியக் காண்கின்றன. தான் கருத்தா அன்று, இறைவனை கருத்தா அல்லாமல் தன் பழவினைதான் கருத்தா என்ற எண்ண மெல்லாம் பற்றாமல் வெகுதூரத்தில் தள்ளிச்சேர்ந்த சாந்தமாகிய மோன நிலை சேட்டப்பற்றின்மையாகும். (திரு: 23,24) என்பர்.

### 4.9.1.2.2.1. சேட்டத்திற் சேட்டப்பற்றின்மை:

உபசாந்த பார்வையுள்ளவனாய் முன்தரிசனமான ஆத்மாவில் மனங்கரைந்திருப்பதே சேட்டத்திற் சேட்டப்பற்றின்மையாகும். உள்ளிலும் புறத்திலும், மேலிலும் கீழிலும், திசைகளிலும், விண்ணிலும், பொருட்களிலும், அல்லாதவற்றிலும், சடசித்துக்களிலும் பிரித்து நினையாமல் உபசாந்தத்தில் கூடிய எண்ணம் இறந்து ஒளியற்று மிகுந்த பிறப்பற்று அடிமுடியில் மேலாகியதே சேட்டத்திற் சேட்டப்பற்றின்மையாகும் (திரு: 25).

### 4.9.1.3. பற்றாது இருக்கின்றவன் இலக்கணம்:

பலனை விரும்பாமல், செய்யுங் கருமத்தால் சுகதுக்கத்தை அடையாதவன் எதையும் பற்றாதவன் ஆவான் என்பதற்கு கீழ்வரும் பாடல் சான்றாகும்.

'பத்திபாய்ந்துப் பற்றாத பளிங்குபோலக் கருமபலம்
பத்திபாய்ந்துப் பற்றாதோன் பலநீண் மனிதருடனுறைந்தும்
பத்தியாலற் சித்தாலும் பகையாலுடலை யரிந்தாலும்
பத்திபாச்சலுற்றது போற் பயிலு மகிழ்வு துயரறியான்'
(இட்சு: 61).

### 4.9.1.4. பற்றுக்குக் காரணங்கள்:

நன்மை செய்யும் அருளும், சந்தோசமும், நட்பும், உதாசீனமும் ஆகிய நான்கு குணங்களின் தொழிலை மனத்தில் பற்றாது செய்யவேண்டும். அவை பற்றுக்குக்காரணங்களாகும் (கசன் : 10, வித : 2). அறிவு, ஆசை, மனம், சங்கற்பம் போன்றவை பற்றுக்காரணங்களாகக் கொள்வர்.

### 4.9.1.5. பற்று அறுக்கும் கருவிகள்:

தத்துவஞானம், மனோநாசம், வாசனை, அறிவு என்ற மூன்றையும் சமமாகக் கொண்டால் பற்றுக்கள் அனைத்தையும் கெடுக்கலாம் (உபசா: 53). கிரியாக்கிரியைகளில் பயனைக்

அறுதலால் தற்பயனாய்ச் செய்வதே பற்றறுத்தலாகும்(புண்: 29). வேதங்களினாலும், குருக்களுடைய அறிவுரைகளினாலும் பற்றை நீக்கலாம்.

#### 4.9.1.6. பற்று அற்றபின் ஏற்படும் நிலை:

சுகங்கள் அனைத்தும் பொருந்திற் பொருந்தக்கடவது; பொருந்தாவிடின் போகக் கடவது என்று மனத்தில் பற்றின்மை உண்டானால் மோட்சத்துக்கு அதுவே வழியாகும் (வீத: 4). சர்வம் பிரம்ம மயமாய் விளங்குதலின் விருப்பு வெறுப்பின்றிச் சுயமான வணங்கப் பாற்றானப்பற்றே வீட்டைக்கொடுக்கும் பற்றாகும் (வீத:5). பந்தத்துக்கு ஆதிகாரணமான சங்கற்பத்தைப் பற்றில்லாமல் கெடுத்தால் அதுவே மோட்சமாகும் (மானு:8). மனத்தில் பற்றுஇல்லாமல் இருந்தால் அதுவே மோட்சத்திற்கு வழியாகும். பொருட்களிடத்தில் பற்றில்லாமல் இருந்தால் மனத்தில் சாந்தி உண்டாகும். அவ்வாறு இருந்தால் முத்தி அடையலாம் (வீம:23).

4.9.2. பந்தத்திலிருந்து பற்றைப் பிரித்து நூலாசிரியர் கூறுவதோடு பற்றின் வகைகளையும் அதனால் ஏற்படும் பயன்களையும் தெளிவாக விளக்கியுள்ளார் எனலாம்.

### 4.10. பந்தம்:

4.10.0. சுற்றம், உறவு, பாசம், முறை, கட்டு, முடிச்சு, தளை, பற்றுபோன்ற பல பொருள்களைப் பந்தத்துக்குக் கொள்வர்[43]. ஞானவாசிட்டத்தில் பந்தம்பற்றி அதிகமாக ஆசிரியர் விளக்கவில்லை. பந்தம் ஏற்படும் நிலையையும், அதை மாற்றும் முறையும் அதனால் கிடைக்கும் பிரம்ம நிலையையும் சுருக்கமாகவே குறிப்பிட்டுள்ளார்.

#### 4.10.1. ஞானவாசிட்டத்தில் பந்தம்:

சிந்தனையின் விரிவே பந்தமாகும் (சித்:2). சரீரத்தையும், சரீரியையும் பிரித்தறிவது பற்றாகும். அந்தப்பற்றால் பந்தம் உண்டாகும் (வீத:3). விரும்பும்பொருள் ஒன்றினையாவது பொறிகள் அடையுமானால் அந்த ஆசையே பந்தமாகும் (மானு: 9) என்பர்.

#### 4.10.1.1. பந்தத்துக்குக் காரணம்:

பந்தம் அடையக் காரணமாயிருப்பது மனமே. சங்கற்பமும் பந்தமாகும். உடலேதான் என்கின்ற புத்தியே பந்தமாகும்.

விடய இச்சைகளில் அடிமைப்பட்டு வாழ்பவர்கள் பந்தமடைந் தவர்களாவர் (வித: 24).

### 4.10.1.2. பந்த நிவிர்த்தியும் அதன் பலனும்:

பந்தத்துக்குக் காரணமான விடயத்தை நீக்கினால் மோட்சம் அடையலாம். ஒரு போதும் துன்பமில்லாத நிருவாணத்தை இச்சிப்பவர்களாகிய முமூட்சுக்களுக்குரிய பந்தமானது அற்பமுமில் லாத திறமாகி சின்மாத்திரவடிவமுள்ள புத்தியானது பவத்தைக் கெடுக்கும். அதனால் முத்தியடையலாம். பரம்பொருள் பந்தத் துக்குக் கட்டுப்படாது. பிரம்மத்துக்குப்பந்தம் கிடையாது (சித்: 1). பந்தத்திற்கு ஆதி காரணமான சங்கற்பத்தைக் கெடுத் தால் அதுவே மோட்சமாகும் (மானு: 8, இட்சு: 20). மனைவி யிடத்தும் பொருட்களிடத்தும் பாசமிருந்தால் அது பந்தமாகும். இதைச் செய்பவர்கள் அஞ்ஞானிகள். இப்பந்தம் நீங்கினால் ஞானியாகலாம் (தாரு: 44).

4.10.2. பற்றினால் தான் பந்தம் உண்டாகும் எனப் பற்றை யும் பந்தத்தையும் ஆசிரியர் வேறுபடுத்திக் காட்டியுள்ளார் அவ்வாறு பந்தத்தினால் ஏற்படுபவற்றையும், பந்தம் நீங்கினால் முத்தி என்பதையும் தெளிவுபடுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.

### 4.11. ஆசை:

4.11.0. தன்னிடத்து இல்லாத ஒன்றைப்பெற்றாகவேண்டும் என்கின்ற எண்ணம் ஆசை எனப்படும்[44]. ஆசையை அன்பு, விரும்பம், இசை, வேட்கை, காதல், காமம், பற்று முதலான பலப்பொருட்களில் கூறுவர்[45]. ஞானவாசிட்டத்தில் ஆசையைக் காமம், குரோதம், பொருள் போன்றவற்றின்மேல் கொண்ட விருப்பமே என ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அவ்வாறு குறிப் பிட்ட செய்திகளை வகை செய்து விளக்கப்பட்டுள்ளன.

### 4.11.1. ஞானவாசிட்டத்தில் ஆசை:

மதுவுண்ட வண்டானது பாதாளம், ஆகாயம், எட்டுத்திக்கு ஆகியவற்றைக் கண நேரத்தில் சுற்றிவருவதுபோன்றது ஆசை என்பர். கிழத்தாசியானவள் தனக்கு ஒருபொருளும் கிடைக்கா விட்டாலும் பொருளுக்காக வேண்டி எவர் பின்னாலும் செல் வாள். அப்படிப்பட்ட குணத்தையுடையது ஆசை. கிடைக்கக்

கூடிய பொருள் எவ்வளவு கிடைத்தாலும், பின்னும் வேண்டும் என்று நாடும் நிலையற்ற ஆசையானது குரங்கைப்போல ஓரிடத்தில் தங்காது அலையும் என்பர் (வைரா: 81).

### 4.11.1.1. ஆசை ஏற்படக் காரணங்கள்;

ஆசைக்குக் காரணமாகக் காமக்குரோதங்களைக் கூறுவர்.

'கரைதலறு மோகமெனுங் காரிருளிற் றொழிற் கடங்காக் காதலல்லால்
உரைதரு காமாதிகளா முலூகநிரை யுணர்வெனும் விண் ணூலாவுமன்றே' (வைரா: 78.3,4)

என ஆசிரியர் விளக்கியுள்ளார்.

### 4.11.1.2. ஆசையின் வலிமை:

ஆசைக்கு மிஞ்சின வலிமை இல்லை. ஆசையானது மகாமேருவுக்கு ஒப்பான உயர்வு உள்ளவர்களையும், ஞானவான்களையும், திடமுள்ளவர்களையும், வீரர்களையும், மற்றுயாவரையும் நொடியில் துரும்பாக்கும் இது யானையைப் போல வலிமையுடையது. ஆசையென்னும் யானையானது வினைகள் என்னும் தந்தங்களுடன், வாசனை என்னும் மதங்களுடன், உடல் என்கின்ற வனத்திலிருந்து இந்திரியம் என்னும் கன்றுகளோடு பவப் பார்வை என்னும் யுத்தக்களத்தில் வசிக்கும் என யானையோடு ஆசையை ஒப்பிட்டுக் கூறியுள்ளார். (நிரு:49,50).

### 4.11.1.3. ஆசையினால் ஏற்படும் இன்னல்கள்:

1. ஆசையினால் மேன்மையுள்ளவர்களும் தாழ்வை அடைவார்கள்.

2. ஆசையினால் குற்றமற்றவர்களாயினும் சர்வஞானிகள் ஆயினும் படித்தவர்களாயினும், வலிமை பொருந்தியவர்களாயினும் பந்தப்படுவர் (தாம:32).

3. ஆசைக்குக் கட்டுப்பட்டால் உயிர் வாழ முடியாது (புண்:12).

4. ஆசையே ஆத்ம துரோகம் செய்யும் (நிரு:51).

5. ஆசையானது இருக்கும் மட்டும் பிறப்பு என்னும் விடவிருட்சமானது அழியாது.

6. ஆசை இருந்தால் ஆத்ம ஞானத்தை அடைய முடியாது (வைரா:79).

### 4.11.1.4. ஆசை அற்பமும் கூடாது எனல்:

'அற்பம்உனக் கொன்றினிதாகில் அதனால் பிறப்பி
லகப்பட்டாய்
பொற்பஉனக் கொன்றினும் இனிமை பூணாதென்னிற்
பிறப்பகன்றாய்
நிற்பநடப்பப் பொருட்டிரளின் நினக்குத்திரண முதலாகத்
தற்பமுறு பொன்முடிவாகச் சற்றும் இனிமையுற
வேண்டாம்' (மாறு:10)

என்னும் பாடலில் ஆசை எள்ளவும் கூடாது என்னும் கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

### 4.11.1.5. ஆசையைக் கெடுக்கும் கருவிகள்:

1. ஆசை என்கின்ற பந்தத்தைச் சங்கற்பத்தால் கெடுக்க வேண்டும்(புண்:12).

2. ஆசையைக் கெடுக்க வேண்டுமானால் மனத்தைக் கெடுக்க வேண்டும்.

3. மகாவாக்கியார்த்தங்களைக் குருவிடம் கேட்டால் ஞானம் உதிக்கும் அதனால் மன சஞ்சலம் நீங்கும். பின் ஆசை நீங்கும் (புசுண்:7).

4. தத்துவஞான நூற்களை ஆராய்ந்தவர்கள் ஆசையைக் கெடுப்பர் (புசுண்:6).

5. ஞானத்தால் இச்சை மயக்கத்தை மாற்றலாம் (திரு:54).

6. வாசனையாலும் ஆசையை நீக்கலாம் (திரு.55).

7. ............'எழுஞ் சித்தை யாசை
துறப்பில் பொன் விலங்காமித்தைத் துவக்கறத்து
டைத்தல் வேண்டும்' (புண்: 22 3.4)

என ஆசையை ஆரம்ப காலததிலே துடைத்து விடவேண்டும் என வலியுறுத்தியுள்ளார்.

### 3 .6. ஆசையை நீக்கினவர்கள்:

1. ஆசையை நீக்கினவர்களே தத்துவத்தை அறிந்தவர்கள் எனக் கூறுவர்.

'தெள்ளிய அறிவறிந்து ஆசைதீர்ந்து புத்திதெளிந்து இதயங்
கொண்டிடும் பந்தமெலாம் அறுத்தோரன்றோ உண்மைக் குறித்தறிந்தோர்'
(உபசா:7.34).

2. ஞானிகளும் ஆசையை நீக்கினவர்களே.

'பூட்டுமாசை வந்தணுகாப் புரணபோதம் உடையோர்க்கே (உபசா: 4 4) என உண்மை அறிந்தவர்களும் ஞானிகளும் ஆசையை நீக்கினவர்கள் என அறியமுடிகிறது.

### 4.11.1.7 ஆசையை நீக்கினால் அடையும் பயன்:

1. ஆசையை ஒழித்தால் பிறப்பைக் கொடுக்கின்ற அஞ்ஞானமே உண்டாவதில்லை (சிகித்:121).

2. ஆசையைத் தியாகம் செய்தால் சர்வமும் பிரம்மவடிவமாகும் (மாவலி:4).

3. ஆசை என்னும் விறகு நசித்தால் எண்ணம் என்னும் அக்கினிகெடும்.

4. ஆசையை நீக்கிய தேவர்களுக்கும் உலகிலுள்ள எல்லைத் துயரும் நீங்கிவிடும் (வைரா:82).

5. ஆசையைக் கெடுத்தால் இயமன் அணுகான் (புசுண்:75).

6. ஆசை நீங்கினால் ஞானம் உண்டாகும் என கீழ்வரும் பாடல்வரியால் அறியலாம்.

'மனத்தின் முளைக்கும் ஆசையெலாம் வடித்தகுடாரத் தான்மரம்போற்
கனத்த வேரோடறுமளவுங் கண்ணாஞானம் பெறும்'
(பாச: 16:1,2).

7. 'இச்சைபோக்கினால் அனைத்துப்போமே' (வில்வ:2.4).

8. ஞானபூமியை அடைவதற்குத் தடையாக இருப்பது ஆசை. அதைக்கெடுத்தால் இந்தப் பூமியின் முடிவைத் தரிசிக்கலாம் (நிரு:47).

9. ஆசையை அடைந்தால் பந்தமாகும். அதை விடுதலே மோட்சமாகும் (மாஜு:9).

10. அறிவில்லாதவர்களாக இருந்தாலும் இந்த மயக்கம் என்னும் ஆசையை விட்டவர்கள் பிரம்ம நிலையை அடைவார்கள் (மாவலி:5).

### 4.11.2. நிராசை:

ஆசையில்லாமையை அல்லது விருப்பமில்லாமையை நிராசை என்பர். பிரம்ம பதத்தை அடைதற்கு நிராசையே காரணம் என்றும் நிராசையை அடையவேண்டுமானால் சலன சத்தியையுடைய மனத்தைக் கெடுக்கவேண்டும் (உற்:11) என்றும், நிட்காம புண்ணிய பலத்தினால் அதி தீவிரனாகப் பிறப்பைக்கடக்க நிராசையில் பிறந்தவனே நிவிர்த்தன் (துறவி) (நிரு:10) என்று ஞானவாசிட்டம் குறிப்பிடுகிறது.

4.11.3. ஆசை, நிராசை இரண்டையும் விளக்கி அவற்றால் ஏற்படும் நிலைகளையும் விளக்கியுள்ளார். ஆசையை நீக்கினால் முத்திஅடையலாம் என்று குறிப்பிட்டு ஆசை அற்பமும் இருக்கக் கூடாது என நூலில் வலியுறுத்தப்பட்டுள்ளது. இந்த கருத்தையே,

'ஆசையறுமின்கள் ஆசையறு மின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்
ஆசைபடப்பட ஆய்வருந்துன்பங்கள்
ஆசைவிடவிட ஆனந்தமாமே' (திரு: 2615)

என்னும் திருமந்திரப்பாடல் வலியுறுத்துகிறது.

### 4.12. அகங்காரம்:-

4.12.0.1. அகங்காரம் என்பதைத் தான் எனல், இறுமாப்பு, செருக்கு, ஆணவம் எனக்கூறுவர். தன்னைத் தெரியாதா என்றும் தனக்கு எவ்வளவு செல்வம் இருக்கிறது என்றும் தன்னிலும் மேம்பட்டவர் யார் என்றும் சொல்லுவதே அகங்காரமாகும்[46]. அகங்காரம் எனப்படுவது இயக்கமற்றது[47]. புத்தியிலிருந்து தோன்றுவது அகங்காரம். இந்த அகங்காரம் அதனிடத்துள்ள குணங்களின் அளவை ஒட்டி மூன்று வகைப்படும். மூவகைக் குணங்களுள் சத்துவகுணம் மேலோங்கி நிற்கும் பினு, வைகாரிக அகங்காரம் எனப்படும்[48].

4.12.0.2. அகங்காரம், ஒருமனிதனை இன்னொரு மனிதனிடத்திருந்து பிரித்து வைக்கிறது. நீர்மீது போட்டிருக்கும் குச்சிககு நிகர் அகங்காரம். நீரை இரண்டாகப்பிரித்து வைத்திருப்பது போன்று அது காட்சி கொடுக்கிறது. அகங்காரம் அகன்று போனபிறகு உள்ளும் புறமும் இருப்பது பிரம்மம்[49].

4.12.1. ஞானவாசிட்டம் அகங்காரத்தை மூன்று வகையாகப் பிரித்துக்கூறுகிறது. மேலும் அகங்காரத்திற்குக் காரணம், அதைக் கெடுக்கும் வழி அதனால் அடையும் பயன் போன்ற நிலைகளில் விளக்கியுள்ளார். ஆசிரியர் அகங்காரத்தை சில இடங்களில் அகம்பாவம் என்றும் கூறியுள்ளார்.

### 4.12.1.1. அகங்காரத்தின் இயல்பு:

அகங்காரமானது உலகத்தின் இச்சைக்கும், ஆபத்துக்கும் இடமாகியும், நிலையில்லாததாயும், மனத்தின்கண்ணிருப்ப தாயும், உன்மத்தமாயும் விசாரணையும் அறிவு மில்லாததாயும் இருக்கும் (வைரா: 73) என்பர்.

### 4.12.1.2. அகங்காரத்தின் வகைகள்:

அகங்காரத்தை மூன்று வகையாகப்பிரித்துக் கூறியுள்ளார். தம்மையன்றி ஒரு பாவனையும் இல்லையென்று ஆராய்ந்தறிகின்ற ஞானமே அகங்கா்ரம்[1].

'யாவது பரமு நாமே யீறிலமெமை யலாதோர்
பாவனையில தென்றோரும் போதமே பரமாங்காரம்'
(வீம: 11.3,4).

2. நெல்லின் வால் நுனியிலுஞ் சுட்சுமமாகியும், எல்லா உலகங்களுக்குப் புறம்பாகியும், தாம் எப்பொழுதும் நிலையாய் இருக்கின்றோம் என்று கொள்ளப்படுகின்ற ஞானமே அகங்காரம் (வீம: 12). இது இரண்டாம் வகையாகும்.

3. 'கரசரணாதி மட்டா நானிவனென்று காணுந் திறமது தானே மூன்றாமகங்கரம்' (வீம: 13.1,2) என மூன்றாம் வகையை விளக்கியுள்ளார்.

4. இந்த மூன்று வகை அகங்காரமும் உலகத்திலுள்ள அனை வருக்கும் உரியதாகும். இவை மிகவும் கொடியன இவை பிறப்பு என்கின்ற நச்சுமரம் வளர்தலுக்குக் காரணமாகும் என்பர்.

### 4.12.1.3. அகங்காரத்துக்குக் காரணம்:

1. அகங்காரம் என்கின்ற குற்றத்துக்குக் காரணமானது போதமாகும் (சிகித்: 144).

2. தான், தனது என்கின்றதும் அகங்காரத்துக்காரணமாகும் (லீலை: 63).

3. நித்திய கன்மங்களும், ஓமம், உணவு முதலியவும் காரண மாகும் (வைரா: 72).

4. மோகம் என்னும் நச்சுக் கொடி வளர்வதற்கும், துக்கம் என்னும் பாம்பு அரசாட்சி செய்வதற்கும் காரணம் அகங்கார அஞ்ஞானமேயாகும் (புண்: 1).

5. விகாரம், மனதுக்கம், பொய்வடிவம் இவற்றால் அகங்காரம் உண்டாகும் (வைரா: 72).

### 4.12.1.4. அகங்காரத்தை கெடுக்கும் வழி:

1. ஞானத்தினால் அகம்பாவம் கெடும் (வீம: 9).

2. சன்மார்க்கத்தினால் அந்தமனம் என்னும் மரத்தினது மூலமாகிய அகம் பாவனையை மாற்றலாம் (சிகித்: 141).

3. களிப்புமிகுந்த போகங்களை விடவேண்டும் (சுகர். 20).

4. திட நிச்சயத்தால் அகம்பாவம் மாறும் (விரத: 19).

5. 'அகமெனலொழிக்கில் தானே யங்கமும் அயிலீர்ந்த நகமெனவிறக்கும்' (புண்: 14 1.2) என்பர்.

### 4.12.1.5. அகங்காரம் உள்ளவர்களது இழிவு:

அகங்காரத்தில் கட்டுண்டு மயங்குபவர்கள் கீழுக்குக் கீழான பிறப்பை அடைந்தவர்களாவார் (இட்சு: 52).

### 4.12.1.6. அகங்காரம் அற்றவர்களின் உயர்வு:

அகங்காரத்தை அறிவினால் கெடுத்தவர்கள் மேலுக்கு மேலான முத்தியை அடைவார்கள் என கீழ்வரும் பாடல் வரியால் அறிய லாம்.

> 'இதற்கு நானிதெனக்கவன் மற்றிவனானா
> னென்றிடுமோக
> விதத்தை யுயர் புந்தியினாலே விட்டோர் மேற்குமேற்
> செல்வோர்' (இட்சு: 58.12).

### 4.12.1.7. அகங்காரம் நீங்கினரல் அடையும் நிலை:

1. தான் என்கின்ற அற்பவுணர்வு கெடுமானால் உலகம் அனைத்துமான பரந்த ஞானம் உண்டாகும் (புண்: 3).

2. தான் என்கின்ற வாசனை நீங்கினால் எங்கும் வாழலாம் (ஏருது: 10).

3. அறிவற்ற அகம்பாவத்தை இச்சையற்ற ஆத்ம ஞானத்தினால் கெடுத்தால் சீவன் முத்திப்பதத்தை அடையலாம் (மித்தை: 20).

4. அகங்காரம் நீங்கி ஞானம் அடைந்தவர்களுக்கு நாடும் காடும் ஒன்றே எனலாம்.

> 'நல்லறிவு நிறைந்தோர்க்கு மப்படியே காடொக்கு நாடு தானே' (சுரகு: 11.4)

5. தான் என்பதை ஞானத்தால் கெடுப்பவர்களே மகான்கள் ஆவார் என அகங்காரம் நீக்கியவர்கள் அடையும் நிலை பற்றி கீழ் வரும் பாடலால் அறியமுடிகிறது.

> 'நானெனும் பொருள் காணாதோர் ஞானவாகாயங் காணார்
> நானெனும் பொருளைக்கண்டோர் ஞானவாகாயமாவார்
> நானெனுமகங்காரக்கார் ஞானவிண் மதியைமூடின்
> நானெனாப் பரமவாம் பனன்மலர் விரியாதன்றே'
> (வீம: 8).

4.12.2. வெள்ளப்பூண்டின் சாறுவைத்திருந்த பாத்திரம் எத்தனைதரம் கழுவித் துடைக்கப்பட்டபோதிலும் அது நாற்றத்தைக் கொடுத்துக் கொண்டேதான் இருக்கும். அதுபோன்றே அகங்காரமானது வெகுப்டிவாதமுள்ள அஞ்ஞானமாகும். எவ்வளவுதான் சிரமப்பட்ட போதிலும் அதைமுற்றிலும் போக்க முடியாத காரியம் என்பர்[50]. இந்தக் கருத்தை ஞானவாசிட்டம் ஒத்துக் கொண்ட போதிலும் முயற்சி, ஞானம், விசாரணை, சன்மார்க்கம், மனஉறுதி போன்றவற்றால் மாற்றலாம் என்றும் மாற்றினால் முத்தி அடையலாம் என்றும் தெளிவாக்கியுள்ளது.

### 4.13. மாயை:

4.13.0. மாயையைப் பற்றிய திறனாய்வாளர்களின் கருத்துகள் ஞானவாசிட்டத்தில் எவ்வாறு அமைந்துள்ளது என்பது பற்றி இங்கு தெளிவுப்படுத்தப்பட்டுள்ளது.

4.13.0.1. சீவாத்மா பரமாத்மாவை அடைவதற்கு ஆணவம் கனமம் மாயை என்ற மும்மலங்களும் தடையாயிருப்பவை. இவற்றுள் மாயையே எல்லாவற்றிற்கும் காரணமாகும். உடல், உலகம் ஆகியவற்றின் உற்பத்திக்கும்

ஒடுக்கத்திற்கும் மூலகாரணமாயுள்ள பொருள் மாயை எனப்படும்[51]. இம்மாயை என்ற சொல் 'ம்', 'யா' என்ற இருபகுதிகளால் ஆனது. 'யா' என்றால் விரிவு என்றும், 'ம்' என்றால் ஒடுக்கம் என்றும் பொருள் கொள்வர்[52]. மாயை தோன்றாததையும் தோற்றுவிக்கும் தன்மையுடையது. எது கூடாததையும் கூட்டிவைக்கும் எண்ணமுடையதோ அதுவே மாயை இந்த மாயை கீதையில் தெய்வீக மாயை யென்றும், குணமயீயென்றும் இறைவன் அருள் இல்லாதவர்கள் இதைத் தாண்டமுடியாதென்றும் குறிப்பிடப்படுகின்றது. இதைச் சாங்கியர்கள் பிரகிருத என்றும், சாமியாவஸ்தையென்றும் பிரதான மென்றும் சொல்லுவார்கள். மாயையை வேதாந்திகள் மாயை என்றும், சத்தியென்றும் கூறுவார்கள். மாயையை பிரகிருத என்றும் மாயையையுடையவனை மகேஸ்வரன் என்றும் சுவேதாசுவதரசுருதி கூறுகின்றது. மாயையை இத்தன்மைத்தென்று (அநிர்வசனீயம்) சொல்ல முடியாதென்றும், ஜடமென்றும், துச்சமென்றும் (பாதயோக்கிய சொரூபமுடையதென்றும்) ஞானத்தால் அழியக் கூடியதென்றும் வித்யாரண்ய சுவாமிகள் பஞ்சதசியில் கூறுகின்றார். மாயை, அவித்தை, அஞ்ஞானம், அறியாமை, பிரகிருதி, பிராந்தி, மயக்கம் என்பன ஒரு பொருட் சொற்கள் ஆகும்[53].

4.13.0.2. மாயை என்னும் சொல் இருக்கு வேதம் போன்ற பண்டை நூற்களில் சத்தி, கபடம், வஞ்சனை, இந்திர சாலம் என்ற பொருட்களில் காணப்படுகின்றது. 'மா' என்ற தாதுவிலிருந்து மாயை என்ற பதம் வருகிறபடியால் அதற்கு அளவை என்ற பொருள் உண்டு. மாயையானது உலகத்தைத் தோற்றுவித்து அதனாலே அளவற்றதாகிய உண்மைப் பொருளை அளப்பது போலக்காண்கிறது[54]. மாயை சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதிமாயை என மூவகைப்படும். இவற்றில் சுத்தமாயை, பலகன்மங்களோடு விரவாது சுத்தகாரிய பிரபஞ்சத்திற்கு முதற் காரணமாயிருப்பது. அசுத்தமாயை சுத்தமாயையின் கீழடங்கிப் பல கன்மங்களோடு விரவிச் சுத்தாசுத்த காரிய பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாயிருப்பது ஆகும்[55].

4.13 0.3 பிரம்மத்தை முழுமையாகப் பார்க்கும் கருத்துப்படி மாயைக்கு பொருள் ஒன்றுமில்லை. சார்புடைய பொருளாகப்

பார்க்கும் கருத்துபடி தான் மாயா என்பது பொருள் உள்ளதாகக் காணப்பகின்றது. ஒருவன் மாயை உண்மையானதா பொய்யானதா என்று கேட்டால் அதற்கு ஒரே விடை 'அது உண்மை யானதுமன்று; பொய்யானதுமன்று'. உலகம் பல்வேறு விதமாகத் தோற்றம் அளிப்பதால் மாயை என்பது பொய்யானதன்று. போல இருமையில்லாத ஆன்மாவினுடைய அறிவால் மாயையை சுத்திப் பண்ணப்படுவதால், அது உண்மையானதுமன்று, மாயை பற்றிய விசாரணை எல்லாம் மாயை என்கின்ற கருத்தைப் புரிந்து கொள்வதற்கன்று; அதைக் கடந்து செல்வதற்கு உதவியாக இருப்பதற்கே. ஒருவன் மாயையைக் கடந்து சென்றுவிட்டா னானால் பிறகு தீர்க்கப்பட்டவேண்டிய சிக்கலுக்கு இடமில்லை என்பர்[56].

4.13.0 4. மாயையை என்னவென்று உணராவிடில் அத்வைத மதத்தை அறிய இயலாது. அத்வைத மதத்தை ஏற்றுக் கொள் ளாதவர்கள் அம்மதத்தை மாயாவாதம் என்று கூறுவார்கள். சங்கரருக்குப் பரம குருவகாக் கருதப்படும் கௌடபாதர், தம் புலன்களுக்குத் தோன்றும் உலகம் வெறும் மாயை என்றும் அத்வைதம் இரண்டற்ற தனித்த உண்மைப் பொருள் என்றும் அறிவுறுத்திருக்கிறார். சங்கரரும், அவரைப் பின்பற்றி வந்தவர் களும் மாயை, பொய்த் தோற்றம் என்றும், தோன்றும் உலகத் துக்குக் காரணமானது என்றும் கருதுகிறார்கள். இந்தக் கருத்தை அடியொற்றியே ஞானவாசிட்டத்தில் மாயையை ஆசிரியர் கையாண்டுள்ளார்.

4.13.0.5. சைவசித்தாந்தத்தில் மாயை உலகத்திற்குக் காரண மாகிய பொருள் என்றும், சிவன் நிமித்தகாரணம் என்றும், மாயை உபாதன காரணம் என்றும் கூறப்படுகிறது. சிவனுடைய தூண்டுதலினால் மாயை உண்டாகிறது என்பர்[57].

4.13.0.6. வேதாந்தத்தில் மாயை பிரதானமான ஓர் இடத் தைத வகிக்கின்றது. இந்திய தத்துவ ஞான நூலாசிரியர்கள் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், கி. லட்சுமணன் போன்றோர் மாயையை ஆறு பொருளில் வேதாந்திகள் கையாளுவதாகவும், மாயை என்ற சொல்லைப் பல கருத்தில் வழங்குவதாகவும் குறிப் பிடும் இரண்டு விதமான கருத்துகளையும் டாக்டர் டி. எம். பி. மகாதேவன் தம்முடைய நூலில் சுட்டிச்செல்கின்றார்[58].

இவரே பிரம்மமும் மாயையும் தனித்தனி நிலையில் இவ்வுலகில் பருமை காரணமாக விளங்க முடியும் என்றும் பிரம்மமும் மாயை யும் கலந்த ஒன்றுதான் பருமை காரணமாக முடியும் என்றும் கூறுகிறார்[59].

4.13.1. ஞானவாசிட்டத்தில், மேற்குறிப்பிட்டிருப்பது போன்று மாயையைப்பற்றிய வரையறைகளும், அதன் பகுப்பு முறைகளும் குறிப்பிடப்படவில்லை எல்லாம் மாயை என்ற கருத் தையே வலியுறுத்துகிறது. அதற்கு வலுவூட்டுவதாக நூலின் கருத் துகளை மாயை, அதன் மூலங்கள், மாயையைக் கெடுக்கும் வழிகள், அதனால் அடையும் பயன் போன்ற வகையில் இந்தப் பகுதியில் பிரித்து விளக்கப்பட்டுள்ளது.

### *4.13.1.1. ஞானவாசிட்டத்தில் மாயை:*

பேதமுறு புந்தியே மாயையாகும்' (தாகு: 18.1). வேற்றுமை உள்ள ஞானமே மாயை என்கிறார். உலகத்திலுள்ள பொருட் களின் வேற்றுமைகள் அனைத்தும் மாயா மயக்கங்களாகும் (உபசா: 3). மாயை கானல் நீர்போல உண்மை எனக்குறிப் பிட்டுள்ளார் (சதவு:16).

### *4.13.1.2. மாயையின் மூலங்கள்:*

மாயையின் இருப்பிடமும் உட்பொருளும் தமது ஆன்மா என்பர்[60].

ஞானவாசிட்டத்தில் மாயையின் மூலமாக உடலையும் மனத் தையும் கூறுகிறார்.

1. 'மாயையெனுஞ் சூழ்கொடிக்கு நின்றவுடலெனும் வித்து' (உபசா: 17.2).

2. மனத்தை மாயையின் மூளை என்பர் (உபசா: 10.4).

3. தோன்றிமறைகின்ற மாயைக்கு ஆசையே வடிவ மாகும் (உற்: 19.2) என உடல், மூளை, ஆசை ஆகிய மூன்றையும் சுட்டிக்காட்டியுள்ளார் ஆசிரியர்.

### *4.13.1.3 மாயை இல்லை எனல்:*

மாயை என்ற ஒன்று இல்லை எனவும் எல்லாம் பிரம்மமே எனவும் குறிப்பிட்டுள்ளார் (நிரு:1).

'நனிமெய்யாய் மாயையில தென்றிவ்வாறு நாடுவாய்' (தாகு: 17.1).

'பனிமாயையில்லையென லென் சொல்லாலே' (தாகு: 17:3).

மேலும் மாயையின் நிலையை வரையறை செய்ய முடியாது என்று கதைகள் மூலம் விளக்கியுள்ளார். இந்த உலகத்தின் உண்மை யற்ற நிலையைச் சித்தரிக்க பாலன் கதையைக் (3.7) கூறியுள்ள தைக் காணலாம்.

### 4.13.1.4. மாயையைக் கெடுக்கும் வழி:

1. மாயைக்கு மூலமானது மனம்; அதனைக் கெடுக்க வேண்டும் (உத்: 8).

2. பூசை செய்தாலும் மாயை கெடும் (தேவ: 55).

3. எய்த அம்புகளை அம்பாலும், நஞ்சை நஞ்சாலும் பகை, யைப் பகையாலும், தீமையைத் தீமையாலும் கெடுப்பது போல மாயை மாயையால் கெடுக்கவேண்டும் (தாகு: 16).

4. வாசனைகளை அழித்தால் அதுவே மாயைக்கு அழி வாகும் (உற்: 16).

5. மாயைய ஆசிரியர்கள் அறிவுரைகளால் மாற்றலாம் (தேவ. 56) எனக் கீழ்வரும் பாடல் வரி தெளிவுபடுத்துகிறதைக் காணலாம்.

> கருதிமலத்தான் மலமறுக்குங் காருவென்ன மாயை தனைப்
> பெருமாயையினாற் செறல் வேண்டும் பெரிய மாயை காரணமாம்
> பொருளன்றாயுங் குருவாக்காற் புகலும் பொருளாய்க் காரணமாய்
> மருவு முணர்வாந் தன்னுருவை வழுவாதளிக்கு முணர் வோர்க்கே' (தேவ. 57)

### 4.13.1.5. மாயையினால் அடையும் நிலை:

மாயை அறிவில்லாதவர்களுக்கு அருளால் உண்டாகும் (புசுண்: 9). இவன், அவன், தான், நீ, அது, இது, எனது என்றே மாயையில் மூழ்குபவர்கள் அறிவில்லாதவராவார் (காதி: 32.) மாயையில் மயங்காதவர்களை ஞானிகள் என்றும் அல்லா தவர்களை அஞ்ஞானிகள் என்றும் கூறுவர்.

### 4.13.1.6. மாயையைக் கெடுத்தால் அடையும் பயன்:

1. மாயைக் கெடுத்தால் சச்சிதாந்தமாக விளங்கலாம். (உத்: 8).

2. மாயையை நீக்கினால் ஞானியாகலாம் (தாகு: 17).

4.13.2 மாயையே எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக உள்ளது என்பது வேதவாக்கு. எனவேதான் பிரம்மமும் மாயையும் தனித்தனி நிலையில் இந்த உலகில் பருமை காரணமாக விளங்க முடியாது என்கின்றனர். பிரம்மத்தை எவ்வாறு வரையறை செய்ய முடியாதோ அதுபோன்றே மாயையினையும் வரையறை செய்யமுடியாது. பிரம்மத்தை அடைவதற்கு மாயை தடையாக இருக்கிறது. அந்தத் தடையை பூசை, ஞானம், குருவாக்கு இவற்றால் நீக்கிவிடலாம். அப்படி நீக்கியவர்களே பிரம்ம நிலையை அடையமுடியும் என ஞானவாசிட்டம் தெளிவாக வலியுறுத்துகிறது. மாயாவாதத்தை பலவகையாகப் பல கதைகள் மூலம் தெளிவுபடுத்தி அதைத் தவத்தினால் மாற்றியவர்களையும் ஆசிரியர் எடுத்துக்காட்டியிருப்பது போற்றத்தக்கதாகும்.

### 4.14. உலகம்:

4.14.0. உலகம் வரையறை செய்ய முடியாதது என்றும் இல்லை என்றும் கூறும் கருத்துகளும் உள்ளன. அவை பற்றி இங்கு விளக்கப்பட்டுள்ளது.

4.14.0.1. புராணக் கருத்துபடி உலகங்கள் பதினான்கு என்பர். அவை கீழுலகம் ஏழும், மேலுகம் ஏழும் ஆகும்[61] நீலகேசியில் (1:75) உலகங்கள் பல உள்ளன என்ற குறிப்புள்ளது ஞானவாசிட்டத்தில் உலகங்களின் எண்ணிக்கையைப் பற்றியக் குறிப்பில்லை. ஆனால் சிற்சத்தியினளவே உலகம் என (இட்சு:14) குறிப்பிட்டிருப்பதால் உலகத்தின் அளவை வரையறை செய்ய முடியாது எனக் கொள்ளலாம்.

4.14.0.2. உலகம் என்பது பிரபஞ்சம் என்ற பொருளிலேயே புராணங்களில் கையாளப்பட்டுள்ளது. இந்த உலகம் உண்மையா பொய்யா என்பது பற்றித் தத்துவ ஞானிகளிடம் கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன இந்திய தத்துவ ஞானிகளுள் சங்கரரும் அவரைப் பின்பற்றுவோரும் இந்த உலகம் கயிறு, பாம்பாகத் தோன்றுவது போன்ற ஒரு தோற்றமே ஒழிய உண்மையன்று எனக் கருதத் தொடங்கினர். அவர்களுடைய கருத்துக்கு மாறாக சைவ சித்தாந்திகள், உலகம் பொய்யன்று; அது இல்லாத பொருளன்று; அது உள்ள பொருளே என்ற கருத்துடையவர்களாவர்[62].

4.14.1. ஞானவாசிட்டத்தில் சங்கருடைய கருத்தையொட்டியே உலகம் என்ற ஒன்று இல்லை என்பது வலியுறுத்தப்படுகிறது

**4.14.1.1. உலகத்தின் வடிவம்:**

உலகமானது இல்லாததுமன்று, உண்டானதுமன்று, அறிவில்லா உருவமுமன்று, அறிவுருவுமன்று, ஆத்ம வடிவமுமன்று; அநாத்ம வடிவமுமன்று (இட்சு:56) என்பர். உலகம் பேய் போலக் காணப்படும் (திதி. கசன்.2) என்பர்.

அற்பமாகப் பார்க்கின்ற இந்த உலகங்கள் கந்தர்வ நகரம் போலவும் அளர்ப்பூமியிற் தோன்றும் கானற் நீர்ப் போலவும் ஒன்றுமில்லை (இட்சு:14) என்றும், அற்பமும் இந்திரியங்களுக் கெட்டாததாகியும் விளங்குகின்ற ஆகாயத்திலும், சூட்சுமமாகியும், வேதாந்தத்தில் குறைவு இல்லாததாகியும் அழிவில்லாமல் எப்போதும் இருப்பதை ஆத்ம வடிவமாகும் (இட்சு:13) என்றும் உலகத்தின் உருவத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

**4.14.1.2. உலகத்தின் அளவு:**

4.14.1.2. ஞான சத்தியினுடைய எண்ணமே உலகம் என திதிப்பிரகரண கசன் கதை மூலம் விளக்கியுள்ளார். மேலும் இருபத்தோரு நரகம் (திதி. கசன்:6.1) உண்டு என்றும் பாதாள உலகம், பூலோகம், தேவலோகம் என மூன்று (திதி.கசன்:16.8) இருந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார். இட்சுவாகு கதையிலும் உலகம் அளவற்றது என விளக்கியுள்ளார் (இட்சு:14).

**4.14.1.3. உலகத் தோற்றமும் ஒடுக்கமும்:**

அறிஞருக்கு உலக முழுதும் நீங்காத உறவாகும்; எதார்த்தமாகப் பார்த்தால் உலகம் பகையாகவும் உறவாகவும் தோன்றும் (புண்:85). அதிசூட்சுமமான பிரம்மத்தில் உலகம் ஆத்ம ஞான நூற்களினாலும் சாது சங்கத்தினாலும் ஒதுங்கும் (ஞான:35) என்பர்.

4.14.2. இவ்வாறு உலகம் பல உண்டு கூறினாலும் உலகம் என்பது ஒன்றுமில்லை என்றும் அப்படி உள்ளதாகத் தோன்றினால் அது ஆத்ம ஞான நூற்களினாலும் சாதுசங்கத்தினாலும் மாறும் என்றும் குறிப்பிட்டுள்ளார் ஆசிரியர். பிரம்மத்தைத் தவிர மற்ற எல்லாம் நிலையற்றவை என்ற கருத்தை உறுதிப்படுத்த இதுவும் ஒரு சான்றாக உள்ளது எனலாம்.

## 4.15. முயற்சி

4.15.0. முயற்சியினால் அடைய முடியாதது எதுவும் இல்லை என்றும் அதனால் பரமபதத்தை அடையலாம் என ஞானவாசிட்டத்தில் ஆசிரியர் பலவகையாகச் சித்தரித்துள்ளார்.

### 4.15.1. முயற்சி இருவகைப்படும்:

முயற்சி பலவகையாக இருந்தாலும் இறைவனை அடைய முக்கியமாக இருவகையாகக் கூறலாம் என கீழ்வரும் பாடல் வரிவழி தெளிவு படுத்தியுள்ளார்.

'மாகலை நன்னூன் முயற்சி யொன்றா மொன்று
வருநூலிலாமுயற்சி' (முமுட்: 1.2).

### 4.15.2. முயற்சியின் பயன்கள்:

1. முயற்சியின் பெருமையினால் தத்துவத்தை அறிகின்ற உலகமானது அற்பமாகத் தோன்றும் (உத்: 2).

2. முயற்சிக்கின்ற ஒழுக்கத்தினாலும் நூல் அறிவினாலும் முதன்மையான விவகாரத்தினாலும் உள்ளபடி பொருந்து பவனே உயர்ந்தவனாவான் (திரு: 36).

3. 'முயலுநற் குணங்களாலே மொய்புகழெய்தினோர்களே' (வீம: 3.4) என புகழ் அடைந்தவர்கள் எல்லாம் முயற்சியினால் அடைந்தவர்கள் ஆவார் என்பர்.

4. தன்வருத்த முயற்சியாலே பிரம்மபதம் அடையலாம் என கீழ்வரும் வரியால் விளக்கப்பட்டுள்ளது.
'அற்புதனே தன்வருத்த முயற்சியாலே அடையலாம்
பரமபதமயல் வேறின்றி' (முமுட்: 2.2).

5. முயற்சியால் பிறவி மயக்கம் தீரும்.

6. 'இந்த வசாவாந்தன் முயற்சியிட்டதீர் முடிவில் புத மனிக்கும் என்பர் (திரு: 6.1).

7. முயற்சியினால் ஆசையை அழிக்கலாம்.

8. முயற்சியினால் மனத்தையும் வாசனையும் தீக்கலாம் என்பர் (திரு: 56).

4.15.3. முயற்சினால் பிரம்மபதம், ஞானம் போன்றவற்றை அடையலாம் என ஞானவாசிட்டம் பல கதைகள் வழியாக விளக்கியுள்ளது.

'முயற்சி திருவினை ஆக்கும்' (குறள்: 616) என்னும் குறள் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கதாகும்.

4.15.4. இராமன் வைராக்கிய நிலையின் பற்றற்ற நிலையில் இருப்பதைக் கண்ட முனிவர்கள் முயற்சி செய்தால் அடைய முடியாதது ஏதுவும் இல்லை என்பதை பல கதைகள் வாயிலாகக் கூறி அவனை நெறிப் படுத்தினார்கள் என்பது வெளிப் படையாகத் தெரியும் கருத்தாகும்.

## 4.16. வழிபாடு:

4.16.0. வழிபாடு என்ற இந்தப் பகுதியில் பத்தி, பூசை, வழிபாட்டுப் பொருட்கள், வழிபாட்டுக்குரியவை, தவம், கயதோ சாந்தி போன்ற பிரிவுகளில் கருத்துகளை வகைப்படுத்தப் பட்டுள்ளது.

4.6.0.1. வழிபாடு கடவுளுக்காகச் செய்யப்படுவதன்று; கடவுளை முன்னிட்டு செய்யப்படுவது. அதன் பயன் கடவுளுக் கன்று, உயிர்களுக்கே ஆகும்[63]. வழிபாடு என்பது இடைவிடா நினைப்பு[64]. இந்த வழிபாட்டு முறையை அகவழிபாடு, புற வழிபாடு என இரு வகையாகப் பிரிக்கலாம். புறவழிபாட்டில் பத்தியினால் செய்யும் பூசை, விக்கிரக வழிபாடு, தவம் செய்தல் போன்றவற்றையும், அகவழிபாட்டில் யோக அங்கங்கள் எட்டை யும் அடக்குவர். இந்த வழிபாட்டு நிலைகளை ஞானவாசிட்டம் சுட்டுகின்ற முறைமை அடிப்படையில் விளக்கப்படுகின்றது.

### 4.16.1. பக்தி:

4.16.1.1. மனிதனோடு மனிதன் அன்புடன் வைக்கிற நல்லிணக் கத்தைத் தெய்வத்திடம் திருப்புவது பத்தி[65]. பத்தி என்றால் ஆண்டவனையும், அவன் அருளைப் பெற்ற அடியார்களையும், அவன் திருவுருவங்களையும் கண்டு உள்ளம் நெருப்பைக் கண்ட மெழுகு போல் உருகுவதாகும். பாகவதர்கள், அக்கினியைக் கண்ட வெண்ணெய் எப்படி உருகுகின்றதோ அதுபோல ஆண்டவனுடைய அருள் நாமங்களைக் கேட்டு உள்ளங் கசிந்துருகிப் பெருக்கெடுத்து ஓடுவதைப் பத்தி என்றும் கூறுவர்[66].

4.16.1.2. பத்தியை வைதி பத்தி (அனன்னியபத்தி) என்றும், ராகானுகா (பிரேமலட்சணாபத்தி) என்றும் இரு வகையாகப் பிரித்துக் கூறுவர். அனன்யபத்தி, 'ந' அன்னியம், 'இதி' அனன்யம் வேறு அற்றதன்மை என்று கொள்ளலாம். இறைவன் தனக்கு அன்னியமாக இல்லை. அவனே தாமாக இருக்கிறோம் என்று பாவிப்பது அனன்ய பத்தி ஆகும். இதுவே அத்வைத பத்தியாகும். இதை இன்னொரு விதமாகவும் கூறுவர். ந/அன்னயம் அனன்ய மென்று பிரித்து ஆண்டவனுக்கு அன்னியமான உலகங்களில் அன்பு செய்யாமல் ஆண்டவனிடத்தில் மட்டும் அன்பு செய்வது அனன்னிய பத்தியென்று இராமானுசர், வல்லபர் முதலியோர் கூறுகின்றனர். இரண்டாவது பத்தி, 'சாது பிரேமரூபணீ' (அந்தப்பத்தி பிரேம வடிவமுடையது) என்று கூறுவர். அன்பு ஆண்டவனுக்கு வேறன்று. ஆண்டவனுக்கு வேறாகப் பத்தி இல்லை. அது சைவ மரபுக்குப் பொருந்தும். பிரேமலட்சண பத்தியை வைஷ்ணவர்கள், சிரவணபத்தி, கீர்த்தன பத்தி, சிந்தளபத்தி, பாதசேவனபத்தி அர்ச்சனைபத்தி, வந்தனபத்தி, தாஸ்யபத்தி சகுக்கிய பத்தி, ஆத்ம நிவேதனபத்தி என ஒன்பது வகையாகக் கூறுவர்[67]. ஞானவாசிட்டத்தில் பத்தியின் வகைகள் பற்றி விளக்கப்படவில்லை.

4.16.1.3. பத்தியும் அறிவைப்போல விடுதலை தரவல்லது என்ற பாரதிதீர்த்தர் கொள்கை ஞானவாசிட்டத்தில் வலியுறுத்தப் படுகிறது.

4.16.1.3.1. பத்தியைத்தவிர வேறு எந்த முறையினாலும் நாராயணனை அடைய முடியாது எனப் பிரகலாதன் வாயிலாகப் பத்தியை வெளிப்படுத்தியுள்ளார்.

........................'நாராயணன் சரணம்
பத்தனாகி நானாவனாய்ப் பகிரா தொழிக பாவனையே'
(பிரக:4.3,4)

என நாராயணன் மேல் பத்திகொண்டால் அவனாகலாம் என்பதை குறிப்பிட்டுள்ளார்.

### 4.16.2. பூசை:

'தான்' என்பதை நீக்குதலே பூசை என்பர்.

'அனைத்தான பூசையினும் அங்கத்தைச் சுடுதலேய
மலமாகும்
வினைத்தேக உடலை நான் என்னும் அந்விடுதலே
மிகுந்தபூசை' (தேவ:30.1,2)

என பூசையை விளக்கிய ஆசிரியர் மேலும் பூசையை அகப்பூசை, புறப்பூசை என இருவகையாகப் பிரித்து தெளிவுபடுத்தியுள்ளார்,

### 4.16.2.1. அகப்பூசை:

1. எப்பொழுதும் உடலில் உறைந்திருக்கின்ற தெய்வத்தை ஞானஅர்ச்சனையினால் ஆராதனை செய்தல்.
2. மனம் முதலிய யாவும் அியின சத்தியாயுள்ள சத்தினை ஆராதித்தல்.
3. எப்பொழுது தன்னை விட்டு நீங்காத அறிவையே தான் என நினைத்து ஆராதித்தல்.
4. ஆத்மாவை ஆராதித்தல்.
5. எல்லாவற்றையும் உணர்வாக நினைத்துப் பூசை செய்தல்.
6. எப்போதும் எல்லா உருவங்களினாலும் சகல ஆசைகளினாலும் நெருங்கிய யாவும் பிரம்மமே என்று தெளிந்து ஆராதனை செய்தல்.
7. பல நூற் பொருட்களினாலும், ஆசிரியவசனத்தினாலும் பெறுதற்கரிய தனது ஞானத்தினால் தானே உணர்ந்து பூசை செய்தல்.

இவ்வாறு அகப்பூசையைப் பற்றிக் கூறி அதனால் சமாதி ஞானம் கிடைக்கும் என விளக்கியுள்ளார். (தேவ: 41-59).

### 4.16.2.2. புறப்பூசை:

1. உணர்வே தெய்வம் என ஆராதனை செய்யவேண்டும்.
2. விக்கிரக வழிபாடு கூடாது.
3. ஆத்ம ஞானத்தை ஆராதனை செய்வதே மகாபூசை.
4. எல்லா பூசைகளிலும் பாவனையைத் தகித்தலே நிறைந்த பூசையாகும்.
5. வினைவடிவான உடலை, தான் என்கின்றதை நீக்குதலே மேலான ஆராதனை.
6. மாறாத இச்சை முதலாகிய அநேக சத்திகளை நீக்கி ஒளிவிசுகின்றவனே மேலான தெய்வம் என்று அறிந்தவர்கள் பூசிப்பார்கள்.
7. கண், மூக்கு, செவி, தோல் (மெய்), நாக்கு, மனம் ஆகிய ஆறு இந்திரியங்களால் அனுபவித்தும் அனுபவியாத ஞானமே பரமேசன் என்று ஆராதித்தல்.

எனப் புறப்பூசையினால் சர்வம் பிரம்மமயம் ஆகும் என்றும் அதனால் உண்மை ஞானமும் கிடைக்கும் என்றும் உணர்த்தயுள்ளார் (தேவ:20-40).

### 4.16.2.3. ஆராதனை:

பூசையை ஆராதனை என்றும் கூறுவர். பஞ்சபூதம், மனம் ஆகிய சத்திகளினால் இயல்பாக எந்த இடத்திலுமுள்ள விடயப் பொருட்களைப் பூசித்து எண்ணங்களுக்கெல்லாம் அதீதமான, எப்போதும் துன்பமில்லாமல் மகிழ்ந்து கேடில்லாமல் ஒன்றாகி அமுதமாகி நிறைந்த ஞானத்தினால் பூசை செய்வதே ஆராதனையாகும் (தேவ: 35) என்பர்.

### 4.16.2.3.1. பூசாதிரவியங்கள்:

திராவியங்கள் என்றால் பொருட்கள் என்றும் பூசாதிரவியங்கள் என்றால் பூசைக்குரியப் பொருட்கள் என்றும் கூறுவர். ஆனால் ஞானவாசிட்டத்தில் மனதை சுத்தமாக வைத்து வழிபடலே பூசாதிரவியங்கள் என்று தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

இழிவும் உயர்வுமாகிய பார்வைகள் எதிரிட்டால் சற்றும் பிடியாமல் தேகமும் காலமும் தொழில்களுமாகியவற்றுக்குரியதாய்ச் சேருகின்ற சுகதுக்கங்களை வேற்றுமை கெட ஆராதிக்கவேண்டும். இவையே பூசாதிராவியங்களாகும் (தேவ: 52).

### 4.16.2.3.2. பூசை செய்தால் மாயை கெடும் எனல்:

தேசமும் காலமும் செயலும் ஆகிய இவ்வொழுங்கினால் அடைந்த பொருள்களினது சுகதுக்கங்களின் மயக்கங்களை எறிதலினால் உடலிலுள்ள தேவதையை அர்ச்சனை செய்து ஆசைகள் அனைத்தையும் அறிவில்லாமல் இருக்கச் செய்தால் அந்த மாயையானது அசுத்தமாயைக் கெடுக்கும் என்பர் (தேவ: 53).

### 4.16.2.3.3. பூசையால் மோகத்தைக் கெடுக்கலாம் எனல்:

ஆசைகளைப் புறம்பில் நீக்க, ஆசிரியனை வணங்கி யுக்தியுடன் (கூரறிவுடன்) விசாரணை செய்து மகாமோகத்தைக் கெடுப்பதற்கு ஒன்றாகிய தேவபூசையைச் செய்தல் வேண்டும் (தேவ: 10). அவ்வாறு செய்தால் ஏகமாகிய ஆதமவடிவை அறியலாம் என ஞானவாசிட்டம் உணர்த்தியுள்ளது.

### 4.16.2.3. பூசையின் பலன்:

எவராலும் நிந்திக்கப்படகூடிய மூடர்கள் பூசையைச் செய்தாலும் பயன் உண்டு என்றும், எவ்வளவு நேரம் பூசை செய்தால் என்ன பலன் கிடைக்கும் என்றும் கீழ்வரும் பாடல் வரிகளால் அறியலாம்.

'இயலார் கடவு ளாந்தன்னை யிமைநூறளவு பூசிக்கில்
அயமேதத்திலாயிரமாம் பேறாமரை நாழிகை பூசை
முயல் வாரிலக்க மயமேதப் பயனைப் பெறுவர் முறைமையினாற்
பயனார்பூசை யொருகடிகை பண்ணிலிராச சூயபலம்
பாசமின்றி யுள்ளுணர்வைப் பதினைங்கடிகை பூசிக்கில்
இராசசூய விலக்க நிகரிவ் வாறொரு நாளருச்சிக்கில்
ஆசிலாத பரவொளியி லமரலாகு மிதுதானே
ஏசில் பரம யோகமிது தானேபரம கிரியையுமே'

(தேவ: 39,40)

இவ்வாறு ஞானபூசனையின் ஒழுங்கையும் பயன் அளவையும் குறிப்பிட்டுள்ளார்.

### 4.16.3. ஞானவாசிட்டத்தில் வழிபாடு:

ஆசிரியர் எந்த ஒரு தெய்வ வழிபாட்டிற்கும் முக்கியத்துவம் கொடுக்காமல் பல தெய்வ வழிபாட்டை ஞானவாசிட்டத்தில் குறித்துள்ளார். சிவ, திருமால், பிரம, சரஸ்வதி வழிபாடுகளை எவ்வாறு ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார் என்பதை இப்பகுதி தெளிவுறுத்துகிறது.

### 4.16.3.1. சிவ வழிபாடு:

சிவவழிபாடு நூலில் பல இடங்களில் காணப்படுகிறது. சிவபெருமான் உமாதேவியோடு சேர்ந்து வந்து வசிட்டனுக்குக் காட்சி கொடுத்ததாகத் தேவபூசை கதையில் (6.2) குறிப்பு உள்ளது (தேவ: 13). மேலும் சதாகாலமும் உடலில் வசிக்கின்ற பரமசிவத்தை மறவாமல் வருவோனும், இருப்போனும் நித்திரை செய்து எழுந்திருப்பவனும், செல்வங்களை அனுபவிப்பவனும் தன்னுபவனுமாகிய மனிதன் எப்போதும் சிவனைத் தியானித்து வழிபடவேண்டும் (விரத. 8) என வீரத சூசை கதையால் உணர்த்தியுள்ளா.

மேலும், 'வெகுவாய் அடைந்த பொருள்களிலே மேவித்தனது மெய்யுணர்வாந்
தகுநீர் முழுக்கான் மலமற்றுத் தப்பில் போத பூசனை யான்
மிகுநற் போத விலிங்கத்தை மேவுபூசை செயல் வேண்டும்' (தேவ: 42.1-3)

எனச்சிவனின் அருஉருவமான லிங்கத்தை வழிபடவேண்டும் என்பதை ஞானவாசிட்டம் தெளிவுறுத்தியுள்ளது.

### 4.16.3.2. திருமால் வழிபாடு:

எல்லாம் மாதவன் வடிவம் என்றும் அவனையே வழிபட்டால் முத்தியும் கேட்டதும் கிடைக்கும் என்றும் (பிரக: 6), திருமாலை அகத்திலும் புறத்திலும் வழிபட்ட நிலையையும் (பிரக: 8) பிரகலா தன் கதைவழி அறியமுடிகிறது. திருமால் காட்சி கொடுத்த நிலையை,

'நீண்ட மானில முகிலெனத் தோன்றி நிறைதவக் காதியை நோக்கி' (காதி: 25.2)

எனக்காதி கதையில் குறிப்பிட்டுள்ளார்.

### 4.16.3.3. சரஸ்வதி வழிபாடு:

தெய்வங்கள் நேரடியாக உபதேசம் செய்ததை லீலைகதையில் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

'வானார்மதி போனிற வாணி மகிழ்ந்து தோன்றி' (லீலை: 6.1) என லீலைக்குச் சரஸ்வதி காட்சி கொடுத்துள்ளதைக் காணமுடிகிறது.

### 4.16.3.4. பிரமன் வழிபாடு:

படைக்கும் கடவுள், பத்தியை வாழ்த்தி காட்சி கொடுக்கும் என்பதற்கு கற்கடிகதையில் சான்று காணப்படுகிறது.

'வருந்திநின்று வுயர்தவத்தில் வருடமோராயிருஞ்செலுத்த
திருந்து கமலத்தயன் வந்தான் றீயோரெனினும் மருந் தவத்தாற்' (கற்: 10.1,2)

எனக் கற்கடி என்ற அரக்கியின் வழிபாட்டையும் அதற்கு பரமன் காட்சி கொடுத்ததையும் ஆசிரியர் தெளிவாக விளக்கியுள்ளார்.

4.16.3.5. பலதெய்வ வழிபாடுகளையும், தெய்வங்களையும் குறிப்பிட்டிருப்பதால் இந்நூல் எந்தத் தெய்வத்துக்கு முக்கியத்துவம்கொடுத்துள்ளது என்பது வரையறை செய்ய முடியாத ஒன்று. எனவே இதை ஒரு பொதுநூல் என்பதே சிறப்பு. அத்வைத கொள்கையான பிரம்மமே தெய்வம், மற்றவை தெய்வமல்ல என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

## *4.16.3.6 சிலைவழிபாடு:*

பலதெய்வ வழிபாடுகளைக் குறிப்பிட்ட ஆசிரியர் உருவ வழிபாட்டு நிலையை மறுக்கின்ற இடங்களும் காணப்படுகின்றன.

'குறிவடிவிற் பூசனையல்ல' (தேவ: 23.3) எனக்குறித்த உருவங்களில் ஆராதிப்பது ஆராதனை அன்று என்றும்,

'செல்வழியோ சனைநடக்க மாட்டாதார்க்
குரோசவழிசெல்லு மாபோற்

பல்வடிவி லருச்சிப்ப ரறிவில்லா ரறிவு நிலை
படையாரென்று' (தேவ: 22.1,2)

என ஞான நிச்சயத்தைப் பெறாதவர்கள் தான் உருவவழிபாடு செய்வார்கள் என்றும் கூறி உருவவழிபாட்டை மறுத்துரைத்துள்ளதை காணமுடிகிறது. ஆனால் சரியான காரணம் கூறப்படவில்லை.

## 4.16.4. எது தெய்வம்:

உருவவழிபாட்டையும், தேகமுதற்பிரிவுகளை யுடையவர்களையும் வழிபடக்கூடாது என்று குறிப்பிட்ட ஆசிரியர் தெய்வம் எது என்பதைக்கீழ் வரும் பாடல் வரியால் தெளிவுறுத்தியுள்ளார்.

........'தெய்வந்தானி யாதென்றோதிற்

கேவலமே வரியல்ல வரனல்ல பூதவுடற் கிடைத்ததல்ல

வோவுமன மன்றடியு முடிவுமிலாச் செயப்படா வுணர்வே
தெய்வம்' (தேவ: 20. 2-4).

என்றும்,

'தேகமுதற் பிரிவுகளாய்ச் சிறியனவாம் பொருளிகளிலத் தெய்வமுண்டோ
பாகமறப் பணதியற வடிமுடிவற்றுள வுணர்வே பரமபோதம்' (தேவ: 21.1,2)

என்றும், உணர்வே தெய்வம் என்றும் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

இவ்வாறு ஞானமே தெய்வம் என்று ஞானவாசிட்டம் வலியுறுத்துகிறது. இதனால் அத்வைதக் கருத்தின் ஞானமே முத்தி வழி என்ற நிலை நூலில் முழுமையாக அமைந்துள்ளது எனலாம்.

## 4.16.5. யோகம்:

4.16.5.0. யோகம் பற்றி பல்வேறு சிந்தனைகள் உள்ளன. அவற்றைக் கூறி, அவற்றுள் ஞானவாசிட்டத்தில் காணப்படும் யோக முறைகளை விளக்கி வெளிப்படுத்துவதே இந்தப்பகுதியின் நோக்கமாகும்.

4.16.5.0.1. ஆன்ம விடுதலைக்கு இறைவனால் காட்டப் பட்ட இரண்டு பாதைகளுள்ளன. அவை அறிவாராய்ச்சியும் யோகமுமாகும். வேதாந்த நூற்களை நன்கு படித்து, அதன் உண்மைப் பொருளை அறிவதுதான் அறிவு வழியாகும். தூய்மையாக விளங்கும் குணங்குறியற்ற பிரம்மத்தையே இடைவிடாது நினைந்து நிற்றலே யோக வழியாகும். இந்த இரு வழிகளும் ஒரே முடிவைத்தான் அடைகின்றன.

4.16.5 0.2. துன்பத்திலிருந்து விடுதலைபெறுவதே யோகம் எனக் கீதைகூறும். இதைப் பாரதிதீர்த்தரும் ஒப்புக்கொள்வர். இத்தகைய யோகத்தைச் சோர்வற்ற நிலையில் உறுதியுள்ள மனத்துடன் தவறாது நிலையாகப் பழகும் போதுதான் யோகத்தின் முடிவை அடைகிறோம். உள அமைதிக்குப் பாடுபடும் யோகி, தன் விருப்பங்களைத் தவிர்க்கவேண்டும். தன்னுடைய புலன்களையும் உள்ளத்தையும் மட்டுப்படுத்த வேண்டும் மேலும் நிலையானதும் உறுதியானதும் ஆன நோக்கத்தை மேற்கொண்டு தன் உள்ளத்தால் ஆன்மாவை நோக்கித் தியானம் செய்யவேண்டும். கட்டுப்பட்ட மனத்தினாலும் வெளிப்

பொருட்களினின்றும் தவிர்க்கப்பட்ட புலன்களாலும், யோகியின் அறிவாற்றல் செம்மைப்படுகிறது; அவன் அமைதியடைகிறான். இந்நிலையில்தான் நுண்ணியதாயும், அறிவாற்றலுக்கே அறிய முடிவதாக விளங்கும் ஒப்பற்ற பேரானந்தத்தை அனுபவிக்கிறான். யோகக் காட்சியின்போது பிரம்மம் அவனுக்கு வெளிப்படுகிறது[68].

4.16.5.0.3. யோகம் என்பது எண்ணங்களின் ஆசையைக் கட்டுப்படுத்துவது. இதயத்தில் குடிகொண்டிருக்கும் சைதன்ய வடிவத்தை உணர்ந்து மனத்தை அடக்கித் தெய்வீக உணர்வில் திளைத்திருப்பது யோகம்[69]. தம்மைத்தாம் பிரம்மம் என உணரும் வரை தாம் முத்தி அடைய முடியாது. ஆனாலும் இம் மெய்யான நிலையை அடைய பலநெறிகள் உள்ளன. இந்தநெறிகட்கு யோகம் என்னும் பொதுப் பெயர் உண்டு. யோகம்=சேர்த்தல் (தம்மை தம்மிடம் உள்ள உண்மைப் பொருளோடு சேர்த்தல்). இதற்குத் துணையாக பழக்கத்தையும் வைராக்கியத்தையும் கொள்வர்[70]. இந்திரியங்களைத் தன்வழிப்படுத்திக் கொண்டு உள்ளத்தைப் பிரம்மத்தில் நிறுத்துதல் யோகம்[71]. மடையை உடைத்து வெளியே செல்லுகின்ற தண்ணீரை அடைத்து வயலுக்குள் செலுத்துவது போன்று தம்முடைய சித்த விருத்தியையும் உலகச்செய்திகளில் செல்லாமல் யோகத்தினால் தடைசெய்து இறைவனிடத்தில் திருப்புவது யோகம் எனப்படும்[72].

4.16.5.0.4. இன்று சாதாரணமாகச் செய்ய முடியாத சில செயல்களைச் சிலர் மந்திரங்களாலும் தந்திரங்களாலும் செய்து காட்டுகின்றனர். அவையன்று யோகம். மூச்சை அடக்குவது, மூக்கு நுனியை நோக்கிக் கொண்டு மௌனியாய் உட்கார்ந்திருப்பது ஆகியவையும் யோகமல்ல. சித்தசுத்தி ஏற்பட்டுத்தான், தனது என்ற நினைப்பு அறவே ஒழிதல் யோகமாகும். இச்சித்த சுத்தியின் பொருட்டுப் படிப்படியாக அனுட்டிக்கவேண்டிய யமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிக்ரதியாகாரம், தாரணம், தியானம், சமாதி ஆகிய எட்டு விதிகளை யோகமதத்தினர் வகுத்துள்ளனர்[73].

4.16.5.0.5. யோக வகை எட்டும் ஞானவாசிட்டத்தில் இடம் பெறுகின்றன. ஆனால் அவற்றுள், ஆசனம், பிராணாயாமம்,

தாரணம், தியானம், சமாதி போன்றவற்றைத்தான் அதிகமாக ஆசிரியர் விளக்கிக் கூறியுள்ளார். கரைக்கும் பவத்துன்பத்தைக் கெடுக்கப்பயன்படும் யோகயுத்தி இரண்டு விதம். அவை மெய்ஞ்ஞானமொன்று; பிராண பந்தனம் ஒன்று. இதில் பிராண பந்தனத்துக்கு யோகம் என்ற பெயர் மிகவும் பொருத்தம் என நூல் வெளிப்படுத்தியுள்ளது.

### 4.16.5.1. ஆசனம்:

இறைவனை அடைவதற்குப் பலவகையான யோக முறைகளைக் கையாண்டுள்ளனர் என்பது ஆசிரியரால் குறிப்பிடப் பட்டுள்ளது.

> ....... மூழ்கி யொரு காலுற நின்று
> புழையார் விழியானகுவானிற் பொலியுங்
> கதிரையெதிர் நோக்கி' (கற்: 9.3,4)

என நின்ற ஆசனத்தையும்,

> 'உதிதமனத்துப் பதின்மருமொத் துயரும்
> பத்மாதனத்திருந்து' (அயிந்: 8.4)
> 'ஒருகணந்திசைக ளனைத்தையு நோக்கியுரைத்த
> பத்மாதனத்திருந்தான்' (தாசு: 67.1)

எனப் பத்மாசனத்தை பற்றியும்,

> 'நண்ணியணி கழுத்தளவா யமிழநின்று
> நற்றவஞ்செய்' (காதி: 2.3)

எனத் தண்ணீரில் நின்று தவம் செய்த நிலையையும் காட்டியுள்ளார்.

### 4 16.6.2. பிராணாயாமம்:

அட்டாங்கயோகத்துள் ரேசகம், பூரகம், கும்பகம் என்ற மூவகையும் சுவாசத்தை அடைக்கியாளும் யோக முறையாகும்[74]. பிராணபந்தனமானது மனத்தை அடங்கச் செய்யும். அது சமத்துவத்துக்கும், இன்பத்தை விளைவிக்கும் ஆசை (சம்பந்தமான அறிவை எழாமல் செய்ததற்கும் காரணமாகும் அதைப்பற்றிய) ஞானவாசிட்டத்தில் குறிப்புகள் காணப்படுகின்றன.

### 4 16.6.2.1. பிராணன் அடங்கும் வழி:

பிராணபந்தனத்தின் பழக்கமும், ஆசிரியரால் அறிவுறுத்தப் பட்ட யுத்திகளும், ஆசனமும், புசிப்பும் யோகமும் பிராணன்

அடங்க வழிகளாகும். பற்றுள்ள விவகாரம் இல்லாமை, குடும்ப பாவனை இல்லாமை, ஒரு உருவமும் இன்றி அருவமாய்ப் பார்ப்பது இவற்றால் வாசனை நீங்கும். வாசனை மாறினால் பிராணபந்தனம் அமையும் (உபசா: 54).

### 4.16.6.2.2. பிராண பந்தன உபாயம் யாது எனல்:

உடல் என்கின்ற வீட்டின் இதயாம்பரத்தில் எப்போதும் ஓய்வு இல்லாமல் சுழலுகின்ற பிராணனின் அசைவை மாற்றும் முறைகளைப் பத்துவிதமாக ஆசிரியர் விவரித்துள்ளார் (வீத: 31-35).

1. நிட்டையால் எப்போதும் ஒன்றாக விளங்கும்படி சாதித்த ஞானத்தினது திடப்பழக்கத்தாலும்,

2. பூரக முதலான பிராணாயாமத்தால் உண்டான ஞான பாவனையினாலும்,

3. பிரணவ உச்சரிப்பின் அந்தத்தில் நாதவுண்மையை அநுசந்தானஞ் செய்வதினால் விருத்தஞானம் நீங்குவதாலும்,

4. நாக்கினடியில் நெருங்கிய இதழை நாவின் நுனியினால் நீக்கி முயற்சியினால் ஊர்த்து வரந்தரத்தில் உயிரைச் செலுத்தினாலும்,

5. நாசியினின்று துவாத சாந்தத்தில் உயிர் நின்றாலும்,

6. அதில் அந்தத்தில் நிற்கும் சாம்பவி முத்திரையாலும்,

7. விசுத்த சக்கரத்தினிற்பதாலும்,

8. அநாகத சக்கரத்தில் நிற்பதாலும்,

9. புருவமத்தியிற் கண்மணிப் பார்வையானது சாந்தத்தாற் கெட்டுச் சவ்விகற்பஞானம் அந்த இடத்தில் இறக்குமானாலும்,

10. பலவித சங்கற்பத்தாலும் வேற்றுமையினாலும் ஆசிரியர் வசனங்களினாலும்,

பிராணன் தடைபடும்.

### 4.16.6.2.3. பிராண அபானவாயு:

ஐம்பூத சரீரமான வீட்டின் மத்தியில் பொருந்துகின்ற இதயத்தில் பிராண அபானவாயு என்ற இரண்டும் சேர்ந்திருக்கும் (புசுண்: 83-90) என்பர்.

### 4.16.6.2.3.1. பிராணவாயு:

பிராணவாயு என்பது தாமரைத்தண்டினது ஒரு நூலை ஆயிரம் பங்கு செய்து அதனில் ஒரு பங்கு சமானம் என்றாலும் சமானமாகாமல் மிகவும் சூட்சுமமாய் உண்டாயிருந்தும், எதிர்த்து அந்த வாயுவின் நடையினுடைய குணத்தை அறிய, அரியதாகும் நிலையே என்பர். இந்தப்பிராணன் ஆனது தொடர்ந்து அசைகின்ற சத்தியைப் பொருந்தி நீங்காமல் உலாவுகின்ற உடலினுள் திரமின்றிப்புறம்பிலும் அகத்திலும் எக்காலத்திலும் திரும்பாமல் மேலே செல்லுதல் இதன் தொழிலாகும்.

### 4.16.6.2.3.2. அபானவாயு:

அபானவாயு அசைவாகிய சத்தியைச் சார்ந்து உட்புறம்பில் நீங்காமல் உலாவும், உடலின் கீழே செல்லும், நனவிலும், கனவிலும் மேலான பிராணன் ஆனது முழுதுந்திரும்புவது தன்மையாகும்.

### 4.16.6.2.4. இதன் குணங்கள்:

1. பிராணன் அடையப்பட்ட புறத்தில் பன்னிரண்டு அங்குல அளவில் செல்கின்ற பிராணவாயு திரும்ப உடலில் செல்லுதல் பூரகம்.

2. அபானனை அகத்தில் புகுதலைப் பூரித்தல் உட்பூரகம்.

3. அபான பிராணனை அகத்தில் நிறுத்துதல் கும்பகம்.

4. பிராணன் புறம்பினின்று உள்நோக்கி அடைதல் உள் இரேசகம்.

5. நாசியின் நுனியில் நிற்றல் வெளிப்பூரகம்.

6. நாசிகாந்தத்தினின்றும் நீங்கி பன்னிரண்டு அங்குலப் பிரமாண நடையை வேறாக அடைதல் புறப்பூரகம்.

7. பிராணன் புறத்திலும் அபானன் உள்ளிலும் பூரண அவத்தையாய் விளங்குவது புறக்கும் பகம்.

8. அபானன் புறம்பினின்று உள்நோக்கிப் போதல் புற இரேசகம்.

இவ்வாறு தடையில்லாமல் புறம்பிலும் உள்ளிலும் சேர்கின்ற கும்பகம் முதலாக வருகின்ற நடைகளைத் தவறாமல் அறிந்தவர்கள் திரும்பவும் பிறக்கமாட்டார்கள். அவர்களே மோட்சத்தை அடைவார்கள் என்பர்.

**4.16.6.2.5. யோகிகள் கற்பகாலம் வாழ்ந்திருப்பதற்குப் பிராண பந்தனமே காரணம் எனல்:**

'பிராணனசையில் அசைந்திடுவர் பிராணனடங்கிற் கற்போல்வர்
பிராணனறன்னைத் தரித்தலினாற் பொருநாணசியார் யோகிகடாம்
பிராணன்றன்னி நெஞ்சத்திற் பிறக்குமசைவுட் பிறனடங்கிற்
பிராணனாச மூப்பிரண்டும் பெருந்தூரத்தில் ஏகிடுமால்'
(உபசா:6)

என்னும் பாடலில் மேற் கருத்தைப் புலப்படுத்தப்பட்டுள்ளது.

**4.16.6.3. தாரணை:**

மனத்தை ஒருநிலைப்படுத்துவது தாரணம் எனப்படும். தாரணையை நாமதாரணை, வச்சிரதாரணை, மாயாதாரணை, சித்திரதாரணை, '- செய்யுட்டாரணை, நிறைவுகுறைவாகிய வெண்பொருட்டாரணை, சத்தாரணை, வத்துத்தாரணை, சதுரங்கதாரணை எனப்பலவகையாகக் கூறுவர். அவற்றுள் சிலவற்றை நூலாசிரியர் குறிப்பிட்டுள்ளார் (புசுண்: 56-58). மற்றவற்றை விளக்காமைக்கு காரணம் புலப்படவில்லை.

1. **சலதாரணை:-** சூரியசுட்டின் கிரணத்தால் எரிக்கும் போது அது கிர்கிக்குஞ் சாலகாரமாய் கிரணமுழுதும் ஆகாயத்தில் நிறைந்து நிற்றல்.

2. **குன்றதாரணை:-** ஊழிக்காற்றடிக்கும் போது அதற்குத் தாரமான நிச்சலமாகிய அசலாகார வியோமமாய் நிற்றல்.

3. **மாருததாரணை:-** பிரளய வெள்ளத்துக்கு மேலான வாதாகாரமாய், துருத்தியைப் போல மிதந்து நிற்றல்

4. **சுழுத்திதாரணை:-** சுழுத்தியாகாரமாய்ப் பிரம்மத்திலடங்கி நின்று வெளிப்படுதல்.

**4.16.6.4. தியானம்:**

4.16.6.4.0. ஒருபாத்திரத்திலிருந்து மற்றொன்று பாத்திரத்தில் ஊற்றும் எண்ணெயைப் போலத்தியானிக்கும் பொருளை இடையறாது தொடர்ந்து நினைவு படுத்திக் கொள்வதே தியானம்[75]. சித்த விருத்தியைத் தைலதாரைப் போன்று

ஞானவாசிட்டத்தில், பரமாத்மாவின்கண் விழும்படிச் செய்தல் தியானம் என்பர்.

4.16 6.4.1. ஞானவாசிட்டத்தில், 'சிந்தனை வாதனை யின்றித் திரமானமனத்தினையே தியானம்' (சுரகு:9.1). என்றும்,

'ஒழியாதுள்ளே பரிசுத்த உணர்வாமறிவே ததுதானே
இழியாதான தியானம்' (தேவ:37.1,2) என்றும் கூறுவர்.

தியானமே சுபாவமாகிய ஆராதனையாகும். தியானம் இருக்கும் போது ஞானம் உண்டாகும் என்பது உறுதி என்றும் இந்நூலால் அறியமுடிகிறது.

4 16.6 4.2. தியானங்களில் நான்கு வகையுண்டு. ஏகாந்த மான இடத்திலே அமர்ந்திருந்து, புலன் இன்பங்களைத் துறப்பது பற்றிச் செய்யும் தியானம் முதலாவது; இன்பமும் எழுச்சியும் நிறைந்த உபசாந்தியைப் பெறுதல் இரண்டாவது தியானம்; உடலுக்கு அப்பாற்பட்ட இன்பத்தில் திளைக்கும் முறையில் செய்யும் தியானம் மூன்றாவது; பரிசுத்தமான பூரண சாந்தி நிறைந்த நிலையில் மனம் இன்ப-துன்பங்களுக்கு மேலாக எழுந்து நிற்கும் படிச்செய்யும் தியானம் நான்காவது[76]. இந்த நால் வகைத்தியானம் பற்றி ஞானவாசிட்ட கதைகளில் நிறைந் திருப்பதைக் காணமுடிகிறது.

### 4.16 6.5. தவம்:

கருவி கரணங்களை அடக்கிச் செம்மையாயிருத்தலையும், பற்று நீங்கிய வழிபாட்டையும் தவம் என்பர். இஃது எண்வகை யோகத்தின் நியமத்தில் அடங்கும். ஞானவாசிட்டத்தில் தவத் தின் நிலையைப்பற்றியும் அதனால் ஏற்படும்பலனைப் பற்றியும் பல இடங்களில் ஆசிரியர் கூறியுள்ளார்.

1. கற்கடி என்ற அரக்கித்தன் வடிவத்தை ஊசிவடிவமாக மாற்ற பிரமனை நோக்கித்தவம் செய்து பயனையும் பெற்றாள் (3.8).

2. இந்து என்ற பிராமணன் தனக்குக் குழந்தை வேண்டும் என்று சிவனை நோக்கித்தவம் இருந்து வரமும் பெற்றான் (3.4).

3. இந்துவின் மக்கள் பத்துபேரும் சிவனை நோக்கித்தவம் செய்து பிரம்மாவின் தொழிலைச் செய்தார்கள் (3.4).

4. காதி, திருமாலை நோக்கித்தவம் செய்து மாயையின் செயலை அறிந்தான் (5 5).

5. வசிட்டர் சிவனை நோக்கித்தவம் இருந்து அதனால் சிவனிடம் அறிவுரை பெற்றார் (6.2).

இவ்வாறு பல கதைகளில் பலமுறையில் தவம் இருந்ததையும், வீட்டிலிருந்தாலும் காட்டிலிருந்தாலும் தவம் செய்யலாம் என்றும் அதனால் கிடைத்தப்பலனையும் ஞானவாசிட்டம் தெரிவுறுத்தியுள்ளது. இந்த நூல் தவத்தின் பெருமையை எடுத்துக்காட்டுவதற்காகத் தோன்றியது என்று கூறுவதில் தவறு இல்லை.

**4.16.6.6. சமாதி:**

4 16.6 6.0. எட்டுவகை யோகங்களில் ஒன்று சமாதி. மனத்தைப் பரம்பொருளோடு ஐக்கியப்படுத்தி நிறுத்துதலைச்சமாதி என்பர்[77]. மனத்தை இறைவனிடத்தில் வைத்துத் தன்னையும் உலகத்தையும் மறந்துதியேய வடிவத்தில் இருத்தல். அதாவது காற்றில்லாத இடத்தில் வைக்கப்பட்ட தீபத்தைப் போன்று அசைவற்றிருத்தல் என்பர்[78]. சமாதி நிலையைச் சொல்லால் ஒரு பொழுதும் விளக்கமுடியாது என்று ஸ்ரீ ராமகிருஷ்ணன் குறிப்பிடுகிறார்[79]. தியானிக்கிறவனையும் தியானத்தையும் கிரமமாகப் பரித்தியாகஞ் செய்து தியானிக்கப்படுகின்ற ஒரு பிரம்மம் மாத்திரம் கோசரமுடையதாய் நிவாதாய் தலதீபம் போலிருக்கும் சித்தமே சமாதி எனப்படும்[80].

4.16.6.6.0.1. ஞானவாசிட்டத்தில் சாத்துவித, தமோ, ராஜ குணமாகிய மூன்றினால் உண்டான உலகம் அநாத்மா என்றும் அதை உணர்ந்த சத்துக்களுக்கு உள்ளத்தின் கண் தோன்றிய குளிர்ச்சியே சமாதி என்றும் விளக்கியுள்ளார். மனசஞ்சலம் நீங்குதலே சமாதி ஆகும்.

4.16 6.6.1. 'தொலை விறொழிற் செய்யுமனத் தொழினீங் கிலதுதானே சுகசாமதி'(சுரகு: 8.1)எனச் சமாதியை குறிப்பிட்ட ஆசிரியர் அதை இருவகையாக அடையலாம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

'ஊற்றமறக் காண்பவற்றோ டுறவுநமக் கிலதென்
றேயுரத்துத் தண்ணென்று
ஏற்றசமா தியிலிருப்ப னொருவனொரு வன்றொழிலோ
டிருப்பனன்றே' (சுரகு: 4.3.4)

### 4.16.6.6.2. சமாதிக்குத்துணை செய்வன:

தியான பாவமும், தியானமும் சமாதிநிலைக்கு உறுதுணை செய்வன (சுரகு: 8) என்றும் சமாதி கூடுதற்குச் சங்கத்தியாகமும் (பகீர: 15) தேவை என்று தெளிவுபடுத்தியுள்ளார்.

### 4.16.6.6.3. சமாதிக்குக் கேடுவிளைவிப்பன:

மனத்தினது சலனமும், நிலையும், எண்ணமுமே சமாதிக்குக் கேடுவிளைவிப்பன என்பர் (சுரகு: 8).

### 4.16.6.6.4. சமாதியினால் ஞானம் தோன்றும் எனல்:

மனமானது இதயாம்பரத்தில் விரியும், ஞானத்தினால் தேய நிட்டையை அடையும். பின்பு பெரிதான சகலவடிவங்களுமான சீவனானது இகழ்ச்சியாகிய பிறவியை உலகத்தில் திரும்பவும் அடையாது (பகீர: 14) எனச்சமாதியினால் ஞானம் உதயமாகிப் பிறப்பு இறப்பு நீங்கும் என்பதை விளக்கியுள்ளார்.

### 4.16.6.6.5. சமாதி அடைந்தவன் இயல்பு:

ஆத்ம ஞானத்தில் சுகத்தை அடைகின்றவனாயும், இந்திரியங்களால் கிரியைகளைச் செலுத்துபவனாயும் நீங்குகின்ற சுகதுக்கவசத்தில் அடையாதவனாயும் இருக்கின்றவன் எல்லா நேரமும் சமாதியைப் பொருந்தினவனாவான் (சுரகு:14) என்பர்.

### 4.16.6.6.6. சமாதி அடைந்தவரின் பயன்:

1. திரிநிலை அனைத்திலும் நீங்கின (அதீதத்தில்) மனநிலையாய் இருந்த (மாயை) குடும்பத்தினது முடிவைக்காணலாம்.

2 வரப்பட்ட இலாபங்கள் அனைத்தையும் திடமாக அடையலாம்.

3. கேட்பதற்கும், விரும்புவதற்கும், பார்ப்பதற்கும் ஒன்றுமில்லை.

4. எப்பொழுதும் பூரணமாக இருக்கலாம்.

5. துன்பங்கள், பாவங்கள், அச்சம், மயக்கம், ஆசை இவை அண்டாது.

6. சமமாய் எல்லாம் பார்க்கலாம்.

7. ஒரு தொழிலும் இல்லாதவன் போல இருக்கலாம்.

8. ஆகாயத்தின் தனிமையை ஒத்த தெளிவையுடையவ ராய் உபசாந்தத்தை அடையலாம்.

9. மோகமயக்கத்தின் தொழிலை எல்லாம் தாண்டின நிலையை அடையலாம். (1-9: சிகித்: 179, 180).

**4.16 6.7. நிருவிகற்ப சமாதி:**

நிருவிகற்ப சமாதியிலுள்ள ஆனந்தமானது புண்ணியம் நிறைந்த சுவர்க்கத்திலுமில்லை என்றும், தனிமையாகிய ஆநந்தத்தை அடைந்தவன் தெய்வ உலகத்திலும், பூமியிலும் திரிவான் (சிகித்:177) என்றும் சமாதியின் அடுத்த நிலையான நிருவிகற்ப சமாதியைக் குறிப்பிட்டுள்ளார்.

**4.16.7. சாந்தி:**

4.16 7 0. பொருட்களின் மேல் ஆசை இல்லாதிருக்கும் போது மனதில் ஏற்படும் நிலைக்கே சாந்தி என்பர். நிர்வாண சுகம் அடையவேண்டுமானால் சாந்தி மனதில் ஏற்படவேண்டும் என்பர். இந்தக்கருத்தை கீழ்வரும் பாடல் வரிவிளங்குகிறது.

'அயனாடுற்றாய் பாதலத்திலணுகினாயா கிலுஞ்சாந்தி
வியனாரமுதை யொழிந்தந்த மிக்க நிருவாணம் பயிலாய்'
(உத.23.1,2)

**4.16.7.1. சாந்தி அடைய நிராசை வேண்டுமெனல்:**

அழிகின்ற ஆபத்து என்னும் கருவேலங்காட்டை வெட்டு கின்ற கோடரியாகவும், பிரம்ம சுகத்தை பொருந்தி இருக்கின்ற விசமாகவும், சாந்தி என்கின்ற மரத்துக்குப் பூங்கொத்தாகவும் இருக்கின்ற நிராசை ஏற்பட்டால் தளர்வு நீங்கும் (வித:22) எனச் சாந்தியடைய ஆசையை மாற்றவேண்டும் என்று உணர்த்தி யுள்ளார்.

**4.16.7.2. மனத்தைக் கெடுப்பதற்கு சாந்திவேண்டும்:**

மனத்தின் நினைப்பு மிகுந்திருந்தால் பிறப்பு இறப்பு நீங்காது தன்னைத் தெரிந்து பூரணமாய் நின்மல மனதாய் உபசாந்தத்தை அடைந்தவர்கள் எதையும் விரும்பமாட்டார்கள் (வித:21) எனக் கூறி மனத்தை நீக்கும் கருவிகளுள் சாந்தி ஒன்று எனக் குறிப்பிடு வதைக் காணமுடிகிறது.

### 4.16.7.3. சாந்தியை விரும்புபவர்கள்:

சாந்தியை விரும்புகிறவர்கள் சம்சாரத்தைத் தீர்க்கின்ற மகிழ்ச்சி, சாதுசங்கம், விசாரம் (கவலை), சமம் (இந்திரிய நிவிர்த்தி) ஆகிய நான்கையும் உடையவர்களுடன் அன்புள்ளவர் களாகவும், பிறவிக்கடலைக் கடப்பவர்களுமாக இருப்பர். அவர் களுக்கு வேதத்தின் ஆத்ம ஞானமானது தானேவரும். காமம் முதலியமயக்கம் தீரும், சித்தம்தெளியும், துன்பம்தாக்காது (முமுட்:21) என தெளிவாக்கியுள்ளார்.

### 4.16.7.4. சாந்தி அடைந்தவர்கள் நிலை:

சாந்தியை அடைந்தவர்கள் ஆத்ம விசாரம் செய்தால் பிறப்புக் கெடும். ஆத்ம விசாரணை பூரணமானால் சமானமில்லாத அறிவானது அதிக நுட்பமாகப் பரமபதத்தை அறியும். சாந்தி கொடிய பிறவிக்கு மருந்தாகும் (முமுட்:17), சாந்தியை அடைந் தவர்கள் எதிலும் துக்கம் அடையாமல், அறிஞர் முதலான எல்லோருக்கும் மேல் ஆவார் (முமுட்:16). பொருட்களில் ஆசை இல்லாதிருந்து மனத்தில் தோன்றிய சாந்தியே மோட்சத்தைக் கொடுக்கும் (வீத:24) எனலாம்.

4.16.8. இவ்வாறு ஆசிரியர் பலவழிபாட்டு முறைகளைக் குறிப்பிடுவதை நோக்கும் போது இராமனிடம் இந்தந்த வழி முறைகளைக் கையாண்டால் இறைவனை அடையலாம் என வலியுறுத்துவது போல அமைந்துள்ளது என்பது தெளிவாகிறது.

### 4.17. வீடு:

ஆன்ம விடுதலையை வீடு, முத்தி, மோட்சம், நிருவாணம் எனக் கூறுவர். பிரம்ம உள்ளுணர்வே விடுதலையாகும். பந்த பாசங்கள் அறுந்தொழிவது விடுதலை. இன்பதுன்பங்களால் ஆக்கப்பட்ட இந்தமாயை உலகத்தை, உயிரால் இயக்கப்படும் தன் முனைப்பு படைக்கும் போதுதான் பந்தபாசங்கள் கட்டுப் படுகின்றன. அந்தக்கட்டுப் பாட்டினின்றும் விடுதலை பெற வேண்டும். அதற்குத்தான் நித்திய அநித்திய பொருள் எது என்று வேறுபடுத்தும் அறிவு வேண்டும். மேலும், உயிரும் பிரம்மமும் ஒன்றே என்ற உள்ளுணர்வு வேண்டும். இந்த அறிவாலும் பிரம்ம உள்ளுணர்வாலும், பந்தபாசங்களின் கட்டுப்பாட்டினின்றும்

விலகிவிடுதலை அடைகிறோம். பிரம்மத்தைப்பற்றிய அறிவுதான் பேரானந்தமாகும். ஞானவாசிட்டத்தில் ஆசிரியர் விடுதலை அடைந்தநிலையை வீடு, மோட்சம், முத்தி, நிருவாணம் என்ற சொற்களில் குறிப்பிட்டுள்ளார்.

### 4.17.1. மோட்சம்:

மோட்சம் என்று சொல்லப்பட்டது தேவ உலகத்திலும், பாதாளத்திலும், பூமியிலும் பார்க்கும் எவ்விடத்திலும் இல்லை. ஆசைகள் அனைத்தும் இறந்த காலத்தில் மனம் நசிப்பதே மோட்சம் என்று சொல்லப்படும் (வீத:20).

### 4.17.2. மோட்சம் அடையும் வழி:

நாட்டின் இயல்பு வழுவாமல் உறவினர்களுக்கு உரித்தான நற்பொருட்கள் சம்பாதித்து, அதனால் உயர்ந்தோரை அடைந்து அவர்களால் நிராசையினை அடைந்து, ஆத்ம விசாரணைச் செய்து, உண்மை ஞானத்தை அறிந்தால் மோட்சம் உண்டாகும் (மாவலி:39) என்பது வைராக்கியத்தினாலும், திரிஸ்யம் நீங்கும் படியான சாதனத்தினாலும், ஞானசாத்திரார்த்தத்தினாலும், அறிவினாலும், ஆசிரியர் அறிவுரையினாலும், இயம நியமங்களாலுமாகிய இந்தமார்க்கங்களினால் வீட்டைபெறலாம் (சுரகு:2). களங்கமற்ற அத்வைதப் பொருளின் பழக்கத்தின் அழுத்தமும், பிராண அடக்கமும், மனஅடக்கமும் ஆகியவையே மோட்ச வழிகளாகும் (வேதா: 10).

பற்று, பொருள் இரண்டும்மாற சாந்தி தோன்றும். அந்நிலையே வீடு (பிரக:65). வாசனை நீங்கிச்சுருதி குரு சுவானுபவத்தினால் ஆத்ம ஞானத்தை அறிந்து சத்தில் ஐக்கியமானால் முத்தி அடையலாம். என்பதை இந்தப்பாடல் விளக்குகிறது.

> கொத்தாகியவா தனைமுற்றுங் குறிக்கொண்டறிந்து கைவிட்டு
> சத்தாசாமா னியவடிவமானாற்றினிவீ டதுவென்பர்
> ஒத்தாரியரோ டுசாவியுறா லுணர்ந்துமுணர்வொன் றையும்பரவித்
> தத்தாற் சத்தா சாமானியந் தானாகுமாகு மதுவீடே (புசுண்:18).

### 4.17.3. மோட்சவழிக்குத் தடையாய் இருப்பவை:

'கேட்டமருந்து மந்திரங்கள் கிரியைகால மூகமெலா
நாட்டுஞ்சித்தி களைநல்கு நல்லமுத்தி தரமாட்டா'

(உபசா: 4 42) என்றும், பந்தமும் (கசன்: 9 4), தான் என்ற அகங்காரமும் (இட்சு: 57), மோட்ச வழிக்குத் தடையாக இருக்கும் என்றும் கூறியுள்ளார்.

### 4.17.4. வீடுபேற்றுக்கு ஆசை கொண்டவர்கள் கொள்ள வேண்டியவை:

சாந்தி, விசாரணை, மகிழ்ச்சி, சாதுசங்கம் என்ற நான்கு குணங்களையும் கைக்கொள்ள வேண்டும். இவற்றில் ஒன்றைப் பற்றிக்கொண்டாலும் மற்றவற்றை எளிதில் அடைந்து கொள்ளலாம் என்பர் (முமுட்: 12).

### 4.17.5. முத்தி அடைந்தவன் நிலை:

அழிவற்றச் சமமாகிய ஆத்மாவாக இருந்து ஆநந்தத்தை அடையலாம். ஏதாகிலும் ஒன்றைத்தரிசிப்பவனாகியும், புசிப் பவனாகியும், எந்த இடத்திலாகிலும் உறங்குதல் செய்கின்ற வனாகியும் இருக்கின்றவனே அரசனைப்போல ஒளிவிடுவான் (இட்சு: 57,58) அவனே முத்திநிலைஅடைந்தவனாவான்.

### 4.17.6. சித்திமுத்தி:

உலகமாக விரிந்தவர்களாலும், வருத்தத்தின் பயனாக வருகின்ற அணிமா முதலிய அட்டசித்திகள் செய்யப்படும். ஆகையால் ஆத்மஞானிகளுக்கு இச்சித்தி இல்லை. இப்படிப் பட்டவர்களுக்கு இழிவுள்ள மூடமதிகளைப் போலச் சிறப்பு உண்டாயிருக்கின்றது. எந்த இடத்திலும் அவர்களது மனம் இச்சையற்றதினால் நின்மலமாகும் (மானு: 3) என சித்த முத்தியைப்பற்றி விளக்கியுள்ளார்.

### 4.17.7. ஆநந்தாதீதம் உண்டாகும் முறை:

ஆசைகளை விட்டு நீங்கினால் மனமானது கெடும். அந்த நிலையானது தொழில்களனைத்தும் இல்லாத நிறைந்த தனவன் சுழுத்தியாகும். இதை எப்பொழுதும் மாறாமல் பழக்கம் செய்யச்

செய்ய சத்துக்களுக்குத்துரியமாகும். இந்ததுரியா நிலையை அடைந்த குறிப்பில்லாத ஆனந்தத்தை அடையத்தனித்த சுபாவக் கோட்பாட்டினால் ஆநந்தாதீதம் அமையும் (வீத: 15) என்பர்.

### 4.17.8. நிருவாணம்:

உடலைத்தான் என்று சொல்லாத நிலையே நிருவாணம் என்று பேதங்கள் குறிப்பிடுகின்றன (வீம: 15). தோற்றம் இல்லாத அறிவே அறிவு, மேலடைகின்ற ஆத்மலாபமுமாய்ச் சிந்தித்து அந்தப்பிரம்ம நிச்சயத்தை அப்பியாசம் செய்வதே நிர்வாண சுகம் (லீலை: 40). இவ்வாறு நிர்வாணத்தைப்பல நிலைகளில் ஆசிரியர் குறிப்பிடுவதை நூலில் காணமுடிகிறது.

4.17.9. ஆன்ம விடுதலையைப் பற்றிநூல் முழுமையும் காணப்படுவதால் இந்நூல் ஒரு ஆன்ம விடுதலைக்குரிய வழிகளை வகுக்கும் நூல் என்பதும் தெளிவாகிறது.

### 4.18. அத்வைத நிலை:

4.18.0. இறைவனும் ஆன்மாவும் வெவ்வேறான இரு பொருளாகத் தோன்றிய போதும் உண்மையில் அவை இரண்டும் இரண்டன்று; ஒன்றே என்பது அத்வைதநிலை[81]. இறைவனைத் தனக்குள்ளே காண்பது அத்வைதம்[82]. ஞானவாசிட்டத்தில் அடையவேண்டிய நிலை ஒன்றே உள்ளது. அந்த நிலையே அத்வைத நிலை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த ஒரு பொருள் பிரம்மமே. கடைசி ஒடுக்கத்தில் உள்ளது ஒன்றே ஒன்றுதான் இரண்டன்று என்னும் அத்வைதக் கொள்கையை ஒட்டி இந்தநூல் கருத்துகள் அமைந்துள்ளன.

4.18.0 1. தம்மை அல்லாமல் மற்றபொருட்கள் இல்லை என்கின்ற மனத்தின் நிச்சயத்தை நீக்கி அறிவால் விசாரித்துத் தாமும பொருட்களும் வேறுவேறு என்று எண்ணாது எல்லாம் ஒன்று என எண்ண வேண்டும் (புண்: 15). இரண்டென்றும் ஒன்றென்றும் சொல்லுகின்ற வேற்றுமையினாலும், மூப்பு, மரணங்கள் ஆகும், என்று நினைக்கின்ற மயக்கத்தினாலும் உள்ளத்தினாலும் பிரம்ம வடிவமே அலையினால் சிதறுகின்ற திரை, நுரை, குமிழி போன்று தெரிகின்ற நீரைப்போல் தென்

படுகிறது (வீத: 42) ஆனால் எல்லாம் ஒன்றே எனக்காட்டியுள்ளார்.

**4.18.1. அடையும் வழி:-**

1. ஞானப்பழக்கத்தினால் அல்லாமல் துவிதம் அத்வைதமாகாது. 'சாதகத்தாலன்றி இரண்டொன்றாகாது' (லீலை:49.1).

2. ஐம்பொறியை ஆத்மவிசாரணையால் பிரம்மம் எய்தி ஒருமைப்பேறு நிலையை அடையலாம் (உத்: 12).

3. சத்தாசாமானியத் திறனுடைய முடிவில் சங்கற்பிக்கும் நினைவுகள் அனைத்தும் நீங்கி ஒழிகின்றது எதுவோ அவ்விடத் ததுவே சுகபோகத்தினிடமாகும். அத்வைதமும் அதுவே ஆகும்

4. 'சத்தாசாமானியக்கோடி பதத்தேசார்வுற் றொருக்காலே
கொத்தாகியவா தனைப்புருட வருத்தத்தாற்கோளறவிட்டு
சொத்தாகியதத் துவமுணர்ந்து தொலையா வடிவா நிலையமிழ்ந்த
கூற்றாய்கணப்போ தென்னினுமக் கணத்தேயுறுமப் பதமடைவாய்' (உபசா: 45)

என அத்வைத நிலை அடைவதைப் பற்றி விளக்கியுள்ளார்.

5. விருத்தி ஞானத்திலுள்ள அசுத்த வாசனையும், சமாதி ஞானத்திலுள்ள சுத்தவாசனையும் இறந்தால் அத்வைதம் ஏற்படும் (கசன்: 12).

6. உலகம் எவ்விடத்தில் எப்படி எப்படித்தோன்றுகின்றதோ அப்படி அப்படித்தானே விளங்குகின்றபடியால் உலகம் காரியமாகாது, அதனால் பிரம்மம் காரணமாகாது. தானே எல்லாமுமாய் விளங்குதலினால் அத்வைதமே எல்லாம் என்பது விளங்கும் (ஞான: 4).

7. நிறைந்திருக்கின்ற உண்மையைப் பொருந்தினால் வினையான அகங்ககாரம் கெடும். ஆசைகெட அனைத்தையும் அறிவினால் தீரும்படிக் கெடுத்துத் துன்பமான சலனம் இல்லாமல் இருப்பாயானால் தான் என்கின்ற தோற்றமானது தெரியாமல் பிரம்மமே அத்வைத வடிவமாகும் (பகீர. 19) என தெளிவு படுத்தியுள்ளார்.

8. தனது, பிறரது என்று சொல்லப்பட்ட எண்ணம் அறும்படி அத்வைத நிலையை அடையலாம் எனக் கீழ்வரும் பாடல் வரியால் விளக்கியுள்ளார்.

'எனது பிறரது என்னும் எண்ணமறச் சகநிலையில்
இரண்டற்று ஒன்றாய்க்
கனவயிரத் தமப்மெனும் உணர்வுருவைப் பற்றி நிலை
கண்டுநிற்பாய்' (உத்:7.1,2).

9. சங்கற்பமானது இறக்குமானல் ஞானப் பார்வைகள் எதிலும் பற்றாது. பிரம்மத்தைச் சார்ந்து விகற்பங்கள் யாவை யும் நீக்கிச் சுழத்தி மனத்தை அடைந்து ஏகத்துவத்தில் பரம சுகத்தை அடையலாம். அதுவே அத்வைத நிலையாகும். (தாரு:107)[10].

10. மனத்தில் இரண்டென்றும் ஒன்றென்றும் நினைத்தலே அஞ்ஞானமாகும். இந்த இரண்டும் நீங்குதலே ஞானமாகும். பரகதியும் அத்வைத நிலையும் அதுவேயாகும் (சிகித்:157).

11. மனமிறந்தால் அத்வைத நிலையாகும் என்பதனைக் கீழ்வரும் பாடலால் தெளிவுப்படுத்தியுள்ளார்.

'கண்டநனவு கோரமதாங் கனவு சாந்தம் எனப்
பெயராங்
கொண்டசுழுத்தி மூடமதாங் கூறும்இம்மூன்ற வத்தை
களும்
விண்டமனத்தின் வடிவமாகும் விளம்பும்இம்மூன்றையும்
விட்டாற்
தண்டுமனம்போம் மனமிறந்தால் சத்தாய் ஒன்றாஞ்
சமநிலையாம்' (மானு:24).

12. 'வேதங்களால் துணிந்த பிரமமே அதுவாகும்' (பகீர்:19.4) என்ற ஞானவாசிட்டக் கருத்து உபநிடதங்களில். உண்மையில் உள்ளது ஒரே பொருள்தான்'[83] என்ற கருத்தை வலியுறுத்து முகமாக உள்ளது. ஆகவே கடைசி கொள்கை இந்த நூலில் முழுமையாக அமைந்துள்ளது என்பது தெளிவா கின்றது.

4.18.2. இவ்வாறு அத்வைத நிலையை அடைய வேண்டும் என வலியுறுத்துவது இராமன் பல எண்ணங்களில் ஈடுபடாமல் இருக்க இந்த உலகில் பிரம்மம் ஒன்றே நிலையானது என்னும், ஞானிகள் அடையும் நிலையே அத்வைத நிலை என்றும் முனிவர் களால் வலியுறுத்துவது போல் நூலில் காணப்படுகின்றன.

4.18.3. இராமனிடம் கூறுவது போல அத்வைத கருத்துகளை ஒன்றன்பின் ஒன்றாக விளக்கியுள்ளார் ஆசிரியர். அத்வைத

நிலையே சிறந்தது, பிரம்மமே நிலையானது என்பதை கூற ஆசிரியர் கையாண்டுள்ள உத்தி சிறப்பாக உள்ளது. வைராக்கிய நிலையை உருவாக்கி அதை பிரம்மத்தின் மேல் வைத்து முயற்சி செய்தால் அத்வைத நிலையை அடையலாம் என பல நிலைகளையும் அதற்கு முனிவர்களின் வாழ்க்கையில் சிலவற்றை எடுத்து விளக்கியிருப்பதும் ஆசிரியரின் தனிப்பாணி என்றே கூறலாம்.

## 4.19. முடிவுகள்:

1. பந்தம், பற்று இவை ஆசைக்குக் காரணமாகின்றன.
2. ஆசை, மனம், சங்கற்பம் இவை எல்லாவகை தீமைக்கும் வழிவகுக்கின்றன.
3. ஆசை, மனம், அகங்காரம், சங்கற்பம், வாசனை போன்றவை ஞானத்தை அடைவதற்குத் தடையாக உள்ளன.
4. முயற்சியாலும், வழிபாட்டாலும், குருவாலும், நூற்களாலும் ஞானத்தை அடையலாம்.
5. காணப்படுகின்ற இந்த உலகம் இல்லை. அது மாயையால் தோன்றுகிறது.
6. இந்த உலகம் தோன்றுவதற்குக் காரணமாயிருப்பன மனம், சங்கற்பம், மாயை ஆகும்.
7. பந்தம், ஆசை, அகங்காரம், மனம், வாசனை, சங்கற்பம் இவை குடும்ப வாழ்க்கையில் மூழ்கி மறு பிறப்புத் தோன்ற வழிவகுக்கின்றன.
8. இந்த உலக வாழ்க்கையிலே பிரம்மத்தை அடைந்தவர்கள் சீவன் முத்தர்கள்.
9. பிரம்மம் ஒன்றே நிலையானது. மற்றவை எல்லாம் நிலையற்றவை என்பதை வலியுறுத்த உலகம் நிலையற்றது என்று விளக்கப்பட்டுள்ளது.
10. பிரம்மத்தை அடைவதற்கு ஞானம் வழிவகுக்கிறது.
11. ஆன்மாவை அறிந்தால் பிரம்மத்தை அறிந்து போலாகும்.
12. மாயை பிரம்மத்தை அடைவதற்குத் தடையாக உள்ளது.

13. பிரம்மத்தை அடைவதற்கு ஞானத்தைப் போல யோகம், வழிபாடு போன்றவையும் கருவியாக இருக்கின்றன.
14. அத்வைத நிலையை அடைவதற்கு ஐம்பொறிகள், அசுத்தவாசனை, அஞ்ஞானம், உலகம், ஆசை, சங்கற்பம், மாயை, பந்தம், மனம், அகங்காரம் போன்றவை தடையாக உள்ளன.
15. பிரம்மத்தை அடைதலே அத்வை நிலை ஆகும்.
16. உருவ வழிபாடு மறுக்கப்பட்டுள்ளது. இது அத்வைத கருத்தை வலியுறுத்த எடுத்தாளப்பட்ட கருத்து எனலாம்.
17. உணர்வே தெய்வம், உணர்வே பரமபோதம் என வலியுறுத்தப்பட்டுள்ளது.

---

அடிக்குறிப்புகள்:

1. வி.எஸ். கோபாலக்கிருஷ்ண அய்யர், க.க., தொகுதி. 5, 1958, ப. 454.
2. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், அத்துவித தத்துவம், 1966, ப. 116.
3. ………………… …………………, இந்துசமயத் தத்துவம், 1964, ப. 91.
4. மேற்கண்டவாறு, ப. 92.
5. சுவாமிபரமாத்மானந்தா, க.க., தொகுதி:9, 1963, ப. 52.
6. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், தெ.பொ.மீ. மணிவிழா மலர், 1961, ப. 124.
7. கழகத்தமிழ் அகராதி, ப. 673.
8. சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ.), ஸ்ரீமத் பகவத்கீதை 1980. ப. 118.
9. விவேகானந்த சுவாமிகள், ஞானயோக விளக்கம், (ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் விளக்கவுரை), 1976, ப. 185.
10. சர்வபள்ளி இராதாகிருஷ்ணன் (ப.ஆ.), கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருள் இயல் வரலாறு, தொகுதி 1,

கு. கோதண்டபாணிபிள்ளை (தமிழாக்கம்), 1970, பக். 482,83.

11. தர்மச்சக்கரம், ஜூன் 1983, ப. 215.
12. சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ.), ஸ்ரீமத்பகவத்கீதை, ப. 664.
13. க.க. தொகுதி 7, 1960, ப. 292.
14. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், இந்துசமயத்தத்துவம், ப. 52.
15. வி.எஸ். கோபாலக்கிருஷ்ண அய்யர், க.க., தொகுதி, 5. ப. 291.
16. சிவஞான பாடியம், ப. 203.
17. கே. ஆறுமுகநாவலர், இந்துமத இணைப்பு விளக்கம், 1978, ப. 104.
18. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், இந்துசமயத்தத்துவம், ப. 155.
19. மேற்கண்டவாறு, ,, ப. 137.
20. வி.எஸ். கோபாலகிருஷ்ணன் அய்யர், க.க., தொகுதி. 5, ப. 291.
21. ப. ராமஸ்வாமி, புத்தர் போதனைகள், 1956, ப. 17.
22. சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம், சுடர். 2, ப 359.
23. க.க., தொகுதி. 4, 1956, ப. 225.
24. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி, க.க., தொகுதி. 8, ப. 197.
25. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, 1981, ப. 1277.
26. ஸ்ரீமத் சுவாமிசித்பவானந்தர் (உ.ஆ.), திருவாசகம், 1975, ப. 426.
27. ஸ்ரீமத் சுவாமிசித்பவானந்தர், தினசரிதியானம், 1977, ப. 151.
28. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், அத்துவித தத்துவம், ப. 308.
29. ச. கந்தசாமி முதலியார், க.க., தொகுதி. 4, 1956, ப. 225.
30. ஸ்ரீராம கிருஷ்ணர். உபதேசமஞ்ஜரி, 1979, ப. 259.
31. ரா. கணபதி, ஜயஜயசங்கர, 1977, ப.60.
32. எச் ஜி. நரஹரி, க.க., தொகுதி. 1, 1954. ப: 477.
33. டாக்டர் டி எம்.பி. மகாதேவன், அத்துவிததத்துவம், பக். 189-198.

34. சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம், சுடர். 4, ப. 263.
35. ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ.), திருவாசகம், ப. 381.
36. மணிமேகலைத் தமிழ்ச்சொல் அகராதி, 1979, ப. 261.
37. டாக்டர் கே.சீ. வரதாச்சாரி, க.க., தொகுதி. 4,1956, ப. 365.
38. சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ.), ஸ்ரீமத்பகவத் கீதை, பக் 319, 322.
39. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், க.க., தொகுதி. 9, 1968, ப. 189.
40. கழகத்தமிழ் அகராதி, ப. 352.
41. புலியூர்கேசியன் அன்ட் வி. ஸ்ரீதரன், மனோசக்தி, 1976, பக். 315.
42. கழகத் தமிழ் அகராதி, ப. 655.
43. மேற்கண்டவாறு ,, ப. 641.
44. விவேகானந்தரின் ஞானயோக விளக்கம், 1976, ப.427.
45. கழகத் தமிழ் அகராதி, ப. 71.
46. சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ.), ஸ்ரீமத் பகவத்கீதை, ப. 810.
47. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், அத்துவித தத்துவம், ப. 10.
48. கி. லட்சுமணன், இந்திய தத்துவ ஞானம், 1980, பக். 210, 211.
49. ஸ்ரீராமகிருஷ்ண உபதேசமஞ்ஜரி, ப. 24.
50 சுவாமி சித்பவானந்தர் (உ.ஆ), ஸ்ரீமத் பகவத்கீதை, ப. 865.
51. சிவஞானபாடியம், சிவஞானசித்தியார் சு பக்கம், 1:30, ப. 153.
52. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், இந்துசமயதத்துவம், ப. 137.
53. ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி, பக்திஞானாமிர்தம், பக். 35,36.
54. க.க., தொகுதி, 8, 1951, ப. 240.
55. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப. 1295.
56. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், இந்துசமயத்தத்துவம், ப. 156.

57. க.க., தொகுதி 8, ப. 240.
58. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், இந்துசமயத்தத்துவம், பக். 293,94.
59. ………………………………………,அத்துவித தத்துவம், ப. 247.
60. மேற்கண்டவாறு, ப. 256.
61. மெய்ஞ்ஞானக் கோவை, ப. 182.
62. கி. லட்சுமணன், இந்திய தத்துவ ஞானம், பக். 26,27.
63. தவத்திரு குன்றக்குடி அடிகளார், சமய இலக்கியங்கள், 1981, ப. 107.
64. விவேகானந்தரின் ஞானதீபம், சுடர் 1, ப. 258.
65. தர்மச்சக்கரம், செப்டம்பர் 1983, ப. 351.
66. ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி, பக்தி ஞானாமிர்தம், ப. 8.
67. மேற்கண்டவாறு, பக்:40,76.

# பக்தி வகைகள்

**1. சிரவண பக்தி:**

இறைவன் நாமங்களை இடைவிடாதுச் சிரவணித்தல் (கேட்டல்). ஆத்மாவைத் தரிசிக்க வேண்டுமானால் சோகமோகம் நீக்க வேண்டும். சோகமோகம் நீங்க வேண்டுமானால் ஞானம் வேண்டும். ஞானம் வேண்டுமானால் சிரவணஞ் செய்யவேண்டும். இறைவன் நாமத்தைச் சிவணம் செய்யச் செய்ய பாவம் நீங்குகிறது.

**2. கீர்த்தன பக்தி:**

கீர்த்தனமென்பது வர்ணிப்பது. இறைவன் நாமங்களை வாயார வாழ்த்துவது கீர்த்தன பத்தியாகும்.

**3. ஸ்மரண பக்தி:**

ஸ்மரண பக்தியைச் சிந்தன பக்தியென்று சொல்லலாம். செவியாற் கேட்ட இறைவன் நாமங்களை வாயார வாழ்த்தி வழிபட்டு மனமார நினைந்து உருகுவது ஸ்மரண பக்தி யென்பபடும் மீண்டும் மீண்டும் நினைப்பது ஸ்மரணமெனப்படும். இதையே தியான மென்றும் சொல்வர். இறைவனை நாடிப் பொறிகளையடக்கி உள்ளே செல்வது தியானமாகும். இறைவனை

நாடி ஆலயங்கள் தோறுமலறிச் செல்வது பத்தி என்று பாகவதர்கள் கூறுகின்றனர். இதுவே ஸ்மரண பக்தியாகும்.

4. பாதசேவனை பக்தி:

ஞானமார்க்கத்தில் முடிக்கும் பெருமையும் பக்தி மார்க்கத்தில் திருவடிக்கும் பெருமையும் கூறப்பெற்றிருக்கின்றன. அறம், பொருள், இன்பம், வீடெனும் நான்கும் ஆண்டவன் திருவடியி லிருக்கின்றன. பகவானுடைய திருவடிக்குப் பணிசெய்கின்றபோது நம்முடைய கடினமான உள்ளம் மிருதுத்தன்மையை அடைகின்றது. பகவானுடைய திருவடி சேவனத்தால் எல்லாச் செல்வங்களும் உண்டாகின்றன என்று நம்பிக்கையுடன் வழி படுவது பாதசேவன பக்தியாகும்.

5. அர்ச்சனை பக்தி:

அர்ச்சனம், ஆராதனம், வழிபாடு, இறைஞ்சுதல் என்பன ஒருபொருட் சொற்கள். இறைவனை யொப்புக் கொள்வது ஆதாரணம். அணையொப்புக் கொண்டு (அர்ச்சித்து) வழிபடுவது கடினமாகும். அவ்வாறு வழிபடுவதை அருச்சனை பக்தி என்பர்.

6. வந்தன பக்தி:

இறைவழிபாட்டில் வந்தனபக்தி தலைசிறந்தது. வந்தனை, பணிதல், தண்டன், வணக்கம், பரவல், இறைஞ்சல், தாழ்தல் இவை எல்லாம் ஒரு பொருள் சொற்கள். இறைவழிபாட்டிற்குப் பால், தயிர், நெய், தேன், மாலை, பூ, சந்தனம், விபூதி குங்குமம், அட்சதை முதலிய திரவியங்களில் ஒன்று குறைந்த போதிலும் இறைவன் மன்னிக்கிறார். ஆனால் வந்தனம் (வணக்கம்) செய்யாவிட்டால் இறைவன் கோபிக்கிறார். ஞானி களாக இருந்தாலும்கூட இறைவனை வணங்காவிட்டால் துன்பம் வந்து நேரிடும் என்பர் (கந்தர் அலங்காரம்). எனவே வந்தன பக்தி சிறந்ததாகக் கருதப்படுகிறது.

7. தாஸ்ய பக்தி:

ஆண்டவனுக்கு அடிமைபூண்டு அன்பு செய்வதே தாஸ்ய பக்தியாகும். தாஸ்யபக்தன் தனது வாழ்க்கை முழுவதையும் இறைவன் திருவடியில் ஒப்படைத்துவிட்டு ஆனந்தமடைகிறான்.

**8. சக்கியபக்தி:**

சக்கியபக்தி இறைவனைத் தோழனாகக் கருதி அன்பு செய்வது சக்கியபக்தி. தோழமைபக்தி என்பது பரியாயம் (மாற்றுப்) ஸ்ரீ கண்ணனுக்கும் காண்டீவனுக்குமுள்ள (அருச்சுனன்) சம்பந்தம் தோழமைப்பக்தி என்பர்.

**9. ஆத்மநிவேதனபக்தி:**

ஆத்மநிவேதனபக்தி ஆத்மாவைப் பகவானுக்கு அர்ப்பணித்து விடுவது. எவன் இறைவன் நாமத்தை அன்போடு கேட்கிறானோ அவன் தன்னை இறைவனுக்கு அர்ப்பணித்துவிடுகிறான். இறைவனை அன்பைக்கொண்டும் அறிவைக் கொண்டும் அறியலாம்.

68. டாக்டர் டி.எம்.பி. மகாதேவன், அத்துவித தத்துவம், பக்: 288-296.
69 தர்மசக்கரம், செப்டம்பர் 1983, ப:353.
70. விவேகானந்தரின் ஞானதீபம், சுடர்.4, ப:445
71. கழகத் தமிழ் அகராதி, ப:801.
72. ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி, பக்திஞானாமிர்தம், ப:180.
73. அ. கி. லட்சுமணன், இந்திய தத்துவ ஞானம், பக்: 213, 214.
ஆ. பக்திஞானாமிர்தம், ப:181.

## யோக வகைகள்

**1. யமம்:**

இதுதகாது, இதுதகாது என எதிர்மறை முகமாக விதிகளை வகுப்பது. உதாரணமாக பிறஉயிர்களை இம்சித்தல், பொய் பேசுதல், களவாடல், உடைமைகளைப் பெருக்குதல், பிரஹ்ம சர்சம் போன்றவற்றைக் கூறலாம்.

**2. நியமம்:**

இதுவும், இதுவும் என உடன்பாட்டு மூலமாக விதிகளை வகுப்பது. உதாரணமாக தூய்மை, திருப்தி, நல்விளைவு, தத்துவ ஞான நூல்களைக் கற்றல், தவம்போன்றவற்றை மேற்கொள்ளத் தக்கன எனலாம்.

3. ஆசனம்:

யோகத்தின் பொருட்டு உட்காரவேண்டிய முறையைக் கூறுவது.

சான்று: பத்மாசனம், சித்தாசனம் முதலியவை.

4. பிராணாயாமம்:

மூச்சை அடக்கும் முறையைக் கூறுவது. அளவுக்கு மிஞ்சிப் பிராண வாயுவை வெளியில் விடாதிருத்தல்.

5. பிரத்தியாகாரம்:

புலன்களை அவற்றுக்குரிய பொருள்களின் மேல் செல்ல விடாது தடுத்தல். பொறிப் புலன்களை ஒருமுகப்படுத்துதல்.

6. தாரணை:

மனம் ஒரு நிலைப்படுவது தாரணம் எனப்படும்.

7. தியானம்:

சித்த விருத்தியைத் தைலதாரப்போன்று பரமாத்மாவின் கண்விழும்படி செய்தல்.

8. சமாதி:

தியானத்தின் பயனாக விளைவதே கடைசிநிலையான சமாதி. மனத்தை இறைவனிடத்தில் வைத்துத் தன்னையும் உலகத்தையும் மறந்து தியேய வடிவமாயிருத்தல்.

74. கழகத்தமிழ் அகராதி, ப,675.
75. விவேகானந்தரின் ஞானதீபம், சுடர். 1, ப.253.
76. ப.ராமஸ்வாமி, புத்தர்போதனைகள், ப 20.
77. கழகத்தமிழ் அகராதி, ப.425.
78. ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி, பக்தி ஞானாமிர்தம், ப. 181.
79. ஸ்ரீராமகிருஷ்ண உபதேச மஞ்ஜரி, ப. 348.
80. கைவல்லிய நவநீதம், பொன்னம்பல தேசிகர் உரை, 1941, ப.428.
81. கி. லட்சுமணன், இந்திய தத்துவஞானம், ப.332.
82. விவேகானந்தரின் ஞானதீபம், சுடர்-8, ப.822
83. கி. லட்சுமணன், இந்திய தத்துவஞானம், ப.382.

# 5. ஞானவாசிட்டத்தில் இலக்கிய நயங்கள்

5.0 இலக்கியங்கள் எழிலுருபெறுவதற்குக் காரண கர்த்தாக் களாக அமைவன அவற்றில் காணப்படும் நயங்களே ஆகும். அவை, அந்த இலக்கியத்தை ஆக்கியோனின் சிறப்பை வெளிப் படுத்திக்காட்டும் சிறந்த கருவிகளாகும். இலக்கியத்திற்கு இன்றி யமையாத கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகிய இந்த நான்கும் ஒரு படைப்பில் ஒருங்கே சிறந்து அமைதல் அரிது. மிகச்சிறந்த புலவரிடத்தில் இந்த நான்கும் ஒருங்கே அமைதல் உண்டு. இவற்றில் ஒன்று சிறப்புற்று மற்றொன்று நன்கு அமையாதிருத்தலே பெரும்பான்மையான இலக்கியங்களின் இயல் பாகும் ஞானவாசிட்டம் ஓர் அறிவுறுத்துகின்ற நூல் ஆகையால் இந்த நான்கு கூறுகளும் ஒருங்கே இதில் சிறப்பாக அமைய வில்லை. கருத்துச்செறிவே நூல் முழுக்க அமைந்துள்ளது. உணர்ச்சி, கற்பனை ஆகிய இரண்டும் குறைவாகவே காணப் படுகின்றன. வடிவம் சிறப்பாக அமைந்துள்ளமையைக் காணமுடி கிறது. அவை பற்றிய சிந்தனைகளை வெளிப்படுத்துவதே இந்த இயலின் நோக்கமாகும்.

## 5.1. உணர்ச்சி:

5.1.0. மக்கள் அறிவுத்துறையில் மிகுந்தும் குறைந்தும் விளங்குகின்றனர். ஆனால் இன்பம், துன்பம், விருப்பு, வெறுப்பு போன்ற உணர்வில் பொதுவாகவே உள்ளனர். உணர்ச்சிகள் வெவ்வேறு காரணங்களால் வெவ்வேறு சூழ்நிலையில் பிறந் தாலும் எல்லாக் காலத்தார்க்கும் எல்லா மக்களுக்கும் பொது வாகவே உள்ளன. திருந்திய அறிவைப்போன்றே திருந்திய பண் பாடான உணர்வுகளே இலக்கியத்திற்கு ஏற்றம் கொடுக்கின்றன.

5.1.0.1. வின்செஸ்டர் என்பார் பின்வரும் ஐந்து வகையாக அமைந்த உணர்ச்சிகளை உடைய இலக்கியம் நெடிது வாழும் எனக் கருதுகிறார்.

1. நியாயமான தக்க உணர்ச்சி: நல்ல காரணத்திற்காக நல்ல வகையில் அமைவது.

2. ஆழமுள்ள உணர்ச்சி: — ஆசிரியரின் உள்ளத்து உண்மையை ஒட்டியது, ஆழம் உடையது.

3. தொடர்ந்து ஒரு நிலையாக அமையும் உணர்ச்சி: — பொருந்தாததும், வேண்டாததும் இடையில் புகாதவாறு அமைவது; வலிந்து கொண்டு வரப்படாமல் இயல்பாக அமைவது.

4 வாழ்க்கையில் பல கோணங்களை விளக்குமாறு பல வகை உணர்ச்சிகள் கூடி அமைதல்.

5. மிகவிழுமிய உணர்ச்சியாய் அமைதல்: — பொருள்கள் காரணமாகவோ, புலனின்பம் காரணமாகவோ அமையும் உணர்ச்சிகளை விட உயர்வுடையதாய், நீதியின் காரணமாகவோ அறத்தின் காரணமாகவோ அமைதல்[1].

5.1.1. வின்செஸ்டர் குறிப்பிடும் இந்த ஐந்து வகை உணர்ச்சிகளில் இறுதி மூன்றும் ஞானவாசிட்டத்தில் காணப்படுகின்றன. இந்நூல் நீதியைப் புகட்டுவதாக அமைந்துள்ளதால் இறுதி உணர்ச்சிக் கூறு முழுமையாக அமையப்பெற்றுள்ளது எனலாம்.

5.1.2. இலக்கியத்தில் பலவகையான உணர்ச்சிகளும் இடம் பெறுகின்றன. எனினும் மகிழ்ச்சி, வேடிக்கை, கவலையற்ற மனநிறைவு முதலியவற்றைவிட அச்சம், துயரம், கவலை முதலிய உணர்ச்சிகளை உடைய இலக்கியங்கள் விரும்பிப் படிக்கப்படுகின்றன. ஞானவாசிட்டத்தில் இராமனது அச்சம், துயரம், கவலை முதலிய உணர்ச்சிகளை வைராக்கியப் பிரகரணத்தில் படம் பிடித்துக் காட்டியுள்ளார் ஆசிரியர் இவற்றை மாற்றுவதற்குரிய உணர்ச்சிகளைப் பல அரச, முனிவர்களின் கதைகள் மூலம் தெளிவுபடுத்தியுள்ளார்.

5.1.3. உணர்ச்சியைப் பாட்டின் வடிவிலும், பொருளிலும் அமைக்கலாம் என்றும் இரண்டிலும் ஒருங்கே புலப்படுமாறு அமைத்தலே சிறந்தது என்றும் கூறுவர்[2]. ஞானவாசிட்டம் இதற்குத் தக்க சான்றாக அமைகிறது.

5.1.4. இலக்கியத்தில் உணர்ச்சி மூவரிடம் உள்ளது என்பர். மூவருடைய உணர்ச்சியும் ஒன்றுபடும் போது ஓர் இன்பம்

உணர்த்துகிறது. இலக்கியம் இயற்றிய புலவரின் உணர்ச்சி, அதைக் கற்பவர் பெறும் உணர்ச்சி, அதில் வரும் கற்பனை மாந்தரின் உணர்ச்சி ஆகிய மூன்றுமே அவை. புலவரின் உணர்ச்சியைக் கற்பனை மாந்தரிடம் கண்டு அதையே கற்பவரும் உணர்தலே மூவகை உணர்ச்சியும் ஒன்றுதலாகும்[3]. ஞானவாசிட்டத்தில் ஞானவின்மகன் கதை, மித்தையா புருடன் கதை போன்ற கதைகளில் ஆசிரியர் கற்பனை மாந்தர்களைப் படைத்து அவர்களின் உணர்ச்சிகளை வெளிக் காட்டியிருப்பது படிப்பவர்களுக்குப் பெரும் வியப்பை ஊட்டுகிறது.

## 5.2. கற்பனை:

5.2.0. இலக்கிய ஆசிரியன் கற்பனை கையாளாமல் இருந்தால் நூல் முழுமை பெற்றதாகக் கொள்ள முடியாது. கற்பனை பற்றிய சிந்தனைகளை இங்கு காணலாம்.

5.2.0.1. இலக்கியக் கலைக்கு ஆதாரமே கற்பனைதான். கற்பனை கலைஞனுக்குக் கற்பகத்தரு. கற்பனை என்பது மனத்தின் படைப்பு. கற்பனைக்குக் கட்டுப்பாடோ, வரையறையோ, கால இட ஞ்செயல் எல்லைகளோ கிடையாது. கற்பனை தேராகவும், குதிரையாகவும், சிறகுகளாகவும் கற்பிக்கப்படுகின்றது[4]. கற்பனையைப் பற்றி முடிந்த முடிவாக இது வரை யாரும் கூறவில்லை. கற்பனை என்பது புலன்கள் நேரே ஒரு பொருளை அனுபவியாத காலத்திலும் அந்தப் பொருளை நினைவிற் கொண்டுவந்து அந்தப் பொருளினிடத்து மீண்டும் அனுபவத்தை ஏற்றவல்ல ஒரு வகை ஆற்றலாகும். கவிதைகளைக் கனிவித்துக் கற்போரின் மனத்தை விரிந்த பார்வையில் செலுத்தவல்லதாகும். கவிஞர் ரஸ்கின், கற்பனையின் தத்துவம் அறிவுக்கு எட்டாத ஒன்று; அதைச் சொற்களால் உணர்த்த முடியாது. அதன் பலன்களை மட்டும் கொண்டே அஃது அறியப் பெறுவதொன்றாகும் என்று குறிப்பிடுகிறார்[5].

5.2.0.2. மனிதன் தன்புறக் கண்களால் காண இயலாத பலவற்றை மனத்தின் அகக் கண்களால் கண்டு இன்புறுகிறான். இந்த வியப்புறும் அகக்காட்சி, எண்ணங்களாக வெளிப்பட்டுக் கற்பனையாக உருப்பெறுகின்றது. கற்பனை என்பது நகலோ போலியோ அன்று; அகஉலக நிலைக்களனாக்கி எழும் செவிம்

லனால் உணரும் இசை, கட்புலனால் அறியும் ஓவியம், கண் மெய்ப்புலன்களால் சுவைக்கும் சிற்பம், கண்-செவிப்புலன்களால் உணரும் நாடகம், பார்த்தும் படித்தும் கேட்டும் சுவைத்தும் இன்புறும் இலக்கியம் ஆகிய இவற்றை எல்லாம் நேரடியாகச் சுவைக்கும் போது மட்டுமின்றி, மனத்தின் ஆழங்களில் உணர்ந்து, பின் நினைக்கும் போது நயம் தந்து இன்பத்தை ஐம்புலனுக்கும் பங்கிடும் மன இயல்பு ஏற்படும் போது அங்கு தான் கவிஞனின் கற்பனையும், சுவைப்போனின் கற்பனையும் இணைகின்றன. இங்குதான் கற்பனை முழுமை பெறுகிறது எனலாம்[6].

5.2.0.3. இலக்கியக்கலை கற்பனைக்கு மிகுந்த, சிறந்த, தனித்த இடம் அளிக்கின்றது. கேட்டதை எல்லாம், நினைத்ததை எல்லாம் வரையாது வழங்கும் வன்மையும், வன்மையுமுடைய இந்தக் கற்பனை இலக்கியக் கூறுகளான பொருள், அமைப்பு, வெளியீடுகளில் பொருந்தியமைகின்றது[7]. பொருளாக எடுத்துக் கொண்ட கருவுக்கு உருவம் கொடுக்கும் போது அக, புறவடிவங்களில் கற்பனைத்திறன் உயர்வு பெறுகிறது. வெளியீடு என்னும் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது இலக்கியத்தின் அழகுகளைத் தருகின்ற உறுப்பாகக் கற்பனை அமைவதைக் கருதலாம். கற்பனை சில வேளைகளில் நூலற்ற காற்றாடி போல் உண்மையோடு தொடர்பற்ற தாய்ச் செல்லும் நிலையையும் காண முடிகிறது. அப்போது அமையும் கற்பனை அறிவின் அடிப்படை இழந்ததாய்ப் பொருளற்ற உயர்வு நவிற்சியாய் முடியும்[8].

5 2 0.4 அறிவுறுத்துவதைக் குறிக்கோளாகக் கொண்ட நீதி இலக்கிய ஆசிரியன் தேவையான அளவிற்குக் கற்பனையப் பயன்படுத்திக் கொள்கிறான். உணவிற்கு ஊறுகாய் எவ்வாறு பயன்படுத்தப் படுகிறது. அதைப் போன்று கற்பவர் உள்ளத்தில் பயன்படுத்தப் படுகிற அதைப்போன்று கற்பவர் உள்ளத்தில் கருத்துக்களை ஆழப்பதியுமாறு செய்வதற்குத் தேவையான அளவிற்குக் கற்பனைகள் நீதி இலக்கியத்துள் பயன் படுத்தப்பட்டு வருகின்றன. நீதிஇலக்கியத்தின் இயல்பிற்கும், தகுதிக்கும் ஏற்றவகையில் கற்பனையின் உதவியை நீதி இலக்கிய ஆசிரியன் நாடுகிறான். அதனால் அவன் படைக்கும் இலக்கியம் வறண்ட பாலைவனமாக மாறிவிடாமல் மாங்குயில் கூவும் பூஞ்

சோலையாகப் பொலிவுற முடிகிறது[9]. இந்தகருத்துக்களை வலியுறுத்து முகமாக ஞானவாசிட்ட ஆசிரியர் கற்பனை நயங் களை அமைத்துள்ளார். அவற்றைக் கீழ் குறிப்பி-ப் பட்டிருக்கும் எடுத்துக்காட்டுகள் மூலம் அறியலாம்.

5 2.0.5. இலக்கிய வல்லுநர்களால் குறிப்பிடப்படு் படைப்புக் கற்பனை, இயைபுக் கற்பனை, கருத்துவிளக்கக் கற்பனை என்ற மூவகையுள் ஞானவாசிட்டத்தில் கருத்து விளக்கக் கற்பனையே அதிகமாகக் காணப்படுகிறது. தான் கூறவேண்டிய கருத்தை வலியுறுத்த ஞானவாசிட்ட ஆசிரியர் இந்த உத்தியை அதிகம் பயன் படுத்தியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

5.2 0.6. காட்சிகளைக் கண்ணுற்ற கவிஞன் தான் கண்ட வற்றை அப்படியே கூறாது அகக்காட்சிகளால் உள்ளத்தில் கிளர்ந்தெழும் உணர்ச்சிகளை மட்டும் சித்தரித்தால் அதனைக் கருத்து விளக்கக் கற்பனை என்று சொல்வர். வின்செஸ்டர், ஒரு நிகழ்ச்சியிலிருந்தோ அன்றிப் பொருளிலிருந்தோ அதன் ஆன்மீக மதிப்பை அல்லது உட்குறிப்பை மட்டிலும் கண்டு அவை அடங்கிய பகுதிகளையோ அன்றி இயல்புகளையோ எடுத்துக் கூறுவதே கருத்து விளக்கக்கற்பனை என்பர்[10]. இதுவே கவிதைக்கு உண்மையான உணர்வைத் தருகிறது எனலாம். டாக்டர் மு.வ. கருத்து விளக்கக்கற்பனையை உலக வாழ்வில் காணப்படும் இரண்டு பொருள்களை இணைத்து அதன்மூலம் கருத்தை விளக்குவதாகும் என்று குறிப்பிடுகிறார்[11].

5.2.1. ஆளவந்தார் யானையையும், ஆசையையும் இணைத்து தான் கூறவந்த ஆசையின் பலத்தையும் அதனால் ஏற்படும் அழிவையும் கீழ்வருமாறு அமைத்துள்ளார்.

'சோகவிச்சையெனப் பெயர்கொள் சொரிமாமதத்த வெங்களிறு
தேகமென்னும் பெருங்காட்டிற் றிரளாஞ்செருக்கு மிகச் செய்யும்
வேகமதத்து இந்தியமாம் வெங்கன்றுகளை உடைத் தாகும்' (நிரு: 49.2-4)

துன்பத்தைக் கொடுக்கின்ற ஆசையென்னும் பெயரையுடைய, மதநீரைப் பொழிகின்ற யானையானது, உடல் என்று சொல்லப்

படுகின்ற பெருங்காட்டில் கோபமும் மதமும் உடைய உறுப்புக் களைக் கொண்ட கன்றுகளை உடையதாகும்; அந்த யானை இன்மையாகப் பேசும், அதுமனம் என்னும் காட்டில் வாழும்; அதன் இரண்டு கோடுகளும் இரு வினைகளை யுடையதாகும்; அது வாசனை என்கின்ற மதநீரைச் சொரிந்து அலையும்; எப் பொழுதும் எந்த இடத்திலும் நிறைந்திருக்கின்ற உருவத்தை உடையதாகும்; அதற்குப் பிறவிகள் கோபத்தினால் ஒடுங்கு கின்ற யுத்தக்களமாகும் என இந்தப்பாடலில் ஆசையை மத யானைக்கு ஒப்பிட்டுக் கற்பனை நயத்தோடு ஆசிரியர் குறிப்பிட் டுள்ளார்.

5.2.2. உயிரை எருதாக உருவகப்படுத்தியுள்ள கற்பனைத் திறன் போற்றத் தக்கதாக உள்ளது. அதனை ஆசிரியர்,

'ஆசைவன் பாசத்திரளினாற் கட்டுண்டு அரும்பிணிவிக் கடிக்கலுங்கி
ஏசுறுபோகக் கதைகளான் மொத்துண்டு இச்சை மூட் கோலினாலுலைந்து
காசுறுகருமச் சேற்றிலேயழுந்திக் கடுஞ்சகக் காட்டிலே சுழன்று
விசுமாமோகத் தளிர்நிழல் துயிலும் வீரனேசிவனாம் எருது' (பார்:2)

என்னும் பாடலில் உயிரானது என்னன்ன நிலைகளில் எப்படி யெப்படி அலையும் என்பதனைக் கற்பனைத்திறத்தால் தெளி வாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். மேலும் ஞானவின் மகன் கதை (3:1), பாலன் கந்த (3:6), லீலைகதை (8:2), மித்ஙதயா புருடன்கதை (6:11) இவை போன்ற பல கதைகளில் வரும் பாத்திரங்களின் செயல்கள் ஆசிரியரின் கற்பனைத் திறனைத் திறம்பட எடுத்துக் காட்டுகின்றன. மேலும் உவமை வழியாகக் கற்பனைத்திறனை வெளிப்படுத்தும் நிலை பல இடங்களில் காணப்படுகின்றன (பார்க்க: 5.5.1). வெளியீடு என்னும் கண்ணோட்டத்தில் பார்க்குமபோது இலக்கியத்தின் அழகுகளைத் தருகின்ற உறுப்பாகக் கற்பனை அமைவதைக் காணலாம்.

5.2.3. இலக்கியத்திற்கும் அழகு சேர்க்கும் அணியாக அமையும் உவமை, உருவகம், வருணனை, தற்குறிப்பேற்றம், உயர்வு நவிற்சி, இல்லது புனைதல் என்பன அனைத்திற்குமே கற்பனை தான் அடிப்படையாகின்றது. உள்ளதை அவ்வாறே எடுத்துத் தராது இருப்பதனை அடிப்படையாக்கி அழகு படுத்தி மிகுவித்து, அளிக்கின்றது கற்பனை[12]. இப்பாங்கினை ஞானவாசிட்டத்திலும் காணமுடிகிறது.

## 5.3. இயற்கை இறந்த நிகழ்ச்சிகள்:

5.3.0. இயற்கைக்கு அப்பால் நடைபெறுகின்ற வானில் பறத்தல் உருமாறுதல், இறைவன் அறிவுரை, வான்மொழி போன்ற கூறுகளை இலக்கியங்களில் குறிப்பிடுவர். இவற்றை பற்றி ஞானவாசிட்டத்தில் கூறப்படுவதை காணலாம்.

5.3.1.0. மீவியல்பு ஆற்றலுடைய மாந்தரும், மீவியல்புடைய தேவர், அரக்கர் போன்ற பாத்திரங்களும் பயிலும் இலக்கியங்கள், இயற்கை இறந்த நிகழ்ச்சிகளையும், இயல்புக்கு அப்பாற்பட்ட நிகழ்வுகளையும் தாங்கி அமைகின்றன. அறிவியல் வளர்த்து விட்ட தற்கால இலக்கியங்கள் எந்த அளவு நிகழ்வை அடிப்படையாக்கி இயல்பு மீறாது அமைகின்றனவோ, அந்த அளவு பழம் இலக்கியங்கள் இயல்புக்கு எதிரான பண்புகள் பொருந்தி காணப்படுகின்றன. மீவியல்பில் மக்கள் கொண்ட நம்பிக்கையும் மரபையும் வெளியிடவும், கற்போரைக் கவரவும், மக்கள் மனவுணர்வுக்கேற்ப இந்த இலக்கியக் கூற்றைத் தருகின்றனர் ஆசிரியர் எனலாம் என்ற கருத்தினை உடையவர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்[13]. மேலும் அவர் இயற்கை இறந்த ஆற்றல்கள் காப்பியங்களில், பக்தி இலக்கியங்களில் புலவர்களால் ஒரு உத்தியாகப் பயன்படுத்தப்படுகின்றன என்றும் குறிப்பிடுகிறார். அரிஸ்டாட்டிலின் கவிதை இயல் இதனை மிகத் தேவையான ஒரு கூறாகக் கருதுகின்றது. நிகழ்வியலானவாகி அமையும் இந்தக்கூறு, கவிதைச் சிறப்புக்காகவும், நடப்பில் காண்பதை மிகுத்துக் காட்டுவதற்காகவும், பழமரபை எடுத்து மொழிவதற்காகவும் அமையலாம் என்றும் கூறுவர்.

5.3.10.1. இந்தக்கூறு இல்லாவிட்டால் பக்தி, காப்பிய இலக்கியங்கள் குறைபாடுடையதாயும், நிறைவற்றதாயும் அமையும் எனக்கூறும் அளவிற்கு மையக்கதையிலும் கிளைக் கதையிலும் இதன் ஆட்சி பெருகி வருகின்றது.

5.3 1.1. புராணக்கதைக் கூறுகள் நிறைந்த ஞானவாசிட்டத்திலும் இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் மிகுந்து காணப்படுகின்றன. காட்டாக:

1. லீலை கதையில் (3 2) லீலை வானில் பறந்து செல்வதும் உருமாற்றம் கொள்வதும் காட்டப்படுகிறது. இந்தத் தூல உடல், முத்தி நிலையை அடைவதற்குத் தடையாக இருக்கிறது என்றும் முற்காலச் செய்திகளை அறிய வேண்டுமானால் சீவன் முத்தி நிலையை அடையவேண்டும் எனச் சரசுவதி தேவியால் லீலைக்கு உணர்த்தப்படுகிறது.

2. கொடூர எண்ணம் உடையவர்கள் எப்படி இருப்பார்கள் என்பதற்குக் கற்கடியின் உருவத்தையும், செயலையும் கற்கடி கதையில் (3.3) விளக்கியுள்ளார்.

3. தவத்தின் வலிமையினால் எதையும் அடையலாம் என்பதைக்காட்ட (i) கற்கடி ஊசிவடிவில் மாறியமை (3.3), (ii) அயிந்தவர் கதையில் காசிபன் மக்கள் தாமே பிரம்மன் என்று நினைத்து பத்து உலகத்தைப் படைத்தல் (3.4), (iii) சூடாலையின் உருமாற்றம், சூடாலை வசிட்டர் போன்றோர் வானில் பறத்தல் (6.1), அணிமாவினால் சூடாலை, கையாளும் உத்திகள் (6 9) போன்றவற்றைக் கையாண்டுள்ளார்.

4. சரசுவதி, திருமால், சிவன், பிரம்மா, இந்திரன் போன்றவர்களின் காட்சியும் செயலும் (பார்க்க: இயல். 3.8; இயல். 2 4.32. 6.9).

5. வேதாளத்தின் செயலும் (பார்க்க: இயல். 2.4.30.6.7).

6. மறுபிறப்பை பற்றிக் கூறுவதற்குக் கையாண்டுள்ள பாத்திரங்களின் (லீலை கதையில் (3.2) - லீலை; காதிகதையில் (5 5). காதி; சதவுருத்திரன் கதையில் (6.6) - ஒரு முனி; புசுண்டன் கதையில் (6 1) - வசிட்டர் செயல்களும் வியக்கத்தக்கதாக உள்ளன.

7. ஞானவிண்மகன் கதை (3.1), மனத்தின்கதை (3.6) பாலன்கதை (ஆகியவையில் 3.7) வரும் கதைப்பாத்திரங்கள், புசுண்டன் (6.1) (காகம்), மித்தையாபுருடன் (6.11) போன்ற ஆசிரியரின் கற்பனைப் பாத்திரங்கள் இயற்கை இறந்த நிகழ்ச்சிகளுக்கு அணிகலன்களாக உள்ளன.

5.3.1.2. பாத்திரப்படைப்புக்கு ஏற்றம் கொடுப்பதாகவும், கவிஞனின் கருத்து வெளியீட்டாகவும்; சமுதாய நம்பிக்கையின் வெளிப்பாடாகவும் இந்த இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் இணைந்துள்ளன எனலாம்.

## 5.3.2. அசரீரி (வான்மொழி):

5.3.2.0. தமிழிலக்கியங்களைப் பொறுத்த மட்டில் அசரீரி என்பது ஒரு கூறாக அமைகின்றது. இயற்கை இறந்த நிகழ்ச்சியின் ஒரு தனிப்பகுதியாக அசரீரியைக் கொள்ளலாம். கதைப் பாத்திரங்களால் செய்யமுடியாத சிலவற்றை அசரீரியை மூலம் அமைப்பது ஆசிரியரின் தனி உத்தியாகும். இது கதை நிகழ்ச்சியையோ அல்லது கதைச் செய்தியையோ விளக்குதற்குரிய உத்தியாக அமைந்துள்ளது. பாத்திரங்களுக்கு நம்பிக்கை ஏற்படும் வகையிலும் இந்த உத்தி அமைகிறது.

5.3.2.1. ஞானவாசிட்டத்தில் லீலை தன் கணவன் இறந்ததினால் அழுது கொண்டிருக்கும் போது கவலையை மாற்ற அசரீரி ஒலிக்கிறது(3.2). தாசூரன் கதையில்(4.4) தாசூரன் கவலையை மாற்றவும் அசரீரி ஒலிக்கிறது.

5.3.2.2. இவை பாத்திரங்களால் மாற்ற முடியாத காரணத்தால் ஆசிரியர் இந்த உத்தியைப் பயன் படுத்தியுள்ளார் எனலாம்.

## 5.3.3. கூடுவிட்டுக் கூடுபாய்தல்:

5.3.3.0. ஓர் உடம்பை விட்டு இன்னோர் உடம்பில் செல்வது ஆகும். இந்த நிலையை புராண இலக்கியங்களில் அதிகமாகக் காணலாம். ஞானவாசிட்டத்திலும் இந்த உத்திகாணப்படுகிறது.

'தம்மா லுறை கூட கல் புள்ளெனத் தாவு நெஞ்ச
மைம்மா லுறு கூட்டினை மாற்றின ளக்கணத்தில்'
(லீலை: 14.3,4)

என லீலை தன் உடலைவிட்டு மாறிச் சரசுவதியுடன் வானில் பறந்து சென்றாள் என்றும், பின் பதும அரசனும் லீலையும் தங்களது பழைய உடலில் வந்து புகுந்தார்கள் என்றும் காட்டியுள்ளார்.

5.3.3.2. சுக்கிரன் கதையிலும் (4.1), வீதகவ்வியன் கதையிலும் (5.9), சிகித்துவசன் கதையிலும் (6.9) இந்நிகழ்ச்சி விளக்கப்பட்டுள்ளது.

5.3.4. இயற்கை இறந்த நிகழ்ச்சிகள், அசரீரி, கூடுவிட்டுக் கூடுபாய்தல் போன்ற புராணக் கூறுகள் இந்த நூலில் அமைந்துள்ளன என்பதை மேற்கண்ட கருத்துகளால் அறிய முடிகிறது. இது ஒரு உபபுராண நூல் என்பதற்கு இவை சான்றாகும் எனலாம்.

## 5.4. வருணனை :

5.4.0. வருணனை இலக்கியங்களின் விரிவுக்காகவும் தெளிவுக்காகவும் அமைக்கப்படும் உத்தியாகும். நூலில் எவ்வாறு ஆசிரியர் அமைத்துள்ளார் என்பதை இங்கு காட்டப்பட்டுள்ளது.

5.4.0.1. ஏதேனும் ஒரு பொருளின், அதன் பலதிறப்பட்ட இயல்புகளையும், அறிவு எழில் பற்றுமாறு அமையும் அழகுச் சுவைகளையும் விவரித்துக் கூறுவது தான் வருணனை. உவமை தெரியாத ஒன்றை விளக்குவதற்கும், எந்தப்பொருள் பற்றி நிகழ்ந்தாலும் அந்தப்பொருளைச் சரியானபடி வரையறைப் படுத்தி உணர்த்துவதற்கும், அதனைச் சித்தரித்து மனத்தில் நிறுத்துவதற்கும் வருணனை உதவுகிறது. எனவே வருணனைக்குரிய பலவகைச் சூழல்களையும் ஆசிரியர் அமைத்தல் இன்றியமையாததாகின்றது. இந்தச் சூழ்நிலை பெரும்பாலும் காலம், இடம், வடிவு, நிறம், மனநிலை, இயக்கம், செய்கை முதலியவற்றின் அடிப்படையில் அமைகிறது என்பர்[14].

5.4.0.2. வருணனைப் பொருள், இயற்கையைக் கடந்ததாகவோ இயற்கையில் அடங்கியதாகவோ இருக்கலாம். விலங்குகள், பறவைகள் முதலிய உயிர் உள்ளனவும், மலை மரம் முதலியவையும், மக்களினமும் இயற்கையில் அமையும் மக்களினத்தின் உருவம் பற்றியும், மனம் பற்றியும் வருணனை நிகழலாம். பெருங்காப்பியத்தின் இயல்பைக் கூறும் தண்டியலங்காரமும், மலை, கடல், நாடு, நகரம், இருது, சூரிய, சந்திர உதயமுடிவு வருணனைகளும் இன்னொரன்ன வருணனைகளும் அமையலாம் என வருணனை பற்றிப் பேசுகின்றது[15]. வருணனை உள்ளதை

உள்ளவாறே கூறவேண்டும் என்பதில்லை. புலவரின் கற்பனையும் இடம்பெறலாம் என டாக்டர் மு. வரதராசன் வருணனை அமையும் பாங்கைக் குறிப்பிட்டுள்ளார்[16].

5.4.0.3. வருணனை காப்பியத்தின் அளவை மிகுத்துக் காப்பியத்தை ஒரு பேரிலக்கியமாக அமைக்க உதவுகிறது. வருணனை இல்லையெனில் காப்பியத்தின் அளவு மிகச் சுருங்கி விடும். வருணித்தல் இலக்கியத்தின் அடிப்படைக் கதைக்குத் தேவை இல்லாத ஒன்றாக இருந்தாலும், வருணனை இல்லாத இலக்கியங்கள் சுவையாக இருக்க இயலாது. அஃது இலக்கியக் கவிஞனின் கவித்திறத்தை அளக்கும் அளவுகோலாகும். ஏனெனில் இலக்கியக் கவிஞனுக்குக் கதை அமைப்பைப் பொறுத்தவரை கற்பனைக்கு அதிக தேவையில்லை. ஆகவே வருணனை கவிஞ னின் கற்பனைத் திறனுக்கு உதவுகிறது.

5.4.0.4. வருணனையை இயற்கை வருணனை, நகர வருணனை, விழா வருணனை. கதைமாந்தர் தோற்ற வருணனை, தனிப்பொருட்களின் வருணனை, போர் வருணனை போன்று பலவகையாகப் பிரிப்பர்[17]. ஞானவாசிட்டம் ஓர் அறிவுரை நூல் ஆகையால் வருணனைக் கூறுகள் அதிகமாக இல்லை. இயற்கை வருணனைகளும் பாத்திர வருணனைகளும் கதை இலக்கியங் களில் முதலிடம் பெறுகின்றன. இந்த நூலில் காணும் பாத்திர வருணனைகளைப் பாத்திர வருணனைகள் என்று கூறுவதை விட, தான் எடுத்துக் கூறவேண்டிய கருத்துக்கேற்றவாறு அமைந்த வருணனைகள் என்று கூறலாம். எடுத்துக் கொள்ளும் வருணனைகள் எல்லாம் நீதிகளைப் புகட்டுவன போன்றே அமைந்துள்ளன.

5.4.1. உடலானது நிலையற்றது என்பதனை விளக்க ஆசிரியர் கூறும் வருணனைப் பாங்கு கீழ்வரும் பாடலால் விளங் கும்.

'அற்பமதாஞ் சுகாசுகத்தில் அழுந்தும்உடல் நிலையெனினும்
அழிவொன் றாது
நற்பலமென் னகங்கரனுக் ககமாகிப் பொறிபசுக்கள்
நாலோடாறுங்
கற்பனைசெய் மனத்தொழும்பும் ஆசைமனைவியும்
வாயாங் கடையும் ஆங்கே
பற்பலபல் லென்புகளந் தோரணமு நாக்குரங்கும் பயின்று
தோன்றும்' (வைரா: 85)

என நிலையாமை நீதியைச் சொல்லுவதற்காக உடலை வருணனைப் பொருளாகக் கொண்டுள்ளார் ஆசிரியர்.

5.4.2. மையக் கதையோடு தொடர்புடைய மாந்தரின் அழகு நலனை வருணித்தல் பொதுவாகப் பாதாதிகேச அல்லது கேசாதிபாத வருணனையாக அமையும். பாத்திர வருணனையில் பாதாதிகேசமாக அமையும் விளக்க வருணனைக் குறிப்பிடத் தக்கது. தலைமை மாந்தரை ஆடவராயினும், பெண்டிராயினும் இவ்வாறு வருணிக்கும் நிலை மரபாகிவிட்டமையை இலக்கியங்களில் காண்கின்றோம். இந்த நோக்கையும் ஆசிரியர் தலைமைப் பாத்திரமல்லாமல் கதையில் வரும் பிற பாத்திரங்களையும் இவ் வகையால் வருணித்துள்ளார். காட்டாக: கற்கடி கதையில் (3.8) வருகின்ற கற்கடியைப் பற்றிய வருணனை இந்நிலையில் அமைந்ததேயாகும் (கற்ப: 6,7).

'கருமேருவைப் பெண்வடிவாகக் கைகால் வருத்தெனத் திரிவாள்
உருமேறனைய சிறுநகையாள் ஓடாமீன் போயூழல் கண்ணாள்
பெரு மேனியைத் தாங்கிகு குறங்கும் பேரீச் சென்னப் பெருதுடையாள்
வருமேகத்தைப் பிளக்குநகம் வயிடூரியத்தின் சுளகொப் பாள்' (கற்: 7)

இந்தப்பாடல் கற்கடியுடைய உருவத்தை மனக்கண்ணில் எவ் வாறு கொள்ளவேண்டும் என்பதற்கு ஏற்ற கற்பனை நிறைந்த வருணனையாக அமைந்துள்ளது.

5 4.3. மேலும்,

'அரன்சிரநின் றிழியமுத கங்கைபோன்ற அமுததாரையி னாலே யமலமாகிக்
கரங்களொரு நான்குடன் வெண்மதித்தே சாகிக் கருணைமால் வடிவென்னக் காணலாகி
யுரங்கிளருத்தாங்கன் மெய் தோன்றிற்றன்றே'
(உத்: 48: 1-3)

என உத்தாலக முனியைத் தெரியப்படுத்துவதோடு சிவனையும் திருமாலையும் வருணனையால் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

5.4.4. சங்காரசத்தியைப் பல பாடல்களில் பெண்ணாக உருவகித்து வருணித்திருப்பது ஆசிரியரின் தனித்தன்மையாகும்.

(வைரா: 114-118). பழமையான உலகில் உள்ள பொருட்களை அழிக்கின்ற, பயங்கரமும், வல்லபமுமாகிய நடையை உடையவள்; மாதர் கூட்டத்தைத் தன்னுடன் பொருந்துகின்ற உலக மோக மென்னும் காட்டில் உள்ள பெண் புலியைப் போல வாழ்பவள் என்றும்,

'பொன்னுலகு தரியணியாம் புணர்பாவ மெனுநூலாற் பூட்டிக்காட்டும்
பன்னரகச் சிலம்புகளைப் பாதலமாம் பதந்தணியும் பானுத்திங்கள்
என்னுமணி சேரிமவான் எனும்எலுப்பு மணிமேரு வென்னும் பொற்பூண்டு
தன்னிருகா தினுந்தரிக்குஞ் சக்கரவெற் பணிகலையாய்த் தழுவுமன்றே' (வைரா:115)

என்றும், உயிர்களைக் கொன்று இரசத்தைக் கொண்ட பூமியாகிய பாத்திரத்தைக் கையில் ஏந்தி மூன்று உலகிலும் அலைபவள்; காலன் விளையாடுவது போல் தனது இச்சைப்படி உலகில் மாற்றம் செய்து அலைந்து திரிபவள்; சுவர்க்கத்தைத் தலையில் அணிகின்ற ஆபரணமாகவும், நரகத்தைப் பாதத்திலும் சூட்டுபவள். சூரிய சந்திரர்களைக் குண்டல ஆபரணமாகவும், இமய மலையை அஸ்தியா பரணமாகவும், மேருமலையைப் பொன்னா பரணமாகவும் கொண்டு அணிபவள்; முருகனது மேட, மயில் வாகனத்தைச் சூடுபவள்; சிவன் தலையைத் தரிப்பவள்; உமையின் கூந்தல் சாமரத்தையும். தேவேந்திரனது பலியோட்டையும் ஏந்துபவள்; நரம்புகளால் கோக்கப்பட்ட தலையோட்டு மாலைகளை அணிந்தவளாய், தனக்குத்தானே பயங்கரமாய் உங்களை அழிப்பவள், உலகத்தை புரிந்து எல்லாச்சங்கார காலத்திலும் ஒளிவீசிக் கொண்டிருப்பவள். இவ்வாறு அழிக்கும் சத்தியைச் சங்கார சத்தியாக வருணனை செய்திருப்பதில் ஆசிரியரின் புலமையை வெளிப்படுகிறது.

5.4.5. இவைபோன்று, உடலை அகங்காரத்தின் இருப்பிடம் (வைரா:85) என்ற நிலையில் வருணிப்பதும், ஞான தெய்வத்தை மனிதனாகச் சிறப்பித்துக் கூறுவதும் (தேவ: 31, 32), இராமன் இருந்த வைராக்கியநிலையை (வைரா: 37, 38) வருணிப்பதும்

ஆசிரியர் வருணனை உத்தியை நூலில் சிறப்பாக அமைத்துள்ளார் என்பதைத் தெளிவுப்படுத்துகின்றது.

## 5.5. வடிவம்:

5.5.0. இலக்கியத்தின் அழகு அதன் வடிவத்தில் அமைந்திருக்கும் என்பர். இலக்கியக் கலைக்கு வடிவம் இன்றியமையாததாகும். வாழ்வின் பல்வகை உணர்ச்சிகளையும், பல்வேறு கற்பனைகளையும் எடுத்துரைத்து இருப்பது இலக்கியங்களை பெரிதாக காட்டுவதற்கு எனலாம். இலக்கியத்தின் வடிவமே ஆசிரியரின் உள்ளத்தையும் கற்பவரின் உள்ளத்தையும் தொடர்பு படுத்துவதாகும். பாட்டின் பொருளுக்கும் வடிவிற்கும் இயைபு உண்டு; உணர்த்தப்படும் பொருளும் அதை உணர்த்தும் வடிவும் பிரிக்க முடியாதனவாய் இயைந்து நிற்கும்; கற்பனையுணர்ச்சியும் ஒலி நயமாகிய அதன் வடிவமும் ஒன்று படும் இயைபே பாட்டாக அமையக் காரணமாக இருக்கும்[18]. வடிவத்தில் உவமை, உருவகம், யாப்பு, எதுகை, மோனை, ஒலிநயம், சொல்லாட்சி, நடை போன்ற கூறுகளை அமைப்பர். ஞானவாசிட்டத்திலும் இந்தக்கூறுகள் மிகுந்து காணப்படுகின்றன. அதை ஆய்வு நிலையில் வெளிப்படுத்துவதே இந்தப் பகுதியின் நோக்கமாகும்.

### 5.5.1. உவமை:

5.5.1.0. கற்பனை, வருணனை சிறப்புற அமைய நிலைக்களனாய் வருவன உவமை, உருவகம் போன்ற அணிவகைகளேயாகும். தொடர்பான ஒன்று மற்றொன்றுக்கு ஒப்பானதாக இருந்தால் அந்த ஒப்புமையிலே புலவரின் அகக்கண் புதிய அழகைக் காண்கிறது. அவ்வாறு ஒப்புமை கண்டு கூறுவதையே உவமை என்று இலக்கண நூலார் கூறுவர்[19]. அறிந்த ஒன்றை வைத்து அறியாததைக் கூறமுயலும் போது உவமை வெளிப்படுகிறது என அ. ச. ஞானசம்பந்தன் குறிப்பிடுகிறார்[20].

உவமை படிப்போரின் ஆர்வத்தை மென்மேலும் தூண்டவும், கூறும் கருத்துகளை விரிந்த நிலையில் விளக்கவும் உதவுகின்றன. சில இலக்கியங்களில் உவமைகள் இலக்கியத்தை வளர்த்துச் செல்லும் நிலையினையும் காணலாம். ஞானவாசிட்ட ஆசிரியரின்

வினைதயாற்றலையும், அவர் கூறும் நீதிக்கருத்துகளையும், திறம்பட உணர்த்த உவமைகள் சிறந்த வாயிலாக உள்ளன.

5 5 1.1.4. ஞானவாசிட்ட ஆசிரியர் 1154 உவமைகளைப் பயன்படுத்தியுள்ளார். இவற்றுள் பொருள்களை விட தத்துவங்களை விளக்குவதற்கே அதிகமான உவமைகளைக் கையாண்டுள்ளார். புராண உவமைகளையும், இயற்கையோடு ஒட்டிய வழக்கில் உள்ள உவமைகளையும் அதிகமாகப் பயன்படுத்தியுள்ளார். ஆளவந்தார் அற்று (1), அன்ன (10), அனைய (25), ஆய் (2), இன் (7), உவமை (2), என (85), என்ன (86), ஒப்ப (47), ஒத்த (26), ஒக்கும் (22), செய் (2), நிகர (31), நேர் (10), புரைய (2), போல (795), மான (1) போன்ற உவம உருபுகளைப் பயன்படுத்தியுள்ளார் [பார்க்க: பின்னிணைப்பு-4]

5.5.1.1.1. ஞானவாசிட்டத்தின்கண் அமைந்துள்ள உவமைகள், இயற்கைப் பொருட்கள், பழமொழிகள், புராணச் செய்திகள் போல்வன உவமைகளாகவும் தொடர் உவமைகளாகவும் காணப்படுகின்றன. இந்த உவமைகள் அனைத்தும் தத்துவங்களை விளக்குவனவாகவே அமைந்துள்ளன.

### 5.5.1.2. இயற்கைப்பொருளை உவமையாக அமைத்தல்:

5.5.1.2.0. இயற்கைப் பொருளைத் தான் கூற வேண்டிய தத்துவங்களுடன் ஒப்பிட்டுள்ளமை ஞானவாசிட்டத்தில் அதிகமாக காணக்கிடக்கின்றன.

1. ஞானத்தை அடைய வாசனையையும் மனத்தையும் அகற்ற வேண்டும் என்பதோடு அதனால் ஏற்படும் நிலையையும் உவமை தோன்ற தெளிவுபடுத்தியுள்ளார்.

'வாதனை வலையைச் செற்று மனப்பந்தமாற்றி விட்டாற்
காதல் செய்தேற்றின் வித்தின் கலங்கு நீர் தெளிவு தென்ன' (ஞானம்:3.1,2)

என் வாசனை என்னும் வலையைக் கெடுத்து மனத்தினது பந்தத்தை அறுத்து விட்டால் ஆசை, தேற்றாங் கொட்டையினால்

கலங்கிய நீரானது தெளிவது போல தெளிந்த மெய்ஞ்ஞானத்தினால் உண்மையாகிய தற்சுபாவம் உடையவர்களுக்குத் துன்பமற்று நிரந்தரமாக ஒளிவீசும் என உணர்த்தியுள்ளார்.

2. பறவை கூட்டிலிருந்து வெளியேறினால் போல மனத்திலுள்ள பந்தம் நீங்கினால் எல்லாம் நீங்கிவிடும் என்பதனை,

........' கூட்டினின்றுஞ் சேணுறச் செல்லும் புட்போற் றுங்க
மோகத்தினின்றுந் தூய்மனம் வெளிபிற் போந்து
பங்க மாமையந்தீரப் பற்றெனுமனைத்துந்தீரும்'
(தாம: 4.2-4).

எனக்காட்டியுள்ளார்.

3. மேலும், 'வழுவறு சத்துவகுணத்தோர் தோலுரிக்கு மரவென்ன
மாயாபாச நழுவுவர்' (சன: 2: 1,2) என குறைவற்ற சாத்துவித குணத்தை உடையவர்கள், தோலை உரிக்கின்ற பாம்பைப் போல மாயாபாசத்தினின்று நீங்குவார்கள் என்றும்,

முதுமைக்காலம் பயனற்றது என்பதனை,
வருத்தமுஞ் சரையுமுற்று வல்குண மிழந்த மூப்பை
அருந்திவந் தடையுங்கட்டை மரங்கமுகு அடையுமா
போல்' (வைரா: 102: 3,4)

என்றும் விளக்கியுள்ளார்.

4. துறக்க வாசலைக் காக்கின்ற நான்கு பேர்களுக்கும் சாந்தி கிடைத்தால் ஆசையும், துக்கமும் சூரியன் முன்னே உள்ள இருள் மறைவது போல நீங்கும். என்பதனை,

......................"தூயபதமுறு முத்தித் துவாரபாலர்க்
கடவகுணங் கேட்டியுயர் சாந்திவந்தாற் காதலுந்துன்
பழுங்கதிர்முன் கங்குல்போற் போம்' (முமூட்: 15.3,4)

எனக்காட்டியுள்ளார்.

5. மனத்தை, 'இரும்பாலிரும்பு திருந்துவ போலியற்று
மனந்தான் மனந்திருந்தும்' (உற்: 4.1)

என்றும்,

'கருகியவிம் மனந்தன்னை யளற்றிலானைக் கரையேற்ற
விடுவது போற் கரையிலேற்றாய்' (தாகு: 26.2)

என்றும் இயற்கையோடு ஒப்பிட்டுள்ளார்.

6. எந்தத் தொழில்களிலும் இச்சையில்லாமலிருந்து ஆத்ம ஞானத்தை அடைந்தவர்களுக்கு அந்தத்தொழில்களில் தாமரை இலையில் சேர்ந்திருக்கின்ற நீரைப் போல அறிவானது பற்றாது (தாசு: 47.2) என்பர். விளங்குகின்ற சிந்தாமணியாகிய இருதயம் என்னும் பெட்டியில் இருக்கின்ற ஞானமானது கலக்கமில்லாத ஞானிகளுக்குச் சிந்திக்கப்பட்ட பொருட்களைக் கற்பக மரத்தைப் போல அப்போதே கொடுக்கும் என ஞானத்தின் நிலையைக் கீழ் வரும் வரிகளால் அறிவித்துள்ளார்.

'இலங்கிய சிந்தாமணியாம் இதயமெனுஞ் சரக்கரையில்
இருக்கும் போதங்
கலங்கலிலா விவேகியர்க்குக் கருது பொருள் கற்பகம்
போற் கணத்தினல்கும்' (சன: 35: 1,2)

7. இவ்வாறு தத்துவங்களை விளங்குவதற்கு வலை, நீர், தேற்றாங் கொட்டை, பறவை, மரம், பாம்பு, சூரியன், இரும்பு யானை, தாமரை, கற்பகமரம் போன்ற பல இயற்கைப் பொருள் களை உவமை மைக்காக கையாண்டுள்ளார்.

### 5.5.1.3. பழமொழிகளை உவமைகளாகக் கையாளுதல்:

5.5.1.3.0. ஞானவாசிட்டத்தில் நாட்டுப் புறங்களில் வழங்கும் சில பழமொழிகளை உவமைகளாகப் பயன்படுத்தியுள்ளமையைக் காணமுடிகிறது.

1. 'பேறுறு சரைகைக் கொண்டாற் பேரறிவகன்றிட் டோடும்
வேறுறு மணங்கான் முன்னை மெல்லியல் அகலுமா
போல்' (வைரா: 100: 3,4)

என மயக்கமும், வியாதியும், துன்பமும் ஆகிய இவற்றை உடைய முதுமைவந்தால் இரண்டாம் திருமணத்தில் வந்தமனைவியால் முன்னுள்ள மனைவியானவள் கணவன் மனத்தினின்று நீங்குவது பொல முதிர்ந்த அறிவு பிரிந்துபோகும் என முதுமையைக் காட்டியுள்ளார்.

2. 'காகதாலீயம் போல' (உற்: 66: 1; காதி: 29.1, சத: 3.3, நிரு: 27. 2, 31.3)

என்ற பழமொழி, குருவியிருக்கப் பனம்பழம் விழுந்தாற்போல என்று நாட்டுப் புறங்களில் கையாளப்படும் ஒன்றாகும். இங்குக்

காக்கையேற பனம்பழம் விழுந்தால்போல என்று கையாளப் பட்டுள்ளது.

3. 'அங்கை நெல்லி தோன்றுதல்போல' (திரு:23.2; தாரு: 15.2) என்பது 'உள்ளங்கை நெல்லிக்கனி' என்ற பழமொழியை நினைவூட்டுகிறது.

4. 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும், என்ற பழமொழி, 'தொட்டிலில் பிடித்த பேய்ச்சுடலையிற்போம் தொன்மைபோல' (லீலை: 62.2) எனப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

5. 'எண்ணெய் இல்லாமல் எள்ளுண்டா' என்ற முதுமொழியை, 'செறிதயில மில்லாமற்றில முண்டாமோ' (உபசா: 28.3, 29.3) என ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார்.

6. 'இரும்பாலிரும்பை யறுப்பது போல' (உற்: 4.1, மானு: 12.3) என்ற பழமொழியும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

7. நூலில் வரும் அரிய தத்துவக் கருத்துகளை மிக எளிய முறையில் உணர்த்துவதற்கு ஞானவாசிட்ட ஆசிரியர் இவை போன்றப் பல பழமொழிகளைக் கையாண்டு சிறப்பு பெற்றுள்ளார்.

### 5.5.1.4. புராண உவமை:

5.5.1.4. புராணச் செய்திகளை உவமைகள் வழியாக வெளிப்படுத்திக் காட்டியுள்ளமை ஆசிரியரின் பன்னூற் புலமையைக் காட்டுகிறது. இவையும் ஒவ்வொரு நீதியைப் புகட்டுவதற்காகவே பயன்படுத்தப்பட்டுள்ளன.

1. சனக அரசனை அறிமுகப்படுத்தும் போது,

'சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தானென்ன
உலகந் தாங்கு நீரான்' (சன: 9.1)

என சற்குணத்தில் கடலுக்கு ஒப்பானவன் என்றும், விஷ்ணுவைப்போல பூமியிலுள்ள மக்களைக் காக்கும் குணத்தை உடையவன் என்றும் விளக்கியுள்ளார்.

2. குறுமுனி கவர்ந்த கடலைப்போல, மனத்தைக் கெடுக்கின்ற ஆசையில்லாத மனத்தைப் போல் சந்திரன் ஒளிவிடும் என்பதனை,

அகத்தியன் கவர் கடலென நன்னெஞ்சை யழிக்கு
மிகுத்த மாலிலா மனமென நிறைமதி விளங்கா
(மாவலி: 9.1,2)

என உவமித்துள்ளார்.

3. எழும்பி எழும்பிச் சீறுகின்ற இந்திரியம் என்னும் பாம்புகளை மனத்தினிடத்தில் உறுதியான விவெக மென்னும் தண்டினால், தேவேந்திரன் வச்சிராயுத்தைக் கொண்டு மலைகளை உடைப்பது போலக் கெடும் படியாக அடிக்க வேண்டும் என்று உவமைப்படுத்தியுள்ளார்.

'எழுந்தெழுந்து சீறுகின்ற இந்திரியப் பாம்புகளை
இதயந்தன்னில்
அழுந்து விவேகத் தடியால் வச்சிரங் கொண்டிந்திரன்
வெற்படர்வதென்ன' (சன: 14: 1,2)

4. குண்டலினி சத்தியைப் பூரகப் பழக்கத்தினால் பூரணம் செய்து பிரகாசிக்கும் படிச் செய்தால் அப்பொழுது மகாமேருவுக்கு ஒப்பாகிய வலிமையுண்டாகும் என்பதனை,

'புகல்வுறு குண்டலிதன்னைப் பூரகத்தின் பரிசயத்தாற்
பூர்ணமாக்கித்
திகழ்வுற நின்றால் அன்று வடமேரு நிகரான திண்மை
யுண்டா' (கிகித்: 62: 1,2)

என உவமைப்படுத்தியதைக் காணலாம்.

5. மேலும், 'மாயன் கந்திருவர்நகரம் போன்' (காதி:4:2)
'புத்தன்போல' (உத்: 20 4, 21.1)
'கும்பமுனிகுரை கடலைக் குறைத்ததேபோற்'
(உத்: 42.2)
'அருச்சுனன் நாட்கழிப்பது போல நாட் கழிப்பாய்'
(அருச்: 5 1)
'மாவலிசிறையாய் மிகுபாதலத்திலிருப்பதுபோற்'
(கிகித்: 126 2)
'அருந்ததியை ஒப்பாள்' (லீலை: 21.3)
'அகலிகையுங் சுரவித்திரனும் இதற்கொப்பாம்'
(வஞ்ச: 2.4)

போன்ற பல புராணச் செய்திகளையும் ஆசிரியர் உவமைகளாகக் கையாண்டினர்,

### 5.5.1.5. தொடர் உவமை:

5.5.1.5.0. ஒரு பொருளின் பல உறுப்புகளை அல்லது ஒரு காட்சியின் பல நிலைகளைத் தொடர் உவமைகளாகப் பயன் படுத்துதல் கவிஞர்களின் மரபு. இந்த மரபு சிறந்த கவிஞர்களாலேயே பயன்படுத்த இயலும். ஆளவந்தார் இந்த உத்தியை நூலின் பல இடங்களில் மிகத் தெளிவாகக் கையாண்டுள்ளார்.

1. ஒரே பாடலில் ஐந்திற்கு மேற்பட்ட உவம உருபுகளைக் கொண்ட தொடர் உவமை அமைப்பையும் இவர் பாடல்களில் காண முடிகிறது. தொடர்புடைய பொருள்களைப் பயன்படுத்தி ஒரு காட்சியின் நிலையை இணைக்கும் உவமையமைப்பில் புராண உவமைகளும், வருணனை, கற்பனை உவமைகளும் காணப்படுகின்றன.

பிரம்மத்தின் தோற்றத்தை,

'மதியோடி ரவி கதிர்பாய மணிகளிற் சேரொளிகளைப் போன்
முதிருமரங்கள் கனியிலையை முதலாயின போலரு விகளிற்
பிதிருந்துளிகள் போற்சாலப் பிறங்கும் பிரமத்திடை தோன்றும்' (இட்சு: 28.1-3)

எனத் தொடர் உவமையினால் வருணித்துள்ளார்.

2. மழைக்கால மேகத்தைப் போலவும், நெய்யில்லாத தீபத்தைப் போலவும், கடலின் அலையைப் போலவும், எப்பொழுதும் கெடுக்கின்றதாயும், சூனியமாகவும் இருக்கின்ற வாழ்நாளின் (ஆயுள்) பயனை ஆராய்ந்தால் ஒட்டகத்தின் உயிரைப் பிரிக்கின்ற சூலைப்போல நீக்க முடியாத துன்பத்தைக் கொடுக்கும் (வைரா: 68) எனவாழ்நாளின் நிலையைத் தொடர் உவமையால் காட்டியுள்ளார்.

3 உத்தாலக முனி மன ஐக்கியமாக இருந்த நிலையின் காட்ட வந்த ஆசிரியர், அவன் 'சரற் காலத்து ஆகாயத்தில் வெளிப்படுகின்ற பூரண சந்திரனைப் போலவும், காற்றில்லாத தீபத்தைப் போலவும், சித்திரத்தின் வடிவத்தைப் போலவும், அலையில்லாத கடலைப்போலவும், நீரைச் சூலாகக் கொண்டு பொழியாதிருக்கின்ற மேகத்தைப் போலவும் ஆத்மாவில் நிலைத்

திருந்தான்' (உத்: 58) என்று தொடர்வுவமையால் வருணித்துள்ளார்.

4. சூடாலையின் அழகை, சிகித்துவரசன் வருணிப்பது போல அமைந்திருப்பதில் சூடாலையின் பெருமையும், ஆசிரியரின் தொடர் உவமை அமைப்பும் நன்கு விளங்குகிறது.

'பண்டையிள நலமீண்டு படைத்தனை போலலங்காரம்
பலபெற்றாய்போல்
அண்டரமுதுண்டனை போல் ஆர்க்கு முறவரிய
பதமடைவுற்றாய்போன்
மண்டுகின்றவாநந்த நிறைந்தனைபோற் பொலி
கினறாய் மாசிலாளே' (சிகித்: 19: 2-4)

5. ஆசிரியர் தொடர்வுவமையைப் பயன் படுத்தும் போது ஒரே உவம உருபைப் பயன்படுத்தாமல் பல உவம உருபுகளைப் பயன் படுத்தியுள்ளார். அதிகமான தொடர் உவமை அமைப்பில் நான்கு, ஐந்து உவமைகள் காணப்படுகின்றன.

### 5.5.2. உருவகம்:

5.5.2.0. உருவகம் பற்றி அதிகமாக ஆசிரியர் குறிப்பிடவில்லை கிடைத்த செய்தியை இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

5.5.2 0.1. உவமையும் பொருளுமாகத் தனித்து இயங்குவது உவமை. பொருள் உவமையோடு ஒன்றி விடுவது உருவகம். உவமையும் பொருளும் வேறுபாடு ஒழிவித்து ஒன்று என அறிவித்தால் அஃது உருவகம் ஆகும் என்பது தண்டியாசிரியர் (சூ:36) உணர்த்தும் கருத்தாகும். பொருள் இல்லாமலேயே உவமச் செய்திகள் உருவகங்கள் ஆகிவிடுதல் உண்டு. பயின்றுவரும் மரபால் வெறும் உவமைகளே உருவகங்களாக நின்று விடுகின்றன. உவமைகளை விட உருவகங்களே இலக்கியத்தில் ஆற்றல் மிக்கவை எனலாம்.

5.5.2 0.2. ஆக, ஆகிய, என்னும், எனப்படும் என்னும் இந்த நான்கு உருபுகளே உருவக உருபுகளாக வந்துள்ளன. இந்தவுருபுகளே ஒன்றுமற்றொகிறது என்னும் செய்தியைப் புலப்படுத்துகின்றது. எனவே பொருள் உவமையாகவே மாறும் பொழுது அது உருவமாகிவிடுகிறது[21].

5.5.2.0 3. கவிதை சிறக்கக் காரணமான உவமையின் வளர்ச்சியே உருவகம் எனலாம். கவிதை என்பதே சுருங்கிய முறையில் விளக்கம் தருவது. எனவே உவமையும் சுருங்கலாயிற்று அங்ஙனம் சுருங்கிய உவமையே பிறகு உருவகம் ஆயிற்று. ஒரு காலத்தில் தமிழ் இலக்கியத்தில் இந்த இரண்டிற்கும் பெரிய வேறுபாட்டைக் கண்டிலர். அதனாலேயே தொல்காப்பியர் உருவகம் எனத்தனியே ஒன்றையும் கூறவில்லை. இலக்கணமும் வரையறை செய்யவில்லை, என அ.ச. ஞானசம்பந்தன் தம்முடைய நூலில் குறிப்பிட்டுள்ளார்[22].

5.5.2.1. ஆளவந்தார் பல உருவகங்களைக் கையாண்டுள்ளார். அந்தவுருவங்கள் எல்லாம் உடலுறுப்பு வருணனையின் வெளிப்பாடுகளாக அமைந்துள்ளன. அவர் கீழ்க்கண்ட உருவகங்களைப் போலப் பலவற்றைப் பயன்படுத்தியுள்ளார்.

காட்டாக: 1. கரமலர் (பாலன்: 3.4)
2. முகமதி (தாரு:73.1, வஞ்ச:6.3.)
3. பிணக்குன்றால் (லீலை:53.3)

இந்த வகைப்பட்ட உருவங்கள் நூலுக்கு அணிசேர்ப்பனவாக அமைகின்றன எனலாம்.

## 5.5.3. உவமத்தொகை:

5.5.3.1. போல, புரைய முதலிய உவம உருபுகள் வெளிப்படையாகக் காணப்பட்டால் அவை உவம விரியாகும். இந்த உருபுகள் தொக்கி வரும்போது உவமத் தொகையாகும்.

5.5 3.1. உவமத்தொகை நிலையை ஞானவாசிட்ட ஆசிரியர் பயன்படுத்தியுள்ளமையை நூல் முழுக்கக் காணலாம்.

காட்டாக: 1. மதிநுதலாய் (லீலை: 26.3)
2. செருவுயர் சிங்கமாதீ (வைரா: 50.2)
3. கமலப்பதத்துதிக்கோ (நிரு: 67.2)
4. திங்கள் வெண்கவிகை மன்னன் (பகீர: 4.4)
5. நளின விதயத்து (உத்:26.4)

### 5.5.4. யாப்பு:

5.2.4 0. கவிதைக்கு இன்றியமையாதது யாப்பு. உரை நடையினின்று கவிதையை வேறுபடுத்தும் பணியை ஆற்றுவ தோடன்றிப் பாடலில் அமைந்த உணர்வுக் கேற்ற முறையில் பொருந்திச் சிறந்த ஒலிநயம் முதலியவற்றால் வாசகரைக் கவிதையிடம் ஈர்த்துக் கவிதையின் உயிர் நாடியாக விளங்குவது யாப்பு எனலாம். காப்பியப் பொருள் அமைப்புக்கும் அதன் புலப்பாடான வெளியீட்டிற்கும் வடிவம் அளிப்பது யாப்பு[23].

5.5.4 0.1. ஆளவந்தார் இரண்டாயிரத்து ஐம்பத்தைந்து. பாக்களால் நூலினை அமைத்து, அவற்றில் சொற்பொருள் பின்வருநிலையணி, சொற்பின் வருநிலையணி, எதுகை, மோனை, இயைபு போன்ற இலக்கண வரம்புடைய பாடல்களைக் கையாண்டுள்ளார். இந்தச் சான்றுகள் ஆசிரியரைப் பாநயம் மிக்கவர் எனக் காட்டுகின்றன.

### 5.5.4.1. பின்வரு நிலையணி:

5.5.4.1.0. ஒரு பாடலுள் முன்னர் வந்த சொல்லாவது பொரு ளாவது பின்னர் பல விடத்தும் வருமாயின் அது பின் வரு நிலை யென்னும் அணியாகும். இதனைச் சொல் பின் வரு நிலையணி, பொருள் பின் வரு நிலையணி சொற் பொருள் பின் வரு நிலையணி என மூன்று வகையாகப் பிரிப்பர்[24]. இவற்றுள் ஆளவந்தார் சொல் பின் வரு நிலையணியையும், சொல் பொருள் பின்வரு நிலையணி யையும் கையாண்டுள்ளார்.

### 5.5.4.1.1. சொல் பொருள் பின்வரு நிலையணி:

ஒரு பாடலுள் ஒரு சொல் பல இடத்து வந்தும் அது ஒரே பொருளைக் கொடுக்குமானால் அதைச் சொல் பொருள் பின் வருநிலையணி என்பர்.

காட்டாக:

'சங்கமடையாப் பொருளுண்டாஞ் சங்கமடையா
ஆபத்தாஞ்
சங்கமடையா ஆசைவருஞ் சங்கமடையாப் பிறப்
புண்டாஞ்

